# சேக்கிழார்
# தமிழ்ப்பரிசுத் தொகுதி



பதிப்பாசிரியர் :

அண்ணாமலைப் பல்கலைக் கழக

முதன்மைத் தமிழ்விரிவுரையாளர்

டாக்டர் அ. சிதம்பரநாதச் செட்டியார் எம். ஏ.




அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தால்

வெளியிடப்படுவது.

1943—44

# முகவுரை

---

திருப்பனந்தாள் மடத்துத் தலைவர் "காசி வாசி" சுவாமிநாதத் தம்பிரான் அவர்கள் தமிழ் நூல்களிலும் சைவ நூல்களிலும் மக்கள் சிறந்த புலமை எய்த வேண்டு மென்னும் நோக்கத்தோடு சென்னைப் பல்கலைக் கழகத்திலும் அண்ணுமலைப் பல்கலைக் கழகத்திலும் பரிசுகள் வழங்குதற்குரிய பெரும்பொருள் அளித்துள்ளது தமிழ் நாடு முழுதும் அறிந்து பாராட்டும் செய்தியாகும். அவர்களால் அமைக்கப்பட்ட பல பரிசுத் திட்டங்களில் "சேக்கிழார் நாயனர் நினைவுத் தமிழ்ப் பரிசு" என்பது ஒன்று. இதற்கென மூவாயிரத் தைந்நூறு ரூபாய் அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தாரிடம் சேமித்துக் கொடுத்திருக்கிருர்கள். இப்பொருளுக்குப் பெறலாகும் வட்டியி லிருந்து ஆண்டுதோறும் நூறு ரூபாய் பரிசாக வழங்குதல் வேண்டு மென்பது அவர்கள் விருப்பம்.

இப்பரிசிற்குரிய தேர்விற் கலந்துகொள்ள விரும்புவோர், சென்னைப் பல்கலைக் கழகத்திலாயினும் அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தி லாயினும் முன்னதாகவே தனித் தமிழ் வித்துவான் (புலவர்) முதற் பகுதித் (Preliminary) தேர்வில் தேர்ச்சி யடைந்தவராய் இருக்க வேண்டும்; பிற பல்கலைக் கழகங்களிலிருந்து வருவோராயின் மேற் கண்ட தேர்வினை ஒத்த தகுதியுடைய தேர்வில் வெற்றிபெற்றவராய் இருத்தல்வேண்டும்; அன்றி மதுரைத் தமிழ்ச் சங்கத்தாரால் நடத்தப்பெறும் பால பண்டிதத் தேர்வில் தேர்ச்சியுற்ரேராய் இருத் தல் வேண்டும். எனவே, இவர்பொருட்டே இத்தொகுதி வெளி யிடப் பெறுகிறது என்பது அறியப்படும்.

சேக்கிழார் நாயனர் நினைவுத் தமிழ்ப் பரிசுக்குரிய தேர்வு ஆண்டு தோறும் நிகழும். அதில், நூற்றுக்கு 60 மதிப்பெண்ணுக்குக் குறையாமற் பெற்று முதலிடத்திற்குரிய ராவாரே இப்பரிசுக்குரிய ராவர். இப்பரிசிற்கென்று 750 செய்யுட்கள் தேர்ந்தெடுக்கப்பட் டிருக்கின்றன. பரிசுத் திட்டத்தின்படி, பெரியபுராணத்திலிருந்து 250 செய்யுட்களும், பிற புத்தகங்களிலிருந்து 500 செய்யுட்களும் தேர்ந்தெடுக்கப்பட்டுள. பெரியபுராணம், திருவிளையாடற் புராணம், கந்தபுராணம் ஆகியவற்றிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கும்

செய்யுட்களுக்கு இடத்தொடு பொருந்துமாறு சிறப்பாக விளக்கவுரை மாணவரிடமிருந்து எதிர்பார்க்கப்படுவதால், அம் மூன்று நூல்களிலிருந்தும் சேர்க்கப்பட்ட பாக்கள் இத்தொகுதியின் கண்ணே முதலில் வைக்கப்பட்டுள. பிறநூற் பகுதிகள் திட்டத்தின் வரிசையை யொட்டியே வெளியிடப்படுகின்றன.

பரிசுத் தேர்விற் கலந்துகொள்ள விரும்புவோர் இத்தொகுதியிற் காணும் பாக்கள் எல்லாவற்றிற்கும் பொழிப்புரையும் பொருளும் அறிந்துகொள்ளும் கடப்பாடுடையர். மேலும், 750 செய்யுட்களை யும் மனப்பாடம் செய்தவராயிருத்தல் வேண்டும். அவர்கள் மனப் பாடம் செய்ய உதவும் பொருட்டும் இன்றியமையாக் குறிப்புக்கள் சிலவற்றை அறிந்துகொள்ளும் பொருட்டும் இத்தொகுதி பல்கலைக் கழகத்தாரால் வெளியிடப்படுகிறது. இதனைப் பயன்படுத்திக்கொண்டு பலர் பரிசுத் தேர்விற் கலந்துகொள்வாராக!

4—5—42 பதிப்பாசிரியர்



# THE
# SEKKILAR NAYANAR MEMORIAL TAMIL PRIZE

BY HIS HOLINESS SRILASRI KASIVASI SVAMINATHA THAMBIRAN SWAMIGAL AVARGAL OF TIRUPPANANDAL

1. This endowment was founded by His Holiness Srilasri Kasivasi Svaminatha Thambiran Swamigal Avargal of Tiruppanandal to encourage the study of *Periyapuranam* and 27 other selected books in Tamil Literature.

2. The Endowment for the Prize consists of 3% Government Promissory Notes of 1949–52 (Defence War Loan) of the face value of Rs. 3,500/- (Rupees Three Thousand and five hundred only). The interest on this investment shall be utilised for the award of a prize annually of the value of Rs. 100/. The balance of the interest after the award of the prize will be added to the corpus of the fund. When the above pro-notes mature, the proceeds shall be invested in other Government Securities yielding a higher total income for the Endowment.

3. The following are the terms of award of the prize :—

(i) The prize shall be awarded irrespective of sex, caste, religion and nationality.

(ii) To be eligible for the award, the following shall be the conditions :—

(*a*) A pass in the Preliminary Examination of the Vidvan course, Tamil alone, of the Annamalai or the Madras University or any other examination (of any University which has already been or may be established hereafter) which may be considered equivalent to the Preliminary Vidvan Examination of the two Universities above named, or the Bala Pandita Examination of the Madura Tamil Sangam, as a condition precedent to appearance for the test.

(*b*) First rank at the first appearance with not less than 60% of the marks in a competitive test to be conducted annually for the purpose by the Annamalai University. A selection of 750 stanzas in all, 250 of which will be from *Periyapuranam*, and the remaining 500 from the other 27 books in the list appended hereto, will be made once in every 4 years by the Annamalai University—the selections for one period of four years being different from those for the next period or periods of four years. At the competition (i) the first part will

consist of a memory test of selections made by the examiners out of the 750 stanzas. In this oral memory test, special credit will be awarded for singing the verses in correct music; for this singing the marks will be 10. (ii) The second part will consist of a test of the meaning and the purport of the 750 stanzas above referred to, wherein a knowledge of the meaning of words, paraphrase, purport of the verses and the special extant notes would be tested. (iii) The third part of the competition will consist of giving explanations with reference to the context to portions of the whole of *Periyapuranam*, *Tiruvilaiyadalpuranam* and *Kandapuranam* chosen by the examiners.

(iii) If two or more competitors should be considered equally eligible for the award, lots shall be cast to decide who will have the prize or prizes of the year.

4. The prize shall be awarded at a meeting of the Syndicate of the Annamalai University. If in any year the prize-winner is unable to be present to receive the prize, the Syndicate shall arrange to send him the prize amount. If the prize-winner dies before the prize is presented to him, the prize amount shall be paid to his legal heir or heirs.

5. The Prize amount shall be paid either in cash or by cheque and shall not under any circumstances be either divided or reduced.

6. If in any year, or a series of years, the prize be not awarded, from out of the annual interest of the Endowment, Rs. 50/- in each year of no award shall be set apart. The entire amount so set apart, shall be awarded in the subsequent year to the candidate eligible for the award along with the prize amount of that year. After setting apart Rs. 50/- as above, the balance of annual interest shall be added to the corpus of the fund at the end of each year.

7. If in the process of investments the face value of the paper increases and an addition to income results either by addition of unspent amount under clause (6) above, or by reinvestments, such additional income may, at the discretion of the Syndicate of the Annamalai University, be utilized to institute second and third prizes and, thereafter, to increase the value of each one of the three prizes.

8. The Syndicate shall at the end of each year communicate to the Donor or to his successors-in-interest the name and address of the prize-winner and the amount of the prize and if in any year the prize be not awarded, the amount at credit at the end of the year and shall also publish the same in an important Tamil Daily Newspaper. This Deed shall be published along with the deeds relating to the Rs. 1000/-

Tamil Prize Endowment perpetuating the memory of King George V in the Madras University and the Raja Raja Abhaya Kulasekhara Chola Maharaja Memorial Endowment and the Tiruvalluvar Neethi Nul Prize Endowment in the Annamalai University made by the same Donor in every one of the editions of the publications made under the 2nd Endowment mentioned above.

9. The income from the Endowment and the accumulations thereto shall not be diverted to any other purpose.

| தொடர் நம்பர் | நூல்களின் பெயர்கள் | நூலாசிரியர்களின் பெயர்கள் |
|---|---|---|
| 1 | விநாயக புராணம் | கச்சியப்ப சுவாமிகள் |
| 2 | திருப்பரங்கிரிப் புராணம் | நிரம்ப அழகிய தேசிகர் |
| 3 | திருக்கூவப் புராணம் | சிவப்பிரகாச சுவாமிகள் |
| 4 | மாயூரப் புராணம் | மீனாட்சிசுந்தரம் பிள்ளை |
| 5 | திருநாகைக்காரோணப் புராணம் | மீனாட்சிசுந்தரம் பிள்ளை |
| 6 | திருக்கழுக்குன்றத் தல புராணம் | அந்தகக்கவி வீரராகவ முதலியார் |
| 7 | திருவிடைமருதூர்த் தல புராணம் | சிவக்கொழுந்து தேசிகர் |
| 8 | காசி ரகசியம் | மீனாட்சிசுந்தரம் பிள்ளை |
| 9 | பேரூர்ப் புராணம் | கச்சியப்ப சுவாமிகள் |
| 10 | சேது புராணம் | நிரம்ப அழகிய தேசிகர் |
| 11 | திருக்குற்றாலத் தல புராணம் | திரிகூடராசப்ப கவிராயர் |
| 12 | கோயிற் புராணம் | உமாபதி சிவாசாரியார் |
| 13 | இலிங்க புராணம் | குலசேகர பாண்டியர் |
| 14 | சிவதருமோத்தரம் | மறைஞான சம்பந்தர் |
| 15 | காசி காண்டம் | அதிவீர ராம பாண்டியர் |
| 16 | மச்ச புராணம் | வடமலையப்ப பிள்ளையன் |
| 17 | கூர்ம புராணம் | அதிவீர ராம பாண்டியர் |
| 18 | பிரமோத்தர காண்டம் | வரதுங்க ராம பாண்டியர் |
| 19 | சூதசங்கிதை | தேவராச பிள்ளை |
| 20 | வாயு சங்கிதை | வரதுங்க ராம பாண்டியர் |
| 21 | காஞ்சிப் புராணம் | சிவஞான சுவாமிகள், கச்சியப்ப சுவாமிகள் |
| 22 | திருவானைக்காப் புராணம் | கச்சியப்ப சுவாமிகள் |
| 23 | தணிகைப் புராணம் | கச்சியப்ப சுவாமிகள் |
| 24 | கந்த புராணச் சுருக்கம் | சம்பந்தசரணாலயர் |
| 25 | கந்த புராணம் | கச்சியப்ப சிவாசாரிய சுவாமிகள் |
| 26 | உபதேச காண்டம் | கோனேரியப்பர் |
| 27 | திருவிளையாடற் புராணம் | பரஞ்சோதி முனிவர் |
| 28 | பெரிய புராணம் | சேக்கிழார் நாயனார் |

## சேக்கிழார் பெருமான்

இயற்றிய

# பெரிய புராணம்

பாயிரம்

1. உலகெ லாமுணர்ந் தோதற் கரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்
மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம். 1

திருநாட்டுச் சிறப்பு

2. செங்குவளை பறித்தணிவார் கருங்குழல்மேற் சிறைவண்டை
அங்கைமலர் களைக்கொடுகைத் தயல்வண்டும் வரவழைப்பார்
திங்கணுதல் வெயர்வரும்பச் சிறுமுறுவல் தளவரும்பப்
பொங்குமலர்க் கமலத்தின் புதுமதுவாய் மடுத்தயர்வார். 14

3. கரும்பல்ல நெல்லென்னக் கமுகல்ல கரும்பென்னச்
சுரும்பல்லி குடைநீலத் துகளல்ல பகலெல்லாம்
அரும்பல்ல நகிலென்ன அமுதல்ல மொழியென்ன
வரும்பல்லா மிரங்கடைசி மடந்தையர்கள் வயலெல்லாம். 15

---

1. நீர் = கங்கை.
2. கைத்து = தூரத்தி.
3. சோழ வளநாட்டுக் கடைசியர்களைப்பற்றிய வருணனை.

4. சாலிநீள் வயலின் ஓங்கித் தந்நிகர் இன்றி மிக்கு
வாலிதாம் வெண்மை உண்மைக் கருவினும் வளத்த வாகிச்
சூல்முதிர் பசலை கொண்டு சுருள்விரித் தானுக் கன்பர்
ஆலின சிந்தை போல அலர்ந்தன கதிர்க ளெல்லாம். 21

5. பத்தியின் பால ராகிப் பரமனுக் காளாம் அன்பர்
தத்தமில் கூடி னார்கள் தலையினால் வணங்கு மாபோல்
மொய்த்தநீள் பத்தி யின்பால் முதிர்தலை வணங்கி மற்றை
வித்தகர் தன்மை போல விளைந்தன சாலி யெல்லாம். 22

திரு நகரச் சிறப்பு

6. மாநிலங்கா வலனுவான் மன்னுயிர்காக் குங்காலைத்
தானதனுக் கிடையூறு தன்னால்தன் பரிசனத்தால்
ஊனமிகு பகைத்திறத்தால் கள்வரால் உயிர்தம்மால்
ஆனபயம் ஐந்துந்தீர்த் தறங்காப்பான் அல்லனோ. 36

7. ஒருமைந்தன் தன்குலத்துக் குள்ளான்என் பதும்உணரான்
தருமந்தன் வழிச்செல்கை கடனென்று தன்மைந்தன்
மருமந்தன் தேராழி உறஊர்ந்தான் மனுவேந்தன்
அருமந்த அரசாட்சி அரிதோமற் றெளிதோதான். 44

---

4. சாலி = நெற்பயிர்.

5. பாலராகி = தன்மையராகி, வயத்தராகி.

6. அதனுக்கு = அம்மன்னுயிர்க்கு.

7. மனுநீதிச் சோழன் ஆவுற்ற துயர்கண்டு பிழையிழைத்த தன் மகனைத் தேர்க் காலில் ஊர்க எனப் பணித்தும், அமைச்சன் அங்ஙனஞ் செய்யாதொழியத் தானே தன் மகனைத் தேருருளையில் உறும்படி ஊர்ந்த திறஞ் சொல்லுவது இப்பாட்டு.
மருமம் = மார்பு.

திருக் கூட்டச் சிறப்பு

8. மாசி லாத மணிதிகழ் மேனிமேல்
பூசு நீறுபோல் உள்ளும் புனிதர்கள்
தேசி னால்எத் திசையும் விளக்கினார்
பேச ஒண்ணாப் பெருமை பிறங்கினார். 6

9. கேடும் ஆக்கமுங் கெட்ட திருவினார்
ஓடுஞ் செம்பொனும் ஒக்கவே நோக்குவார்
கூடும் அன்பினில் கும்பிட லேயன்றி
வீடும் வேண்டா விறலின் விளங்கினார். 8

10. ஆரங் கண்டிகை ஆடையுங் கந்தையே
பாரம் ஈசன் பணிஅல தொன்றிலார்
ஈர அன்பினர் யாதுங் குறைவிலார்
வீரம் என்னால் விளம்புந் தகையதோ. 9

---

8. திருவாரூர்த் "தேவாசிரியன்" என்னும் மண்டபத்தில் வீற்றிருந்த அடியாரை இது முதல் மூன்று பாட்டுக்கள் சிறப்பித்துக் கூறுகின்றன.
மணி = உருத்திராக்கமணி.

9. கேடு = வறுமை. திருவினார் = அருட்செல்வமுடையவர்.

10. கண்டிகை = உருத்திராக்க மாலை.

11. பித்தனும் ஆகப் பின்னும் பேயனும் ஆக நீயின்
றெத்தனை தீங்கு சொன்னால் யாதும்மற் றவற்றால் நாணேன்
அத்தனைக் கென்னை ஒன்றும் அறிந்திலை யாகில் நின்று
வித்தகம் பேச வேண்டாம் பணிசெய வேண்டும் என்றான். 14

12. அருமறை நாவல் ஆதி சைவன்ஆ ரூரன் செய்கை
பெருமுனி வெண்ணெய் நல்லூர்ப் பித்தனுக் கியானும் என்பால்
வருமுறை மரபு ளோரும் வழித்தொண்டு செய்தற் கோலை
இருமையால் எழுதி நேர்ந்தேன் இதற்கிவை என்எ ழுத்து. 59

---

11. திருநாவலூரர் சடங்கவியார் என்னும் மறையோரின் மகளை மணம்புரியக் காவணத்திற் புக்க ஞான்று, சிவபெருமான் வேதிய உருவெடுத்து வந்து வழக்கு முடித்து மணம் புரிக என்ன, “ அந்தணர் வேறோர் அந்தணர்க்கு அடிமையாதல் இல்லை, பித்தனோ இம்மறையோன் ” என்று சொல்ல, அவ்வேளையில் வந்த வேதியர் கூறும் பாட்டு இது.
சொன்னால் — சொன்னாய் என்றும் பாடம்.
வித்தகம் = விளையாட்டுச் சொல்.

12. திருவெண்ணெய்நல்லூர் நான்மறையோர் அவையில், வேதியர் நாவலூரரின் பாட்டனார் எழுதித் தந்திருந்தாற்போலப் படித்துக்காட்டிய படி.

13. முன்புநீ நமக்குத் தொண்டன் முன்னிய வேட்கை கூரப்
பின்புநம் ஏவ லாலே பிறந்தனை மண்ணின் மீது
துன்புறு வாழ்க்கை நின்னைத் தொடர்வறத் தொடர்ந்து வந்து
நன்புல மறையோர் முன்னர் நாம்தடுத் தாண்டோம் என்றார். 67

14. மற்றுநீ வன்மை பேசி வன்தொண்டன் என்னும் நாமம்
பெற்றனை நமக்கும் அன்பில் பெருகிய சிறப்பில் மிக்க
அர்ச்சனை பாட்டே ஆகும் ஆதலால் மண்மேல் நம்மைச்
சொற்றமிழ் பாடு கென்றார் தூமறை பாடும் வாயார். 70

15. வேதியன் ஆகி என்னை வழக்கினால் வெல்ல வந்த
ஊதியம் அறியா தேனுக் குணர்வுதந் துய்யக் கொண்ட
கோதிலா அமுதே இன்றுன் குணப்பெருங் கடலை நாயேன்
யாதினை அறிந்தென் சொல்லிப் பாடுகேன் எனமொ ழிந்தார். 72

---

13. வழக்குரைக்க வந்த வேதியர் வெண்ணெய் நல்லூர்க் கோயிலுட்புகுந்து மறைந்தாராக, நாவலூராரும் ஆண்டுப் புக்கு அழைக்கச் சிவபெருமான் விடைமீதேறி உணர்த்தியது.

கைலாயத்தே ஆலால சுந்தரராய் இருந்தவர் பூஞ்சோலையில் கமலினி அனிந்திதை என்ற சேடியரைக் கண்டு காதலித்ததால் மண்மேல் வந்து விளையாட நேர்ந்தது. அவ்விரு சேடியரும் பரவையார் சங்கிலியார் எனத் தோன்றியுள்ளாராதலின், அவரையன்றிச் சடங்கவியார் மகளை மணப்பது தகாதெனச் சிவபெருமான் தடுத்தாண்டமை இங்கே குறிப்பிடப் படுகிறது.

16. வையகம் பொலிய மறைச்சிலம் பார்ப்ப மன்றுளேமாலயன்
தேட
ஐயர்தாம் வெளியே ஆடுகின் ருரை அஞ்சலி மலர்த்திமுன்
குவித்த
கைகளோ திளைத்த கண்களோ அந்தக் கரணமோ
கலந்தஅன் புந்தச்
செய்தவப் பெரியோன் சென்றுதாழ்ந் தெழுந்தான்
திருக்களிற் றுப்படி மருங்கு. 105

17. ஐந்துபே ரறிவுங் கண்களே கொள்ள அளப்பருங்
கரணங்கள் நான்கும்
சிந்தையே ஆகக் குணமொரு மூன்றுந் திருந்துசாத்
துவிகமே ஆக
இந்துவாழ் சடையான் ஆடுமா னந்த எல்லையில்
தனிப்பெருங் கூத்தின்
வந்தபே ரின்ப வெள்ளத்துள் திளைத்து மாறிலா மகிழ்ச்சியில்
மலர்ந்தார். 106

18. கற்பகத்தின் பூங்கொம்போ காமன்தன் பெருவாழ்வோ
பொற்புடைய புண்ணியத்தின் புண்ணியமோ புயல்சுமந்து
விற்குவளை பவளமலர் மதிபூத்த விரைக்கொடியோ
அற்புதமோ சிவனருளோ அறியேன்என் றதிசயித்தார். 140

---

16. தடுத்தாட் கொள்ளப்பட்ட பிறகு, திருநாவலூரர் நாவலூர், திருத்துறையூர், திருவதிகை முதலான ஊர்களுக்குச் சென்று தில்லையம்பதியைச் சேர்ந்து கோயிலுட் புக்கு வணங்கிய செய்தியை இப்பாட்டும் வருகின்ற பாட்டுங் கூறுகின்றன.

17. மெய்வாய் கண்மூக்குச் செவியாகியவற்றால் அறியும் ஐந்தறிவையும் கண்ணொன்றே காட்சியளவாய்க் கொள்ளவும், மனம் சித்தம் புத்தி அகங்காரம் என்னும் நான்கு கரணங்களும் சிந்தை யொன்றேயாய் நிற்கவும், இராசதம் தாமதம் சாத்துவிகம் என்னும் முக்குணங்களும் சாத்துவிகமாகவே இருப்பவும், பிறை முடியுடையான் ஆடுங்கூத்தின்பத்தினுள் நாவலூரர் திளைத்தமை சொல்லப்படுகிறது.

18. திருவாரூர்க் கோயிலில், நாவலூரர் பரவையாரைக் கண்டதும் ஐயமுற்றுக் கூறிய பாட்டு.

19. ஓவியநான் முகன்எழுத ஒண்ணுமை உள்ளத்தால்
மேவியதன் வருத்தமுற விதித்ததொரு மணிவிளக்கோ
மூவுலகின் பயனுகி முன்நின்ற தெனநினைந்து
நாவலர்கா வலர்நின்ருர் நடுநின்ருர் படைமதனுர். 141

20. முன்னேவந் தெதிர்தோன்றும் முருகனே பெருகொளியால்
தன்னேரில் மாரனே தார்மார்பின் விஞ்சையனே
மின்னேர்செஞ் சடையண்ணல் மெய்யருள்பெற் றுடைய
வனே
என்னேஎன் மனந்திரித்த இவன்யாரோ எனநினைந்தார். 144

21. பேர்பரவை பெண்மையினில் பெரும்பரவை விரும்பல்குல்
ஆர்பரவை அணிதிகழும் மணிமுறுவல் அரும்பரவை
சீர்பரவை ஆயினுள் திருவுருவின் மென்சாயல்
ஏர்பரவை இடைப்பட்ட என்ஆசை எழுபரவை. 148

---

19 இதுவும் அது.

20. பரவையார் ஐயப்பட்டுக் கூறியது.

21. தன் மனங் கொண்ட இளங்கொடி பரவை யென்பாள் என அறிந்தவுடன் நாவலூரர் நவின்றது.

பெரிய உம்பர் அவையாரால் விரும்பப்படும் அல்குலினையுடையார் பரவுகின்ற தலைவி.

அரும்பர் = அரும்புகள்

சீர்பரவை ஆயினுள் = சிறந்த பரவை என்னுங் கூத்தினையுடைய திருமகளை யொத்தவளது

பரவை = பரப்பு

எழு பரவை = ஏழ் கடல்களாம்.

22. பந்தம் விடு தரும்பர மன்கழல்
சிந்தை ஆரவும் உன்னும்என் சிந்தையில்
வந்து மால்செய்து மான்என வேவிழித்
தெந்தை யார்அருள் எந்நெறிச் சென்றதே. 154

23. பிறந்த தெங்கள் பிரான்மல யத்திடைச்
சிறந்த ணைந்தது தெய்வநீர் நாட்டினில்
புறம்ப ணைத்தடம் பொங்கழல் வீசிட
மறம்ப யின்றதெங் கோதமிழ் மாருதம். 167

24. தேருங் கொடியும் மிடையும் மருகில்
திருவா ரூரீர் நீரே அல்லால்
ஆரென் துயரம் அறிவார் அடிகேள்
அடியேன் அயரும் படியோ இதுதான்
நீரும் பிறையும் பொறிவாள் அரவின்
நிரையும் நிரைவெண் டலையின் புடையே
ஊரும் சடையீர் விடைமேல் வருவீர்
உமதன் பிலர்போல் யானோ வுறுவேன். 177

---

22. காணப்பட்ட பரவையார் மறைந்தமைக்காக வருந்தி ஆரூரர் கூறியது.

23. அவர் தென்றல் கண்டு இரங்கியது.

24. பரவையார் ஆரூரரைப் பெற நினைத்துக் கடவுளை வேண்டியது.

25. ஞாலம் உய்ய நடம்மன்றுள் ஆடின
கால ஞுருயிர் மாளக் கறுத்தன
மாலை தாழ்குழல் மாமலை யாள்செங்கை
சீல மாக வருடச் சிவந்தன. 192

26. நீதி மாதவர் நெஞ்சில் பொலிந்தன
வேதி யாதவர் தம்மைவே திப்பன
சோதி யாய்எழுஞ் சோதியுட் சோதிய
ஆதி மாலயன் காணு அளவின. 193

27. வேத ஆரணம் மேற்கொண் டிருந்தன
பேதை யேன்செய் பிழைபொறுத் தாண்டன
ஏத மானவை தீர்க்க இசைந்தன
பூத நாதநின் புண்டரீ கப்பதம். 194

திருநீலகண்ட நாயனுர் புராணம்

28. ஆதியார் நீல கண்டத் தளவுதாம் கொண்ட ஆர்வம்
பேதியா ஆணை கேட்ட பெரியவர் பெயர்ந்து நீங்கி
ஏதிலார் போல நோக்கி எம்மைஎன் றதனுல் மற்றை
மாதரார் தமையும் என்தன் மனத்தினும் தீண்டேன் என்
ருர். 7

25. பரவையாரை மணந்து இன்புற்ற பின், தேவாசிரிய மண்டபத்துட் புக்கு ஆரூரர் இறைவனடியை வணங்கினுர் என்று கூறுங்கால், சேக்கிழார் பெருமான் இறைவனடிகளை வருணிக்க ஒரு வாய்ப்புக் கண்டு இங்ஙனம் கூறுகிறுர். வருகின்ற இரண்டு பாட்டும் அவர் வாக்கே.

26. பொலிந்தன = பொலிவன என்றும் பாடம்.

27. ஆரணம் = ஞானபாகமாகிய உபநிடதங்கள்

28. திருநீலகண்டர் பரத்தை யொருத்திபால் அணைந்து வீடு நண்ண, அவர் மனைவியார் “ தீண்டுவீராயின் எம்மைத் திருநீலகண்டம் ” என்று ஆணையிட, மாதரார் எவரையுந் தீண்டேன் என நாயனுர் முடிவு செய்துகொண்டமை கூறுகிறது.

29. தன்னைப் பரியது தலத்துத் தன்னுழைத்
துன்னிய யாவையுந் தூய்மை செய்வது
பொன்னினும் மணியினும் போற்ற வேண்டுவ
தின்னதன் மையதிது வாங்கு நீயென, 16

இயற்பகை நாயனார் புராணம்

30. இன்று நீரெனக் கருள்செய்த திதுவேல் என்உ யிர்க்கொரு
நாதநீ ருரைத்த
தொன்றை நான்செயும் அத்தனை யல்லால் உரிமை வேறுள
தோஎனக் கென்று
தந்த னிப்பெருங் கணவரை வணங்கத் தாழ்ந்து தொண்ட
னார் தாமெதிர் வணங்கச்
சென்று மாதவன் சேவடி பணிந்து திகைத்து நின்றனள்
திருவினும் பெரியாள். 9

31. ஏடநீ என்செய் தாயால் இத்திறம் இயம்பு கின்றாய்
நாடுறு பழியும் ஒன்னார் நகையையும் நாணாய் இன்று
பாடவம் உரைப்ப துன்றன் மனைவியைப் பனவற் கீந்தோ
கூடவே மடிவ தன்றிக் கொடுக்கயாம் ஒட்டோம் என்றார். 18

32. இயற்பகை முனிவா ஓலம் ஈண்டநீ வருவாய் ஓலம்
அயர்ப்பிலா தானே ஓலம் அன்பனே ஓலம் ஓலம்
செயற்கருஞ் செய்கை செய்த தீரனே ஓலம் என்றான்
மயக்கறு மறைஓ லிட்டு மாலயன் தேட நின்றான். 29

---

29. அருட்சிவயோகியாகி வந்த கடவுளர் தாம் கையில் வைத்திருந்த ஓட்டின் பெருமையைக் கூறியது.

30. இயற்பகையார் மனைவியைத் தவமுனிவர்க்குக் கொடுத்ததாக உரைத்தவுடன் மனைவியார் அவரைநோக்கிக் கூறியதும் அடியாரை வணங்கியதுங் கூறுகிறது.

31. இயற்பகையாரின் சுற்றத்தார் தடைப்படுத்தி எதிர்வந்தக்கால், "நீர் ஓடிப் போய்ப் பிழையும்" என இயற்பகையார் மொழிய, அவர்கள் விடையாகக் கூறியது.
பாடவம் = விரகு.

32. இயற்பகை முனிவர் பனவனுடன் போந்து வழியனுப்பிவிட்டு மீண்டக்கால், "பொய்தரும் உள்ளமில்லான், போயினன்" என நினைத்து வேதியன் அவரை ஓலமிட்டழைத்தது.

33. சொல்லுவ தறியேன் வாழி தோற்றிய தோற்றம் போற்றி
வல்லவந் தருளி என்னை வழித்தொண்டு கொண்டாய் போற்றி
எல்லையில் இன்ப வெள்ளம் எனக்கருள் செய்தாய் போற்றி
தில்லையம் பலத்து ளாடும் சேவடி போற்றி என்ன. 32

### இளையான்குடி மாறநாயனார் புராணம்

34. அன்பனே அன்பர் பூசை அளித்தநீ அணங்கி னோடும்
என்பெரும் உலகை எய்தி இருநிதிக் கிழவன் தானே
முன்பெரு நிதியம் ஏந்தி மொழிவழி ஏவல் கேட்ப
இன்பமார்ந் திருக்க என்றே அருள்செய்தான் எவர்க்கும்
மிக்கான். 26

### மேய்ப்போருள் நாயனார் புராணம்

35. கைத்தலத் திருந்த வஞ்சக் கவளிகை மடிமேல் வைத்துப்
புத்தகம் அவிழ்ப்பான் போன்று புரிந்தவர் வணங்கும்
போதில்
பத்திரம் வாங்கித் தான்முன் நினைந்தஅப் பரிசே செய்ய
மெய்த்தவ வேட மேமெய்ப் பொருள்எனத் தொழுது
வென்றார். 15

---

33. இயற்பகையார் சிவபெருமானை உமையொடும் விடைமேற் கண்டக்காற் கூறியது.

34. இன்னலுற்ற காலத்திலும் இன்மை மிக்க காலத்திலும் வந்த அடியார்க்கு உண்டியினை அரும்பாடுபட்டுத் தேடி அளித்த நாயனாரைச் சிறப்பித்துச் சிவபெருமான் இடப வாகனராய்க் கூறியது.

இருநிதிக்கிழவன் = குபேரன்.

35. வஞ்சமனத்தொடு புக்க முத்திநாதன் செயலையும் மெய்ப்பொருணாயனார் திறத்தையுங் கூறுவது.

கவளிகை = திரைச்சீலை ; பை.

பத்திரம் வாங்கி = உடைவாளை எடுத்து.

முன் நினைந்த அப்பரிசே செய்ய என்றதன்கண் உள்ள நயம் பாராட்டற் பாலது.

36. சென்றடி வணங்கி நின்று செய்தவ வேடங்கொண்டு
வென்றவற் கிடையூ றின்றி விட்டனன் என்று கூற
இன்றெனக் கையன் செய்த தியார்செய்ய வல்லார் என்று
நின்றவன் தன்னை நோக்கி நிறைபெருங் கருணை கூர்ந்தார். 21

### விறன்மிண்ட நாயனார் புராணம்

37. வாரி சொரியுங் கதிர்முத்தும் வயல்மென் கரும்பில் படுமுத்தும்
வேரல் விளையுங் குளிர்முத்தும் வேழ மருப்பின் ஒளிர்முத்தும்
மூரல் முறுவல் வெண்முத்த நகையார் தெரிந்து முறைகோக்கும்
சேரர் திருநாட் டூர்களின்முன் சிறந்த மூதூர் செங்குன்றூர். 2

### அமர்நீதி நாயனார் புராணம்

38. நல்ல கோவணம் கொடுப்பன்என் றுலகின்மேல் நாளும்
சொல்லு விரித்ததென் கோவணம் கொள்வது துணிந்தோ
ஒல்லை ஈங்குறு வாணிபம் அழகிதே உமக்குஎன்
றெல்லை இல்லவன் எரிதுள்ளி னால்என வெகுண்டான். 26

39. தவம்நி றைந்தநான் மறைப்பொருள் நூல்களாற் சமைந்த
சிவன்வி ரும்பிய கோவண மிடுஞ்செழுந் தட்டுக்
கவனி மேலமர் நீதியார் தனமெலாம் அன்றிப்
புவனம் யாவையும் நேர்நிலா என்பது புகழோ. 39

---

36. *தத்தன் கொடுமையிழைத்த முத்திநாதனை நாயனார் ஆணைக்கேற்ப வழியனுப்பி விட்டு வந்து வணங்கியமை "சென்றடி வணங்கி" என்றவிடத்துச் சொல்லப் பட்டது.*

37. *மலைநாட்டுச் செங்குன்றூர் வருணனை.*

38. *பிழையாறை வணிகர்குலத் தோன்றலாகிய அமர்நீதியை நோக்கிக் கோவணம் மறைத்த கள்வர் கூறியது.*

### எறிபத்த நாயனுர் புராணம்

40. களியா னெயின்ஈர உரியாய் சிவதா
எளியார் வலியாம் இறைவா சிவதா
அளியார் அடியார் அறிவே சிவதா
தெளிவார் அமுதே சிவதா சிவதா. 16

41. ஆறும் மதியும் அணியுஞ் சடைமேல்
ஏறும் மலரைக் கரிசிந் துவதே
வேறுள் நினைவார் புரம்வெந் தவியச்
சீறுஞ் சிலையாய் சிவதா சிவதா. 17

42. தஞ்சே சரணம் புகுதுந் தமியோர்
நெஞ்சேய் துயரங் கெடநேர் தொடரும்
மஞ்சே எனவீழ் மறலிக் கிறைநீள்
செஞ்சே வடியாய் சிவதா சிவதா. 18

### ஏனுதிநாத நாயனுர் புராணம்

43. வாளொடு நீள்கை துடித்தன மார்பொடு வேல்கள் குளித்தன
தோளொடு வாளி நிலத்தன தோலொடு தோல்கள் தகைத்தன
தாளொடு வார்கழல் இற்றன தாரொடு சூழ்சிரம் அற்றன
நாளொடு சீறி மலைப்பவர் நாடிய போர்செய் களத்தினில். 18

---

40. புகழ்ச் சோழ நாயனுருடைய அரசுவா ஒரு நாள் சிவகாமியாண்டாருடைய பூக்கூடையைப் பறித்துச் சிந்த, மூப்பினுற் கீழே விழுந்து எழுந்து அச் சிவகாமி யாண்டார் புலம்பியமை இதுமுதல் மூன்று பாடல்களிற் சொல்லப் படுகின்றது.

சிவதா = நன்மையைச் செய்வோனே.

42. இறை = சிறிது.

43. இதுவும் வரும் பாட்டும் ஏனுதிநாத நாயனுர் படையும் அதிசூரன் என்னும் வஞ்சகன் படையும் மலைந்தவாற்றைத் தெரிவிக்கின்றன.

2390



44. குருதியின் நதிகள் பரந்தன குறையுடல் ஓடி அலைந்தன
பொருபடை அறுதுணி சிந்தின புடைசொரி குடர்உடல் பம்பின
வெருவர எருவை நெருங்கின விசியறு துடிகள் புரண்டன
இருபடை யினினும் எதிர்ந்தவர் எதிரெதிர் அமர்செய் பறந்தலை. 19

45. கைவாள் உடன்பலகை நீக்கக் கருதியது
செய்யார் நிராயுதரைக் கொன்றார் எனுந்தீமை
எய்தாமை வேண்டும் இவர்க்கென் றிரும்பலகை
நெய்வாள் உடன்அடர்த்து நேர்வார்போல் நேர்கின்றார். 39

கண்ணப்ப நாயனார் புராணம்

46. வன்புலிக் குருளை யோடும் வயக்கரிக் கன்றி னோடும்
புன்தலைச் சிறும கார்கள் புரிந்துடன் ஆடல் அன்றி
அன்புறு காதல் கூர அணையுமான் பிணைக ளோடும்
இன்புற மருவி ஆடும் எயிற்றியர் மகளிர் எங்கும். 4

47. வெல்படைத் தறுகண் வெஞ்சொல் வேட்டுவர் கூட்டந் தோறும்
கொல்லெறி குத்தென் றார்த்துக் குழுமிய ஓசை யன்றிச்
சில்லரித் துடியும் கொம்பும் சிறுகணா குளியுங் கூடிக்
கல்லெனும் ஒலியின் மேலும் கறங்கிசை அருவி எங்கும். 5

---

45. அதிசூரன் திருநீறணிந்து வஞ்சகமாய் வெல்லக் கருதியக்காலும் ஏனாதிநாதர் படைதாங்குவார் போலத் தாங்கியிருந்து அழிந்தமை சொல்லப்படுகிறது.

46-47. பொத்தப்பி நாட்டு முதுபதியாகிய உடுப்பூர் வருணனை.

47. சிறுகண் ஆகுளி = சிறிய கண்களையுடைய ஒருவகைப் பறை.

48. ஐவன அடிசில் வெவ்வே றமைத்தன புற்பாற் சொன்றி
மொய்வரைத் தினைமென் சோறு மூங்கில்வன் பதங்கள்
மற்றும்
கைவினை எயின ராக்கிக் கலந்தஊன் கிழங்கு துன்றச்
செய்வரை உயர்ப்ப எங்கும் கலந்தனர் சினவில் வேடர். 34

49. செந்தினை இடியும் தேனும் அருந்துவார் தேனில் தோய்த்து
வெந்தஊன் அயில்வார் வேரி விளங்கனிக் கவளம் கொள்
வார்
நந்திய ஈயல் உண்டி நசையொடு மிசைவார் வெவ்வே
றந்தமில் உணவின் மேலோர் ஆயினர் அளவி லார்கள். 35

50. பொற்றட வரையின் பாங்கர்ப் புரிவுறு கடன்முன் செய்த
விற்றொழிற் களத்தில் நண்ணி விதிமுறை வணங்கி மேவும்
அற்றைநாள் தொடங்கி நாளும் அடற்சிலை ஆண்மை முற்றக்
கற்றனர் என்னை யாளுங் கானவர்க் கரிய சிங்கம். 41

51. மாகமார் திருக்கா ளத்தி மலைஎழு கொழுந்தா யுள்ள
ஏகநா யகரைக் கண்டார் எழுந்தபேர் உவகை அன்பின்
வேகமா னதுமேற் செல்ல மிக்கதோர் விரைவி னோடு
மோகமாய் ஓடிச் சென்றார் தழுவினார் மோந்து நின்றார். 105

---

48. திண்ணனார் வில் பிடித்த நாளிலே அடப்பட்ட சோறு கறி இவற்றைப் பற்றிக் கூறும் பாட்டு.

ஐவன அடிசில் = மலை நெல்லினால் அமைக்கப்பட்ட சோறு. செய்வரை யுயர்ப்ப = செய்குன்றைப் போலக் குவிக்கவும்.

49. இதுவும் அது.

இடி = மா. வேரி = தேன்.

நந்திய ஈயல் = மிகுந்த ஈசல்.

50. சிங்கம் — உவம ஆகுபெயர்; திண்ணனாரைக் குறிக்கிறது.

52. நெடிதுபோ துயிர்த்து நின்று நிறைந்தெழு மயிர்க்கால்
தோறும்
வடிவெலாம் புளகம் பொங்க மலர்க்கண்ணீர் அருவி பாய
அடியனேற் கிவர்தாம் இங்கே அகப்பட்டார் அச்சோ என்று
படியிலாப் பரிவு தாஞேர் படிவமாம் பரிசு தோன்ற, 106

53. வெம்மறக் குலத்து வந்த வேட்டுவச் சாதி யார்போல்
கைம்மலை கரடி வேங்கை அரிதிரி கானந் தன்னில்
உம்முடன் துணையாய் உள்ளார் ஒருவரும் இன்றிக் கெட்
டேன்
இம்மலைத் தனியே நீரிங் கிருப்பதே என்று நைந்தார். 107

54. இவர்தமைக் கண்டே னுக்குத் தனியராய் இருந்தார் என்னே
இவர்தமக் கமுது செய்ய இறைச்சியும் இடுவார் இல்லை
இவர்தமைப் பிரிய ஒண்ணு தென்செய்கேன் இனியான் சால
இவர்தமக் கிறைச்சி கொண்டிங் கெய்தவும் வேண்டும்
என்று, 111

55. போதுவர் மீண்டு செல்வர் புல்லுவர் மீளப் போவர்
காதலின் நோக்கி நிற்பர் கன்றகல் புனிற்றுப் போல்வர்
நாதனே அமுது செய்ய நல்லமெல் இறைச்சி நானே
கோதறத் தெரிந்து வேறு கொண்டிங்கு வருவேன் என்
பார். 112

---

53. திரிகானம் — வினைத்தொகை.

55. புனிற்று — ஈன்றணிமையுடைய பசு.

56. கொழுவிய தசைகள் எல்லாங் கோலினில் தெரிந்து கோத்தங்
கழலுறு பதத்திற் காய்ச்சிப் பல்லினால் அதுக்கி நாவில்
பழகிய இனிமை பார்த்துப் படைத்தஇவ் இறைச்சி சால
அழகிது நாய னீரே அமுதுசெய் தருளும் என்றார். 125

57. சார்வருந் தவங்கள் செய்து முனிவரும் அமரர் தாமும்
கார்வரை அடவி சேர்ந்தும் காணுதற் கரியார் தம்மை
ஆர்வமுன் பெருக ஆரா அன்பினிற் கண்டு கொண்டே
நேர்பெற நோக்கி நின்றார் நீளிருள் நீங்க நின்றார். 128

58. செந்தழல் ஒளியிற் பொங்கும் தீபமா மரங்க ளாலும்
மந்திகள் முழையில் வைத்த மணிவிளக் கொளிக ளாலும்
ஐந்தும்ஆ றடக்கி யுள்ளார் அரும்பெருஞ் சோதி யாலும்
எந்தையார் திருக்கா ளத்தி மலையினில் இரவொன்
றில்லை. 131

59. அவனுடைய வடிவெல்லாம் நம்பக்கல் அன்பென்றும்
அவனுடைய அறிவெல்லாம் நமைஅறியும் அறிவென்றும்
அவனுடைய செயலெல்லாம் நமக்கினிய வாம்என்றும்
அவனுடைய நிலைஇவ்வா றறிநீஎன் றருள்செய்தார். 157

---

56. நாயனீரே = தலைவராகிய நீரே.

57. கார்வரை அடவி = மேகந்தவழும் மலையையுங் காட்டையும்.

58. ஐந்தும் ஆறும் = ஐம்புலத் தீமைகளையும் அறுவகைப் பகைகளையும். பகை ஆறாவன காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாற்சரியம் என்பன.

59. சிவகோசாரியாருக்கு இறைவன் கண்ணப்பர் அன்பின்திறம் கூறியவாறு. மேல் வருகின்ற ஐந்து பாட்டும் இக்கருத்தே பற்றியன.

60. பொருப்பினில்வந் தவன்செய்யும் பூசனைக்கு முன்பெண்மேல்
அருப்புறுமென் மலர்முன்னை அவைநீங்கும் ஆதரவால்
விருப்புறும்அன் பெனும்வெள்ளக் கால்பெருகிற் றென வீழ்ந்த
செருப்படிஅவ் இளம்பருவச் சேயடியிற் சிறப்புடைத்தால். 158

61. உருகியஅன் பொழிவின்றி நிறைந்தஅவன் உருவென்னும்
பெருகியகொள் கலமுகத்தில் பிறங்கியினி தொழுகுதலால்
ஒருமுனிவன் செவிஉமிழும் உயர்கங்கை முதல்தீர்த்தப்
பொருபுனலின் எனக்கவன்தன் வாயுமிழும் புனல்புனிதம். 159

62. இம்மலைவந் தெனையடைந்த கானவன்தன் இயல்பாலே
மெய்ம்மலரும் அன்புமேல் விரிந்தனபோல் விழுதலால்
செம்மலர்மேல் அயனெடுமால் முதல்தேவர் வந்துபுனை
எம்மலரும் அவன்தலையால் இடுமலர்போல் எனக்கொவ்வா. 160

63. வெய்யகனற் பதங்கொள்ள வெந்துளதோ எனும்அன்பால்
நையும்மனத் தினிமையினில் நையமிக மென்றிடலால்
செய்யுமறை வேள்வியோர் முன்புதருந் திருந்தவியின்
எய்யும்வரிச் சிலையவன்தான் இட்டஊன் எனக்கினிய. 161

---

60. சேய் அடியின் = முருகனுடைய அடியினும்.

61. ஒரு முனிவன் = சந்து முனிவன். அவர் எதிரே வந்த கங்கையைக் குடித்து விட்டு, பகீரதன் வேண்டுகோட் கிணங்கிப் பின்னர் செவி வழியே உமிழ்ந்தார் என்பது கதை.

64. மன்பெருமா மறைமொழிகள் மாமுனிவர் மகிழ்ந்துரைக்கும்
இன்பமொழித் தோத்திரங்கள் மந்திரங்கள் யாவையினும்
முன்பிருந்து மற்றவன்தன் முகமலர அகநெகிழ
அன்பில்நினைந் தெனையல்லால் அறிவுரு மொழிநல்ல. 162

65. வந்தவர் குருதி கண்டார் மயங்கினார் வாயில் நன்னீர்
சிந்திடக் கையில் ஊனுஞ் சிலையுடன் சிதறி வீழக்
கொந்தலர் பள்ளித் தாமங் குஞ்சிநின் றலைந்து சோரப்
பைந்தழை அலங்கல் மார்பர் நிலத்திடைப் பதைத்து வீழ்ந்
தார். 170

66. பேறினி இதன்மேல் உண்டோ பிரான்திருக் கண்ணில் வந்த
ஊறுகண் டஞ்சித் தங்கண் இடந்தப்ப உதவுங் கையை
ஏறுயர்த் தவர்தங் கையால் பிடித்துக்கொண் டென்வ லத்தில்
மாறிலாய் நிற்க என்று மன்னுபேர் அருள்பு ரிந்தார். 185

### குங்குலியக்கலய நாயனார் புராணம்

67. வயலெலாம் விளைசெஞ் சாலி வரம்பெலாம் வளையின் முத்தம்
அயலெலாம் வேள்விச் சாலை அணையெலாங் கழுநீர்க்
கற்றை
புயலெலாங் கமுகின் காடப் புறமெலாம் அதன்சீர் போற்றல்
செயலெலாந் தொழில்கள் ஆறே செழுந்திருக் கடவூர்
என்றும். 2

---

65. திருக்காளத்தியப்பருடைய கண்களில் ஒன்று குருதி பாய்ந்திருந்தமை கண்டு திண்ணனார் இன்னது செய்தார் என்று சொல்லுகிறது.

66. எம்பிரானது வலக்கண்ணில் தனது கண்ணை இடந்து அப்பிய பிறகு, இடக் கண்ணிலும் குருதி கண்டு தமது மற்றொரு கண்ணையும் இடந்தப்பப் போகுந் தறுவாயில், காளத்தியப்பர் "கண்ணப்ப நிற்க" என்றார். மேனடந்ததை இப் பாட்டுக் கூறுகிறது.

68. குடங்கையின் அகன்ற உண்கண் கடைசியர் குழுமி ஆடும்
இடம்படு பண்ணை தோறும் எழுவன மருதம் பாடல்
வடம்புரி முந்நூல் மார்பின் வைதிக மறையோர் செய்கைச்
சடங்குடை இடங்கள் தோறும் எழுவன சாமம் பாடல். 3

69. செங்கண்வெள் ளேற்றின் பாகன் திருப்பனந் தாளில் மேவும்
அங்கணன் செம்மை கண்டு கும்பிட அரசன் ஆர்வம்
பொங்கித்தன் வேழம் எல்லாம் பூட்டவும் நேர்நில் லாமைக்
கங்குலும் பகலுந் திராக் கவலையுற் றழுங்கிச் செல்ல, 23

70. மன்னவன் வருத்தங் கேட்டு மாசறு புகழின் மிக்க
நன்னெறிக் கலய னார்தாம் நாதனை நேரே காணும்
அந்நெறி தலைநின் றுன்என் றரசனை விரும்பித் தாமும்
மின்னெறித் தனைய வேணி விகிர்தனை வணங்க வந்தார். 24

71. மழுவுடைச் செய்ய கையர் கோயில்கள் மருங்கு சென்று
தொழுதுபோந் தன்பி னோடுந் தொன்மறை நெறிவ ழாமை
முழுதுல கினையும் போற்ற முன்றெரி புரப்போர் வாழும்
செழுமலர்ச் சோலை வேலித் திருப்பனந் தாளிற் சேர்ந்
தார். 25

72. காதலால் அரசன் உற்ற வருத்தமுங் களிற்றி னோடும்
திதிலாச் சேனை செய்யுந் திருப்பணி நேர்ப டாமை
மேதினி மிசையே எய்த்து வீழ்ந்திளைப் பதுவும் நோக்கி
மாதவக் கலயர் தாமும் மனத்தினில் வருத்தம் எய்தி, 26

---

67-68. சோழவளநாட்டுத் திருக்கடவூர் வருணனை.
குடங்கையின் = உள்ளங்கையைவிட.

69. திருப்பனந்தாளிற் கோயிற் கொண்டிருக்கும் எம்பெருமான் தம்மைப் பூசிக்க விழைந்த பார்ப்பனி ஒருத்தியின் பொருட்டுத் திருமேனியைச் சாய்த்தாராக, அச்சாய்வினைப் போக்கும் பொருட்டுச் சோழமன்னன் முயன்றது சொல்லப் படுகிறது.

73. சேனையும் ஆனை பூண்ட திரளும்எய்த் தெழாமை நோக்கி
யானும்இவ் இளைப்புற் றெய்க்கும் இதுபெற வேண்டும்
என்று
தேனலர் கொன்றை யார்தந் திருமேனிப் பூங்கச் சேய்ந்த
மானவன் கயிறு பூண்டு கழுத்தினால் வருந்த லுற்றார். 27

74. நண்ணிய ஒருமை அன்பின் நாருறு பாசத் தாலே
திண்ணிய தொண்டர் பூட்டி இளைத்தபின் திறம்பி நிற்க
ஒண்ணுமோ கலய னார்தம் ஒருப்பாடு கண்ட போதே
அண்ணலார் நேரே நின்றார் அமரரும் விசும்பில் ஆர்த்
தார். 28

75. பார்மிசை நெருங்க எங்கும் பரப்பினர் பயில்பூ மாரி
தேர்மலி தானை மன்னன் சேனையுங் களிறும் எல்லாம்
கார்பெறு கானம் போலக் களித்தன கைகள் கூப்பி
வார்கழல் வேந்தன் தொண்டர் மலரடி தலைமேல் வைத்து, 29

76. விண்பயில் புரங்கள் வேவ வைதிகத் தேரில் மேருத்
திண்சிலை குனிய நின்றார் செந்நிலை காணச் செய்தீர்
மண்பகிர்ந் தவனுங் காணா மலரடி இரண்டும் யாரே
பண்புடை அடியார் அல்லால் பரிந்துநேர் காண வல்
லார். 30

---

73. எய்த்து = இளைத்தும்.

எய்க்கும் = மெலியும்.

76. வைதிகத்தேர் = வேதமாகிய தேர்.
மண்பகிர்ந்தவன் = திருமால்.

## மானக்கஞ்சாற நாயனார் புராணம்

77. தஞ்சரணத் திடைபணிந்து தாழ்ந்தெழுந்த மடக்கொடிதன்
மஞ்சுதழைத் தெனவளர்ந்த மலர்க்கூந்தல் புறநோக்கி
அஞ்சலிமெய்த் தொண்டரைப்பார்த் தணங்கிவள்தன் மயிர் நமக்குப்
பஞ்சவடிக் காம்என்றார் பரவஅடித் தலங்கொடுப்பார். 29

78. அருள்செய்த மொழிகேளா அடற்சுரிகை தனைஉருவிப்
பொருள்செய்தாம் எனப்பெற்றேன் எனக்கொண்டு பூங்கொடிதன்
இருள்செய்த கருங்கூந்தல் அடியில்அரிந் தெதிர்நின்ற
மருள்செய்த பிறப்பறுப்பார் மலர்க்கரத்தி னிடைநீட்ட, 30

79. வாங்குவார் போல்நின்ற மறைப்பொருளாம் அவர்மறைந்து
பாங்கின்மலை வல்லியுடன் பழையமழ விடையேறி
ஓங்கியவிண் மிசைவந்தார் ஒளிவிசும்பின் நிலநெருங்கத்
தூங்கியபொன் மலர்மாரி தொழும்பர்தொழு தெதிர்விழுந் தார். 31

## அரிவாட்டாய நாயனார் புராணம்

80. ஆட்கொள்ளும் ஐயர் தாமிங் கமுதுசெய் திலர்கொல் என்னாப்
பூட்டிய அரிவாள் பற்றிப் புரையற விரவும் அன்பு
காட்டிய நெறியின் உள்ளந் தண்டறக் கழுத்தி னோடே
ஊட்டியும் அரியா நின்றார் உறுபிறப் பரிவார் ஒத்தார். 17

---

77. *மானக்கஞ்சாறர் தம் மகளை மாவிரத முனிவராக வந்த சிவனுக்கு வணக்கம் புரியும்படி செய்யவும், முனிவர் வேண்டியது இன்னது என்பது.*

*பஞ்சவடி = உரோமத்தாற் செய்யப்பட்டு மார்பிலே பூணூலாக அணியப்படும் வடம்.*

80. *சோழநாட்டுக் கணமங்கலம் என்னும் ஊரிலே வேளாண்குடியில் தோன்றிய நாயனார் இறைவனுக்குச் செந்நெலும் அமுதுஞ் செங்கீரையும் படைக்கும் வழக்கமுடையவர், வறுமை மிக்க காலத்தும் அப்பணி தலைநின்றாராய் ஒழுகி வருநாளில் ஒரு நாள் இறைவற்குக் கொண்டுபோன திருவுண்டி கமரிடைச் சிந்திற்றாக, இறைவன் அமுது செய்திலரே என்பதனால் வாளையெடுத்து ஊட்டியை அரிகின்ற நாயனாரது திறஞ் சொல்லப்படுகிறது.*

81. அடியேன் அறிவி லாமை கண்டும்என் அடிமை வேண்டிப்
படிமிசைக் கமரில் வந்திங் கமுதுசெய் பரனே போற்றி
துடியிடை பாக மான தூயநற் சோதி போற்றி
பொடியணி பவள மேனிப் புரிசடைப் புராண போற்றி. 20

82. என்றவர் போற்றி செய்ய இடபவா கனராய்த் தோன்றி
நன்றுநீ புரிந்த செய்கை நன்னுத லுடனே கூட
என்றும்நம் உலகில் வாழ்வாய் என்றவர் உடனே நண்ண
மன்றுளே ஆடும் ஐயர் மழவிடை உகைத்துச் சென்றார். 21

ஆனாய நாயனார் புராணம்

83. நீலமா மஞ்ஞை ஏங்க நிரைக்கொடிப் புறவம் பாடக்
கோலவெண் முகையேர் முல்லை கோபம்வாய் முறுவல் காட்ட
ஆலுமின் னிடைசூழ் மாலைப் பயோதரம் அசைய வந்தாள்
ஞாலநீ டரங்கி லாடக் காரெனும் பருவ நல்லாள். 19

84. வள்ளலார் வாசிக்கும் மணித்துளைவாய் வேய்ங்குழலின்
உள்ளுறைஅஞ் செழுத்தாக ஒழுகியெழு மதுரவொலி
வெள்ளநிரைந் தெவ்வுயிர்க்கும் மேலமரர் தருவிளைதேன்
தெள்ளமுதின் உடன்கலந்து செவிவார்ப்ப தெனத்தேக்க, 29

85. ஆனிரைகள் அறுகருந்தி அசைவிடா தணைந்தயரப்
பானுரைவாய்த் தாய்நகிலில் பற்றும்இளங் கன்றினமும்
தானுணவு மறந்தொழியத் தடமருப்பின் விடைக்குலமும்
மான்முதலாங் கான்விலங்கும் மயிர்முகிழ்த்து வந்தணைய. 30

---

81. கமரிடை விழுந்தவற்றை இறைவன் உண்டு "விடேல் விடேல்" என்று மாவடு கடித்தலொத்த ஓசையை எழுப்ப, நாயனார் அஞ்செலிசெய்து இங்ஙனம் பாடுகின்றார்.

83. கார்காலம் ஒரு பெண்ணாக உருவகிக்கப்படுகிறது.

85-93. ஆனாயர் குழலோசையின் பயன்.

86. ஆடுமயில் இனங்களும் அங் கசைவயர்ந்து மருங்கணாக
ஊடுசெவி இசைநிறைந்த உள்ளமொடு புள்ளினமும்
மாடுபடிந் துணர்வொழிய மருங்குதொழில் புரிந்தொழுகும்
கூடியவன் கோவலரும் குறைவினையின் துறைநின்றார். 31

87. மணிபுவனங் களிலுள்ளார் பயில்பிலங்கள் வழியணைந்தார்
மணிவரைவாழ் அரமகளிர் மருங்குமயங் கினர்மலிந்தார்
தணிவில்ஒளி விஞ்சையர்கள் சாரணர்கின் னரர்அமரர்
அணிவிசும்பில் அயர்வெய்தி விமானங்கள் மிசைஅணைந்
தார். 32

88. சுரமகளிர் கற்பகப்பூஞ் சோலைகளின் மருங்கிருந்து
கரமலரின் அமுதூட்டுங் கனிவாய்மென் கிள்ளையுடன்
விரவுநறுங் குழல்அலைய விமானங்கள் விரைந்தேறிப்
பரவியவ ழிசைஅமுதம் செவிமடுத்துப் பருகினார். 33

89. நலிவாரும் மெலிவாரும் உணர்வொன்றாய் நயத்தலினால்
மலிவாய்வெள் எயிற்றரவம் மயில்மீது மருண்டுவிழும்
சலியாத நிலையரியும் தடங்கரியும் உடன்சாரும்
புலிவாயின் மருங்கணையும் புல்வாய புல்வாயும். 34

90. மருவியகால் விசைத்தசையா மரங்கள்மலர்ச் சினைசலியா
கருவரைவீழ் அருவிகளும் கான்யாறும் கலித்தோடா
பெருமுகிலின் குலங்கள்புடை பெயர்வொழியப் புனல்சோரா
இருவிசும்பி னிடைமுழங்கா எழுகடலும் இடை
துளும்பா, 35

91. இவ்வாறு நிற்பனவும் சரிப்பனவும் இசைமயமாய்
மெய்வாழும் புலன்காண மேவியவொன் றாயினவால்
மொய்வாச நறுங்கொன்றை முடிச்சடையார் அடித்தொண்டர்
செவ்வாயின் மிசைவைத்த திருக்குழல்வா சனையுருக்க, 36

மூர்த்தி நாயனர் புராணம்

94. மொய்வைத்த வண்டின் செறிசூழல் முரன்ற சந்தின்
மைவைத்த சோலை மலயந்தர வந்த மந்த
மெய்வைத்த காலும் தருஞாலம் அளந்த மேன்மைத்
தெய்வத்தமி ழுந்தருஞ் செவ்வி மணஞ்செ யீரம். 3

95. சூழுமிதழ்ப் பங்கய மாகஅத் தோட்டின் மேலாள்
தாழ்வின்றி என்றுந் தனிவாழ்வதத் தையல் ஒப்பார்
யாழின் மொழியிற் குழலின்னிசை யுஞ்சு ரும்பும்
வாழும் நகரம் மதுராபுரி என்ப தாகும். 4

96. சால்பாய மும்மைத் தமிழ்தங்கிய அங்கண் மூதூர்
நால்பா யிடத்தும் உளநோன்றலை மேதி பாயப்
பால்பாய் நகில்தோய் மதுப்பங்கயம் பாய எங்குஞ்
சேல்பாய் தடத்தும் உளசெய்யுள் மிக்கேறு சங்கம். 5

97. பன்முறை உயிர்கள் எல்லாம் பாலித்து ஞாலங் காப்பான்
தன்னெடுங் குடைக்கீழ்த் தத்தம் நெறிகளில் சரித்து வாழும்
மன்னரை இன்றி வைகும் மண்ணுல கெண்ணுங் காலை
இன்னுயிர் இன்றி வாழும் யாக்கையை ஒக்கும் என்பார். 29

---

94. பாண்டிநாட்டு வருணனை. செவ்வி மணஞ்செய் ஈரம் = நறிய மணத்தைக் கமழச் செய்யும் ஈரத்தை — ஈரத்தைத் தென்றற் காற்றும் தெய்வத் தமிழுந் தரும் என்பது.

96. செய்யுள் மிக்கேறு சங்கம் என்பதற்குப் பாச்செய்யுள் மிக்கு உயருகின்ற புலவர் கூட்டம் என்றும், வயல்களில் மிகுந்து ஏறுகின்ற சங்குகள் என்றும் இரு பொருள் உள்ளவாறு காண்க.

97. நாட்டில் அரசனின்றிக் கலங்கிய அமைச்சர் கூற்று.

98. வையம் முறைசெய் குவனுகில் வயங்கு நீறே
செய்யும் அபிடே கமுமாக செழுங்க லன்கள்
ஐயன் அடையா ளமுமாக அணிந்து தாங்கும்
மொய்புன் சடைமா முடியே முடியாவ தென்ருர். 41

முருக நாயனுர் புராணம்

99. வண்டு பாடப் புனல்தடத்து மலர்ந்து கண்ணீர் அரும்
புவன
கொண்ட வாச முகையவிழ்ந்த குளிர்பங் கயங்க ளேயல்ல
அண்டர் பெருமான் திருப்பாட்டின் அமுதம் பெருகச் செவி
மடுக்கும்
தொண்டர் வதன பங்கயமும் துளித்த கண்ணீர் அரும்பு
மால். 4

திருநாளைப்போவார் நாயனுர் புராணம்

100. மற்றவ்வூர்ப் புறம்பணேயின் வயன்மருங்கு பெருங்குலேயில்
சுற்றம்விரும் பியகிழமைத் தொழில்உழவர் கிளை துவன்றிப்
பற்றியபைங் கொடிச்சுரைமேற் படர்ந்தபழங் கூரையுடைப்
புற்குரம்பைச் சிற்றில்பல நிறைந்துளதோர் புலேப்பாடி. 6

101. கூருகிர்மெல் லடியளகின் குறும்பார்ப்புக் குழூச்சுழலும்
வார்பயின்முன் றிலில்நின்ற வள்ளுகிர்நாய்த் துள்ளுபறழ்
காரிரும்பின் சரிசெறிகைக் கருஞ்சிருர் கவர்ந்தோட
ஆர்சிறுமென் குரைப்படக்கும் அரைக்கசைத்த இருப்பு
மணி. 7

---

98. மூர்த்திநாயனுர் நூலறிவு மிக்க மாந்தரையும் அமைச்சரையும் நோக்கிக் கூறியது.

99. பூம்புகலூர்ச் சிறப்பு.

100–1 சோழநாட்டு ஆதனூர்ப் புலேப்பாடி வருணனே.

101. அளகு = கோழிப்பெடை.
பறழ் = குட்டி.

திருக்குறிப்புத்தொண்ட நாயனார் புராணம்

102. ஏயு மாறுபல் உயிர்களுக் கெல்லையில் கருணைத்
தாய னாள்தனி யாயின தலைவரைத் தழுவ
ஆயு நான்மறை போற்றநின் றருந்தவம் புரியத்
தூய மாதவம் செய்தது தொண்டைநன் னாடு. 1

103. ஆய நானிலத் தமைதியில் தத்தமக் கடுத்த
மேய செய்தொழில் வேறுபல் குலங்களின் விளங்கித்
தீய என்பன கனவிலும் நினைவிலாச் சிந்தைத்
தூய மாந்தர்வாழ் தொண்டைநாட் டியல்புசொல்
வரைத்தோ. 47

104. மாறி லாதஇப் பூசனை என்றும் மன்ன எம்பிரான் மகிழ்ந்து
கொண்டருளி
ஈறி லாதஇப் பதியினுள் எல்லா அறமும் யான்செய
அருள்செய வேண்டும்
வேறு செய்வினை திருவடிப் பிழைத்தல் ஒழிய இங்குளார்
வேண்டின செயினும்
பேறு மாதவப் பயன்கொடுத் தருளப் பெறவும் வேண்டும்
என்றனள்பிறப் பொழிப்பாள். 69

105. வேத வேதியர் வேள்வியே தீயன
மாத ரோதி மலரே பிணியன
காதல் வீதிவி லக்கே கவலைய
சூத மாதவி யேபுறஞ் சூழ்வன. 106

---

102-3 தொண்டைநாட்டுச் சிறப்பு.

104. காஞ்சிமாநகரத்தில் உலகையாளுடை நாயகி இறைவற்குப் பூசை செய்தகால் இறைவனுக்கு உரைத்தது.

105. வேறு தீயன இல்லை, நோயுடையன பிற இல்லை, வேறு துன்பமுடையன இல்லை, வேறு தாழ்ந்து இரப்பன இல்லை என்றவாறு.

106. தேரொலிக்க மாவொலிக்கத் திசையொலிக்கும் புகழ்க்காஞ்சி
ஊரொலிக்கும் பெருவண்ணா ரெனவொண்ணா உண்மை
யினார்
நீரொலிக்க அராஇரைக்க நிலாமுகிழ்க்குந் திருமுடியார்
பேரொலிக்க உருகுமவர்க் கொலிப்பர்பெரு விருப்பி
னொடும். 113

107. குறித்தபொழு தேஒலித்துக் கொடுப்பதற்குக் கொடுபோந்து
வெறித்தடநீர்த் துறைமின்கண் மாசெறிந்து மிகப்புழுக்கிப்
பிறித்தொலிக்கப் புகுமளவில் பெரும்பகல்போய்ப் பின்பக
லாய்
மறிக்கரத்தார் திருவருளால் மழைஎழுந்து பொழிந்திடு
மால். 121

108: திசைமயங்க வெளியடைத்த செறிமுகிலின் குழாமிடைந்து
மிசைசொரியும் புனல்தாரை விழிநுழையா வகைமிடைய
அசைவுடைய மனத்தன்பர் அறிவுமறந் தருந்தவர்பால்
இசைவுநினைந் தழிந்தினியான் என்செய்கேன் எனநின்
றார். 122

109. ஓவாதே பொழியுமழை ஒருகால்விட் டொழியும்எனக்
காவாலி திருத்தொண்டர் தனிநின்றார் விடக்காணார்
மேவார்போற் கங்குல்வர மெய்குளிரும் விழுத்தவர்பால்
ஆ! ஆ! என் குற்றேவல் அழிந்தவா எனவிழுந்தார். 123

110. விழுந்தமழை ஒழியாது மெய்த்தவர்சொல் வியஎல்லை
கழிந்ததுமுன் பொலித்துமனைக் காற்றேற்க அறிந்திலேன்
செழுந்தவர்தந் திருமேனி குளிர்காணுந் தீங்கிழைத்த
தொழும்பனேற் கினியிதுவே செயலென்று துணிந்தெழு
வார். 124

---

106. திருக்குறிப்புத் தொண்டர் உருகும் அன்பர்க்கு ஆடையை ஒலித்துக் கொடுப்பர் (வெளுத்துக் கொடுப்பர்) என்பது.

109. காவாலி = கபாலத்தையுடையவர்; சிவன்.

111. கந்தைபுடைத் திடஎற்றுங் கற்பாறை மிசைத்தலையைச்
சிந்தஎடுத் தெற்றுவனென் றணைந்துசெழும் பாரைமிசைத்
தந்தலையைப் புடைத்தெற்ற அப்பாறை தன்மருங்கு
வந்தெழுந்து பிடித்ததணி வளைத்தழும்பர் மலர்ச்
செங்கை. 125

சண்டேசுர நாயனுர் புராணம்

112. பண்ணின் பயனும் நல்லிசையும் பாலின் பயனும் இன்சுவை
யும்
கண்ணின் பயனும் பெருகொளியும் கருத்தின் பயனும் எழுத்
தஞ்சும்
விண்ணின் பயனும் பொழிமழையும் வேதப் பயனும் சைவ
மும்போல்
மண்ணின் பயனும் அப்பதியின் வளத்தின் பெருமை வரம்
புடைத்தோ. 9

113. தங்கும் அகில யோனிகட்கும் மேலாம் பெருமைத் தகைமை
யன
பொங்கு புனித தீர்த்தங்கள் எல்லாம் என்றும் பொருந்துவன
துங்க அமரர் திருமுனிவர் கணங்கள் சூழ்ந்து பிரியாத
அங்கம் அனைத்துந் தாமுடைய அல்ல வோ நல் ஆனினங்
கள். 19

114. ஆய சிறப்பி னுற்பெற்ற அன்றே மன்றுள் நடம்புரியும்
நாய னார்க்கு வளர்மதியும் நதியும் நகுவெண் தலைத்தொடை
யும்
மேய வேணித் திருமுடிமேல் விரும்பி ஆடி. அருளுதற்குத்
தூய திருமஞ் சனம்ஐந்தும் அளிக்கும் உரிமைச் சுரபிகள்
தாம். 20

---

112. திருச் சேய்ஞலூர்ப் பெருமை.

113. விசாரசருமர் ஆக்களின் பெருமையைக் கூறியவாறு.

115. சீல முடைய கோக்குலங்கள் சிறக்குந் தகைமைத் தேவ
ருடன்
கால முழுதும் உலகனைத்துங் காக்கும் முதற்கா ரணமாகும்
நீல கண்டர் செய்யசடை நிருத்தர் சாத்து நீறுதரும்
மூலம் அவதா ரஞ்செய்யும் மூர்த்தம் என்றால்
முடிவென்னே. 21

116. உள்ளுந் தகைமை இனிப்பிறவே றுளவே உமைமான்
மறிக்கன்று
துள்ளுங் கரத்தார் அணிபணியின் சுடர்சூழ் மணிகள் சுரநதி
நீர்
தெள்ளுஞ் சடையார் தேவர்கள்தம் பிராட்டி யுடனே
சேரமிசைக்
கொள்ளுஞ் சினமால் விடைத்தேவர் குலமன் றோஇச்
சுரபிகுலம். 22

117. அண்டர் பிரானுந் தொண்டர்தமக் கதிப னாக்கி அனைத்தும்
நாம்
உண்ட கலமும் உடுப்பனவும் சூடு வனவும் உனக்காகச்
சண்டீ சனுமாம் பதந்தந்தோம் என்றங் கவர்பொற் றட
முடிக்குத்
துண்ட மதிசேர் சடைக்கொன்றை மாலை வாங்கிச் சூட்டி
னார். 56

118. வந்து மிகைசெய் தாதைதாள் மழுவால் துணித்த மறைச்
சிறுவர்
அந்த உடம்பு தன்னுடனே அரனார் மகனார் ஆயினார்
இந்த நிலைமை அறிந்தாரார் ஈறி லாதார் தமக்கன்பு
தந்த அடியார் செய்தனவே தவமா மன்றோ சாற்றுங்கால். 59

---

117. சிவபூசைக்கு இடையூறாகிய தந்தை தாளைத் தடிந்த விசாரசருமருக்கு இறைவன் அருளியவாறு.

119. மறந்தருதீ நெறிமாற மணிகண்டர் வாய்மைநெறி
அறந்தருநா வுக்கரசும் ஆலால சுந்தரரும்
பிறந்தருள உளதானால் நம்மளவோ பேருலகில்
சிறந்ததிரு முனைப்பாடித் திறம்பாடுஞ் சீர்ப்பாடு. 11

120. காவளர்த்தும் குளந்தொட்டும் கடப்பாடு வழுவாமல்
மேவினர்க்கு வேண்டுவன மகிழ்ந்தளித்தும் விருந்தளித்தும்
நாவலர்க்கு வளம்பெருக நல்கியும்நா னிலத்துள்ளோர்
யாவருக்கும் தவிராத ஈகைவினைத் துறைநின்றார். 36

121. புலர்வதன்முன் திருவலகு பணிமாறிப் புனிறகன்ற
நலமலிஆன் சாணத்தால் நன்குதிரு மெழுக்கிட்டு
மலர்கொய்து கொடுவந்து மாலைகளுந் தொடுத்தமைத்துப்
பலர்புகழும் பண்பினால் திருப்பணிகள் பலசெய்தார். 44

122. திருவாளன் திருநீறு திலகவதி யார்அளிப்பப்
பெருவாழ்வு வந்ததெனப் பெருந்தகையார் பணிந்தேற்றங்
குருவார அணிந்துதமக் குற்றவிடத் துய்யுநெறி
தருவாராய்த் தம்முன்பு வந்தார்பின் தாம்வந்தார். 67

123. வெய்யநீற் றறையதுதான் வீங்கிளவே னிற்பருவம்
தைவருதண் தென்றல்அணை தண்கழுநீர்த் தடம்போன்று
மொய்யொளிவெண் நிலவலர்ந்து முரன்றயாழ் ஒலியினதாய்
ஐயர்திரு வடிநீழல் அருளாகிக் குளிர்ந்ததே. 98

124. மாசின்மதி நீடுபுனல் மன்னிவளர் சென்னியனைப்
பேசஇனி யானைஉல காளுடைய பிஞ்ஞகனை
ஈசனைஎம் பெருமானை எவ்வுயிருந் தருவானை
ஆசையில்ஆ ராஅமுதை அடிவணங்கி இனிதிருந்தார். 99

---

119. திருமுனைப் பாடிநாட்டின் சிறப்பு.

120. மருணீக்கியார் சமண்சமயஞ் சாருமுன் செய்த அறங்களைப் பற்றிக் கூறுவது.

121. திருவதிகை வீரட்டானத்தில் திலகவதியார் தொண்டுசெய்தமை.

122. திருவாளன் = சிவபெருமானது.

123. திருநாவுக்கரையர் இருத்தப்பெற்ற நீற்றறை துன்பம் விளையாதிருந்தமை.

125. பொடியார்க்குந் திருமேனிப் புனிதற்குப் புவனங்கள்
முடிவாக்குந் துயர்நீங்க முன்னேவிடம் அமுதானல்
படியார்க்கும் அறிவரிய பசுபதியார் தம்முடைய
அடியார்க்கு நஞ்சமுதம் ஆவதுதான் அற்புதமோ. 105

126. பாசத்தொடை நிகளத்தொடர் பறியத்தறி முறியா
மீசுற்றிய பறவைக்குலம் வெருவத்துணி விலகா
ஊசற்கரம் எதிர்சுற்றிட உரறிப்பரி உழுரு
வாசக்கட மழைமுற்பட மதவெற்பெதிர் வருமால். 111

127. இடியுற்றெழும் ஒலியில்திசை இபமுட்கிட அடியில்
படிபுக்குற நெளியப்படர் பவனக்கதி விசையில்
கடிதுற்றடு செயலிற்கிளர் கடலிற்படு கடையின்
முடிவிற்கன லெனமுற்சினம் முடுகிக்கடு கியதே. 112

128. மாடுற்றணே இவுளிக்குலம் மறியச்செறி வயிரக்
கோடுற்றிரு பிளவிட்டறு குறைகைக்கொடு முறியச்
சாடுற்றிடு மதில்தெற்றிகள் சரியப்புடை அணிசெற்
ருடுற்றகல் வெளியுற்றதவ் வடர்கைக்குல வரையே. 113

129. அப்பெருங் கல்லும்அங் கரசு மேல்கொளத்
தெப்பமாய் மிதத்தலில் செறிந்த பாசமும்
தப்பிய ததன்மிசை இருந்த தாவில்சீர்
மெய்ப்பெருந் தொண்டனர் விளங்கித் தோன்றினர். 128

---

125. சமணர்கள் ஊட்டிய நஞ்சு தீமை விளேக்கவில்லே யென்பது.

126-128. கோபாதிசயம் என்னும் பட்டத்து யானேயின் புறப்பாடு கூறுகின்றன.

129. பாசம் = கயிறு.

130. இருவினைப் பாசமும் மலக்கல் ஆர்த்தலின்
வருபவக் கடலில்வீழ் மாக்கள் ஏறிட
அருளுமெய் அஞ்செழுத் தரசை இக்கடல்
ஒருகல்மேல் ஏற்றிடல் உரைக்க வேண்டுமோ ? 129

131. அருள்நயந் தஞ்செழுத் தேத்தப் பெற்றஅக்
கருணைநா வரசினைத் திரைக்க ரங்களால்
தெருள்நெறி நேர்மையில் சிரத்தில் தாங்கிட
வருணனுஞ் செய்தனன் முன்பு மாதவம். 130

132. தூயவெண் ணீறு துதைந்தபொன் மேனியுந் தாழ்வடமும்
நாயகன் சேவடி தைவருஞ் சிந்தையும் நைந்துருகிப்
பாய்வது போல்அன்பு நீர்பொழி கண்ணும் பதிகச்செஞ்
சொல்
மேயசெவ் வாயும் உடையார் புகுந்தனர் வீதியுள்ளே. 140

133. அறிவிற் பெரியவர் அயல்நெற் பணைவயல் அவையிற் படும்
வகை அணைகின்றார்
பிறவிப் பகைநெறி விடுவீர் இருவினை பெருகித் தொடர்பிணி
உறுபாசம்
பரிவுற் றிடஅணை யுமின்என் றிருபுடை பயில்சூழ்
சினைமிசை குயில்கூவும்
செறிவிற் பலதரு நிலையிற் பொலிவுறு திருநந் தனவனம்
எதிர்கண்டார். 159

---

130. இருவினைப் பாசம் = நல்வினை தீவினை யென்ற கயிறுகள். மும்மலக்கல்—என்பதன்கண், ஆணவம் கன்மம் மாயை என்னும் மூன்றும் பேசப்படுகின்றன. கன்மத்தின் வகைகளாகிய நல்வினை தீவினையிரண்டும் இருவினை யென்பதன்கண் பேசப்பட்டன.

132. திருநாவுக்கரசர் திருவதிகை வீதி புக்கமை.

133. திருநாவுக்கரசர் தில்லையெல்லையை நண்ணி வருதல்.

134. அவர்முன் பணிவொடு தொழுதங் கணைவுற அணிகொம்
பரின்மிசை அருகெங்கும்
தவமுன் புரிதலில் வருதொன் டெனுநிலை தலைநின்
றுயர்தமிழ் இறையோராம்
இவர்தந் திருவடி அதுகண் டதிசயம் எனவந் தெதிர்அர
சரஎன்றே
சிவமுன் பயில்மொழி பகர்கின் றனவளர் சிறைமென்
கிளியொடு சிறுபூவை. 160

135. நவமின் சுடர்மணி நெடுமாலையுநறு மலர்மாலையுநிறை
திருவீதிப்
புவனங் களின்முதல் இமையோர் தடமுடி பொருதுந்
தியமணி போகட்டிப்
பவனன் பணிசெய வருணன் புனல்கொடு பணிமா
றவும்அவை பழுதாமென்
றெவருந் தொழுதெழும் அடியார் திருவல கிடுவார்
குளிர்புனல் விடுவார்கள். 163

136. கையுந் தலைமிசை புனைஅஞ் சலியன கண்ணும் பொழிமழை
ஒழியாதே
பெய்யுந் தகையன கரணங் களுமுடன் உருகும் பரிவின
பேறெய்தும்
மெய்யுந் தரைமிசை விழுமுன் பெழுதரு மின்தாழ்
சடையொடு நின்றாடும்
ஐயன் திருநடம் எதிர்கும் பிடுமவர் ஆர்வம் பெருகுதல்
அளவின்றால். 167

---

136. திருநாவுக்கரசர் கனகப்பொதுவின்கண்ணே அமுதத் திருநடங்கண்டு மகிழ்தல்.

137. நீண்டவரை வில்லியார் வெஞ்சூலே மடுத்தருளி நேரே
முன்னாள்
ஆண்டஅர செழுந்தருளக் கேட்டருளி ஆளுடைய பிள்ளை
யாருங்
காண்டகைய பெருவிருப்புக் கைம்மிக்க திருவுள்ளக் கருத்தி
னேடு
மூண்டஅருள் மனத்தன்பர் புடைசூழ எழுந்தருளி முன்னே
வந்தார். 181

138. தொழுதணைவுற் றண்டஅர சன்புருகத் தொண்டர்குழாத்
திடையே சென்று
பழுதில்பெருங் காதலுடன் அடிபணியப் பணிந்தவர்தங்
கரங்கள் பற்றி
எழுதரிய மலர்க்கையால் எடுத்திறைஞ்சி விடையின்மேல்
வருவார் தம்மை
அழுதழைத்துக் கொண்டவர்தாம் அப்பரே எனஅவரும்
அடியேன் என்றார். 182

139. அம்பிகைசெம் பொற்கின்னத் தமுதஞா னங்கொடுப்ப
அழுகை தீர்ந்த
செம்பவள வாய்ப்பிள்ளை திருநாவுக் கரசரெனச் சிறந்த
சீர்த்தி
எம்பெருமக் களும்இயைந்த கூட்டத்தில் அரனடியார்
இன்பம் எய்தி
உம்பர்களும் போற்றிசைப்பச் சிவம்பெருகும் ஒலிநிறைத்தார்
உலகம் எல்லாம். 183

---

137. திருநாவுக்கரசர் திருப்புகலி அணைந்தது கேட்டுத் திருஞானசம்பந்தர் எதி
ரேற்க வந்தமை.

140. பிள்ளையார் கழல்வணங்கப் பெற்றேன்என்
றரசுவப்பப் பெருகு ஞான
வள்ளலார் வாகீசர் தமைவணங்கப்
பெற்றதற்கு மகிழ்ச்சி பொங்க
உள்ளநிறை காதலினல் ஒருவரொரு
வரிற்கலந்த உண்மை யோடும்
வெள்ளநீர்த் திருத்தோணி வீற்றிருந்தார்
கழல்வணங்கும் விருப்பின் மிக்கார். 184

141. அருட்பெருகு தனிக்கடலும் உலகுக் கெல்லாம்
அன்புசெறி கடலுமாம் எனவும் ஓங்கும்
பொருட்சமய முதற்சைவ நெறிதான் பெற்ற
புண்ணியக்கண் ணிரண்டெனவும் புவனம் உய்ய
இருட்கடுவுண் டவர்அருளும் அகிலம் எல்லாம்
ஈன்ருள்தன் திருவருளும் எனவுங் கூடித்
தெருட்கலைஞா னக்கன்றும் அரசுஞ் சென்று
செஞ்சடைவா னவர்கோயில் சேர்ந்தார் அன்றே. 185

142. மார்பாரப் பொழிகண்ணீர் மழைவாருந் திருவடிவும் மதுர வாக்கில்
சேர்வாகுந் திருவாயில் தீந்தமிழின் மாலைகளுஞ் செம்பொற் ருளே
சார்வான திருமனமும் உழவாரத் தனிப்படையும் தாமும் ஆகிப்
பார்வாழத் திருவீதிப் பணிசெய்து பணிந்தேத்திப் பரவிச் செல்வார். 225

143. ஈசர் மிழலை இறையவர்பால் இமையப் பாவை திருநகிற்பால்
தேசம் உய்ய உண்டவர்தாந் திருமா மகனர் ஆதலினல்
காசு வாசி யுடன்பெற்ருர் கைத்தொண் டாகும் அடிமையினல்
வாசி இல்லாக் காசுபடி பெற்று வந்தார் வாகீசர். 260

---

141. ஓங்கும் — பொங்கும் என்றும் பாடம்.

142. திருவாரூரில் அப்பர் சுவாமிகள் திருவீதிப்பணிசெய்து பரவிச் சென்றமை.

143. திருவீழி மிழலையில் திருஞானசம்பந்தர் படிக்காசு வாசியுடன் பெற்றதும் அப்பர் வாசியில்லாக் காசு பெற்றதுங் கூறுகின்றது.

144. வண்ணங் கண்டு நான்உம்மை வணங்கி யன்றிப்
போகேன்என்
றெண்ண முடிக்கும் வாகீசர் இருந்தார் அமுது செய்யாதே
அண்ண லாரும் அதுவுணர்ந்தங் கரசு தம்மைப்
பணிவதற்குத்
திண்ண மாக மன்னனுக்குக் கனவில் அருளிச் செய்கின்
றார். 296

145. அண்ணா மலைமேல் அணி மலையை ஆரா அன்பின்
அடியவர்தங்
கண்ணார் அமுதை விண்ணோரைக் காக்கக் கடலில்
வந்தெழுந்த
உண்ணா நஞ்சம் உண்டானைக் கும்பிட் டுருகுஞ் சிந்தையுடன்
பண்ணார் பதிகத் தமிழ்பாடிப் பணிந்து பரவிப்
பணிசெய்தார். 313

146. கயிலை மால்வரை யாவது காசினி மருங்கு
பயிலு மானுடப் பான்மையோர் அடைவதற் கெளிதோ
அயில்கொள் வேற்படை அமரரும் அணுகுதற் கரிதால்
வெயில்கொள் வெஞ்சுரத் தென்செய்தீர் வந்தென
விளம்பி, 365

147. மீளும் அத்தனை உமக்கினிக் கடன்என விளங்கும்
தோளும் ஆகமும் துவளுமுந் நூல்முனி சொல்ல
ஆளு நாயகன் கயிலையில் இருக்கைகண் டல்லால்
மாளும் இவ்வுடல் கொண்டுமீ ளேன்என மறுத்தார். 366

---

144. திருப்பழையாறையில் சமணர்களால் மறைக்கப்பட்டுள்ள சிவனார் திருவுருவைக் கண்டன்றிப் போகேன் என அப்பர் உறுதி செய்துகொண்டது.

146-150. திருநாவுக்கரசர் காளத்தி கண்டகால் வடகயிலாயம் நினைவுற்றாராக, கயிலை மால்வரைக் கடவுளைக் கண்டன்றி மீளுதலில்லையென் உறுதி செய்துகொண்டு என்புக் தோலுந் தேயச் சென்றுகொண்டிருந்தாரை வேதியருருவில் வந்து இறைவன் மீளும்படி சொல்லியுங் கேளாததால், இறுதியில் திருவையாற்றில் அக்கோலங் காண்க என அவர் அருளப்பட்டார் என்பது.

148. ஆங்கு மற்றவர் துணிவறிந் தவர்தமை அறிய
நீங்கு மாதவர் விசும்பிடைக் கரந்துநீள் மொழியால்
ஓங்கு நாவினுக் கரசனே எழுந்திர்என் றுரைப்பத்
தீங்கு நீங்கிய யாக்கைகொண் டெழுந்தொளி திகழ்வார். 367

149. அண்ண லேஎனை ஆண்டுகொண் டருளிய அமுதே
விண்ணி லேமறைந் தருள்புரி வேதநா யகனே
கண்ணி னுல்திருக் கயிலையில் இருந்தநின் கோலம்
நண்ணி நான்தொழ நயந்தருள் புரியெனப் பணிந்தார். 368

150. தொழுதெ ழுந்தநற் றொண்டரை நோக்கிவிண் தலத்தில்
எழுபெ ருந்திரு வாக்கினுல் இறைவர்இப் பொய்கை
முழுகி நம்மைநீ கயிலையில் இருந்தஅம் முறைமை
பழுதில் சீர்த்திரு வையாற்றிற் காணெனப் பணித்தார். 369

151. பொன்ம லைக்கொடி யுடனமர் வெள்ளியம் பொருப்பில்
தன்மை யாம்படி சத்தியுஞ் சிவமுமாஞ் சரிதைப்
பன்மை யோனிகள் யாவையும் பயில்வன பணிந்தே
மன்னு மாதவர் தம்பிரான் கோயில்முன் வந்தார். 374

152. வெள்ளி வெற்பின்மேல் மரகதக் கொடியுடன் விளங்கும்
தெள்ளு பேரொளிப் பவளவெற் பெனஇடப் பாகம்
கொள்ளு மாமலை யாளுடன் கூடவீற் றிருந்த
வள்ள லாரைமுன் கண்டனர் வாக்கின்மன் னவனுர். 379

153. கண்ட ஆனந்தக் கடலினைக் கண்களால் முகந்து
கொண்டு கைகுவித் தெதிர்விழுந் தெழுந்துமெய் குலைய
அண்டர் முன்புநின் றாடினுர் பாடினுர் அழுதார்
தொண்ட னுர்க்கங்கு நிகழ்ந்தன யார்சொல வல்லார். 380

154. திருஞான யாமுனிவர் அரசிருந்த பூந்துருத்திக்
கருகாக எழுந்தருளி எங்குற்றுர் அப்பர்என
உருகாநின் றும்அடியேன் உம்அடிகள் தாங்கிவரும்
பெருவாழ்வு வந்தெய்தப் பெற்றிங்குற் றேன்என்றுர். 396

155. பிள்ளையார் அதுகேளாப் பெருகுவிரை வுடன்இழிந்தே
உள்ளமிகு பதைப்பெய்தி உடையஅர சினைவணங்க
வள்ளலார் வாகீசர் அவர்வணங்கா முன்வணங்கத்
துள்ளுமான் மறிக்கரத்தார் தொண்டரெலாந் தொழுதார்த்
தார். 397

குலச்சிறை நாயனர் புராணம்

156. குறியில் நான்கு குலத்தின ராயினும்
நெறியின் அக்குலம் நீங்கின ராயினும்
அறிவு சங்கரற் கன்பர் எனப்பெறில்
செறிவு றப்பணிந் தேத்திய செய்கையார். 4

157. பண்பு மிக்கார் பலராய் அணையினும்
உண்ப வேண்டி ஒருவர் அணையினும்
எண்பெ ருக்கிய அன்பால் எதிர்கொண்டு
நண்பு கூர்ந்தமு தூட்டும் நலத்தினர். 6

காரைக்காலம்மையார் புராணம்

158. தலையினல் நடந்து சென்று சங்கரன் இருந்த வெள்ளி
மலையின்மேல் ஏறும் போது மகிழ்ச்சியால் அன்பு பொங்கக்
கலையிளந் திங்கட் கண்ணிக் கண்ணுதல் ஒருபா கத்துச்
சிலைநுதல் இமய வல்லி திருக்கண்நோக் குற்ற தன்றே. 56

159. அம்பிகை திருவுள் ளத்தின் அதிசயித் தருளித் தாழ்ந்து
தம்பெரு மானை நோக்கித் தலையினல் நடந்திங் கேறும்
எம்பெரு மானே ரெற்பின் யாக்கைஅன் பென்னே என்ன
நம்பெரு மாட்டிக் கங்கு நாயகன் அருளிச் செய்வான். 57

---

157. பண்பு — பண்பின் என்றும் பாடம்.

158. பேய்வடிவம் பெற்று அம்மையார் கைலைமலையை நோக்கிச் சென்றவர், அம்மலையின் பாங்கர் அணைந்ததும் காலினல் நடந்து செல்லுதலைத் தவிர்த்துத் தலையினல்நடந்து போதருதலை இமையவல்லியார் பார்த்தார் என்பது.

160. வரும்இவள் நம்மைப் பேணும் அம்மைகாண் உம்மையே
மற்றிப்
பெருமைசேர் வடிவும் வேண்டிப் பெற்றனள் என்று பின்றை
அருகுவந் தணைய நோக்கி அம்மையே என்னுஞ் செம்மை
ஒருமொழி உலகம் எல்லாம் உய்யபவே அருளிச் செய்தார். 58

161. அங்கணன் அம்மை யேஎன் றருள்செய அப்பா என்று
பங்கயச் செம்பொற் பாதம் பணிந்துவீழ்ந் தெழுந்தார்
தம்மைச்
சங்கவெண் குழையி னுருந் தாமெதிர் நோக்கி நம்பால்
இங்குவேண் டுவதென் என்ன இறைஞ்சிநின் றியம்பு
கின்றார். 59

162. இறவாத இன்ப அன்பு வேண்டிப்பின் வேண்டு கின்றார்
பிறவாமை வேண்டும் மீண்டும் பிறப்புண்டேல் நின்னை
என்றும்
மறவாமை வேண்டும் இன்னும் வேண்டும்நான் மகிழ்ந்து
பாடி
அறவாநீ ஆடும் போதுன் அடியின்கீழ் இருக்க என்றார். 60

163. கூடுமா றருள்கொ டுத்துக் குலவுதென் திசையில் என்றும்
நீடுவாழ் பழன மூதூர் நிலவிய ஆலங் காட்டில்
ஆடுமா நடமும் நீகண் டானந்தஞ் சேர்ந்தெப் போதும்
பாடுவாய் நம்மை என்றான் பரவுவார் பற்றாய் நின்றான். 61

திருநீலநக்க நாயனர் புராணம்

164. சீல மெய்த்திருத் தொண்டரோ டமுதுசெய் தருளி
ஞாலம் மிக்கிட நாயகி யுடன்நம்பர் நண்ணும்
காலம் முற்பெற அமுதவர் அழைத்திடக் கடிது
நீல நக்கனார் வந்தடி பணிந்துமுன் நின்றார். 29

---

164. அமுதவர் = திருஞான சம்பந்தர்.

165. நின்ற அன்பரை நீலகண் டப்பெரும் பாணர்க்
கின்று தங்கவோர் இடங்கொடுத் தருளுவீர் என்ன
நன்றும் இன்புற்று நடுமனை வேதியின் பாங்கர்ச்
சென்று மற்றவர்க் கிடங்கொடுத் தனர்திரு மறையோர். 30

166. ஆங்கு வேதியில் அருதசெந் தீவலஞ் சுழிவுற்
றோங்கி முன்னையில் ஒருபடித் தன்றியே ஒளிரத்
தாங்கு நூலவர் மகிழ்வுறச் சகோடயாழ்த் தலைவர்
பாங்கு பாணியா ருடன்அரு ளாற்பள்ளி கொண்டார். 31.

நமிநந்தியடிகள் புராணம்

167. தேவர் பெருமான் எழுச்சிதிரு மணலிக் கொருநாள்
எழுந்தருள
யாவ ரென்னு துடன்சேவித் தெல்லாக் குலத்தி லுள்ளோரும்
மேவ அன்பர் தாமுமுடன் சேவித் தணைந்து விண்ணவர்தங்
காவ லாளர் ஓலக்கம் அங்கே கண்டு களிப்புற்றார். 22

168. பொழுது வைகச் சேவித்துப் புனிதர் மீண்டுங் கோயில்புகத்
தொழுது தம்மூர் மருங்கணைந்து தூய மனையுட் புகுதாதே
இழுதும் இருள்சேர் இரவுபுறங் கடையில் துயில இல்லத்து
முழுதுந் தருமம் புரிமனையார் வந்துட் புகுத மொழிகின்றார்.
23

---

166. வேதி = ஓமகுண்டம். திருநீலகண்டப் பாணர் தங்குதற்கு வீட்டினுள்ளே இடமமைத்துத் தருக என்ற திருஞானசம்பந்தர் சொல்லிற் கிணங்கி, திருநீலநக்கர் நடுமனை வே.தியின் பக்கம் இடங் கொடுக்க, அப் பாணர் பள்ளிகொண்டதால் தீ இன்னும் திகழ்ந்தது என்பது இங்குச் சொல்லப்படுகிறது. சகோடயாழ்த்தலைவர் = திரு நீலகண்ட யாழ்ப்பாணர்.

167. ஏமப் பேறூரிலே தோன்றித் திருவிளக்குத் தொண்டிலே மிக்க ஈடுபாடுடைய நமிநந்தியடிகள் என்னும் அந்தணர், திருவாரூர்க் கடவுள் திருமணலிக்குத் திருவிழா நிமித்தம் எழுந்தருளியதைக் கண்டு வீடு திரும்பினவர், திருவிழாக் காலத்தே பல சாதியினர் மீது பட்டதால் வந்த இழிவுண்டென்று அஞ்சி, நீராடாது இல்லினுள்ளே புகுதற்குக் கூசினார் என்பதும், இறைவன் அருளால் அவர் நல்லறிவு கொளுத்தப்பட்டார் என்பதும் இதுமுதல் வரும் பாடல்களிற் பேசப்படுகின்றன.

169. திங்கள் முடியார் பூசனைகள் முடித்துச் செய்யுங் கடன்முறை
யால்
அங்கி தனைவேட் டமுதுசெய்து பள்ளி கொள்வீர்
என அவர்க்குத்
தங்கள் பெருமான் திருமனைவிக் கெழுச்சி சேவித்
துடன்நண்ண
எங்கும் எல்லா ரும்போத இழிவு தொடக்கிற் றெனைஎன்று, 24

170. ஆத லாலே குளித்தடுத்த தூய்மை செய்தே அகம்புகுந்து
வேத நாதர் பூசனையைத் தொடங்க வேண்டும் அதற்குநீ
சீத நன்னீர் முதலான கொண்டிங் கணைவாய் எனச்செப்பக்
காதல் மனையார் தாமும்அவை கொண்ரு மதற்குக்
கடிதணைந்தார். 25

171. ஆய பொழுது தம்பெருமான் அருளா லேயோ மேனியினில்
ஏயும் அசைவின் அயர்வாலோ அறியோம் இறையும்
தாழாதே
மேய உறக்கம் வந்தணைய விண்ணோர் பெருமான்
கழல்நினைந்து
தூய அன்பர் துயில்கொண்டார் துயிலும் பொழுது
கனவின்கண், 26

172. மேன்மை விளங்குந் திருவாரூர் வீதி விடங்கப்
பெருமாள்தாம்
மான அன்பர் பூசனைக்கு வருவார் போல வந்தருளி
ஞான மறையோய் ஆரூரிற் பிறந்தார் எல்லாம் நங்கணங்கள்
ஆன பரிசு காண்பாய்என் றருளிச் செய்தங் கெதிரகன்
றூர். 27

173. ஆதி தேவர் எழுந்தருள உணர்ந்தார் இரவர்ச் சனைசெய்யா
தேதம் நினைந்தேன் என அஞ்சி எழுந்த படியே வழிபட்டு
மாத ரார்க்கும் புகுந்தபடி மொழிந்து விடியல் விரைவோடு
நாத ஞர்தந் திருவாரூர் புகுத எதிர்அந் நகர்காண்பார். 28

174. தெய்வப் பெருமான் திருவாரூர்ப் பிறந்து வாழ்வார் எல்லாரும்
மைவைத் தனைய மணிகண்டர் வடிவே யாகிப் பெருகொளியால்
மொய்வைத் தமர்ந்த மேனியராம் பரிசு கண்டு முடிகுவித்த
கைவைத் தஞ்சி அவனிமிசை விழுந்து பணிந்து களிசிறந்தார். 29

175. படிவம் மாற்றிப் பழம்படியே நிகழ்வுங் கண்டு பரமர்பால்
அடியேன் பிழையைப் பொறுத்தருள வேண்டும் என்று பணிந்தருளால்
குடியும் திருவா ரூரகத்துப் புகுந்து வாழ்வார் குவலயத்து
நெடிது பெருகுந் திருத்தொண்டு நிகழச் செய்து நிலவுவார். 30

176. நீறு புனைவார் அடியார்க்கு நெடுநாள் நியதி யாகவே
வேறு வேறு வேண்டுவன எல்லாஞ் செய்து மேவுதலால்
ஏறு சிறப்பின் மணிப்புற்றில் இருந்தார் தொண்டர்க் காணியெனும்
பேறு திருநா வுக்கரசர் விளம்பப் பெற்ற பெருமையினர். 31

177. இன்ன வகையால் திருப்பணிகள் எல்லா உலகுந் தொழச் செய்து
நன்மை பெருகும் நமிநந்தி அடிகள் நயமார் திருவீதிச்
சென்னி மதியும் திருநதியும் அலைய வருவார் திருவாரூர்
மன்னர் பாதம் நீழல்மிகும் வளர்பொற் சோதி மன்னினர். 32

திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் புராணம்

178. வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத் துறைவிளங்கப்
பூதபரம் பரைபொலியப் புனிதவாய் மலர்ந்தழுத
சீதவள வயற்புகலித் திருஞான சம்பந்தர்
பாதமலர் தலைக்கொண்டு திருத்தொண்டு பரவுவாம். 1

---

177. நயமார்—நலமார் என்றும் பாடம்.

179. பிரமபுரம் வேணுபுரம் புகலிபெரு வெங்குருநீர்ப்
பொருவில்திருத் தோணிபுரம் பூந்தராய் சிரபுரமுன்
வருபுறவஞ் சண்பைநகர் வளர்காழி கொச்சைவயம்
பரவுதிருக் கழுமலமாம் பன்னிரண்டு திருப்பெயர்த்தால். 41

180. திசையனைத்தின் பெருமையெலாந் தென்திசையே வென்றேற
மிசையுலகும் பிறவுலகும் மேதினியே தனிவெல்ல
அசைவில்செழுந் தமிழ்வழக்கே அயல்வழக்கின் துறைவெல்ல
இசைமுழுதும் மெய்யறிவும் இடங்கொள்ளும் நிலைபெருக, 24

181. அவம்பெருக்கும் புல்லறிவின் அமண்முதலாம் பரசமயப்
பவம்பெருக்கும் புரைநெறிகள் பாழ்படநல் லூழிதொறும்
தவம்பெருக்குஞ் சண்பையிலே தாவில்சரா சரங்களெலாம்
சிவம்பெருக்கும் பிள்ளையார் திருஅவதா ரஞ்செய்தார். 26

182. ஆறுலவு செய்யசடை ஐயர்அரு ளாலே
பேறுலகி னுக்கென வரும்பெரிய வர்க்கு
வேறுபல காப்புமிகை என்றவை விரும்பார்
நீறுதிரு நெற்றியில் நிறுத்திநிறை வித்தார். 43

183. மெய்ம்மேற்கண் துளிபனிப்ப வேறெங்கும் பார்த்தழுவார்
தம்மேலைச் சார்புணர்ந்தோ சாருப்பிள் ளைமைதானோ
செம்மேனி வெண்ணீற்றார் திருத்தோணிச் சிகரம்பார்த்
தம்மேஅப் பாஎன்றென் றழைத்தருளி அழுதருள, 63

---

179. வெங்குரு என்பது ஒரு பெயர். புறவம் என்பதும் சீர்காழி என்பதும் கொச்சை வயம் என்பதும் வேறு பெயர்கள்.

180-181. சிவபாத விருதயர்க்கும் பகவதியார்க்கும் மகனார் பிறந்தமை கூறுகின்றன.

183. தமது மூன்றாவது ஆண்டில் ஒரு நாள் தந்தையார் நீராடச் சென்றகால் தாமும் வருவதாகத் தெரிவித்து உடன்சென்ற பிள்ளையார், தந்தை நீருள் மூழ்கிச் சற்றுநேரம் மறைந்திருந்தகால், "அம்மே யப்பா" என்று அழுதருளினது கூறப்படுகிறது.

184. அழுகின்ற பிள்ளையார் தமைநோக்கி அருட்கருணை
எழுகின்ற திருவுள்ளத் திறையவர்தாம் எவ்வுலகும்
தொழுகின்ற மலைக்கொடியைப் பார்த்தருளித் துணைநகில்கள்
பொழிகின்ற பாலடிசில் பொன்வள்ளத் தூட்டென்ன, 66

185. ஆரணமும் உலகேழும் ஈன்றருளி அனைத்தினுக்கும்
காரணமாய் வளம்பெருகு கருணைதிரு வடிவான
சீரிணங்கு சிவபெருமான் அருளுதலும் சென்றணைந்து
வாரிணங்கு திருநகிற்பால் வள்ளத்துக் கறந்தருளி, 67

186. எண்ணரிய சிவஞானத் தின்னமுதங் குழைத்தருளி
உண்ணடிசில் எனஊட்ட உமையம்மை எதிர்நோக்கும்
கண்மலர்நீர் துடைத்தருளிக் கையிற்பொற் கிண்ணமளித்
தண்ணலைஅங் கழுகைதீர்த் தங்கணனூர் அருள்புரிந்தார். 68

187. யாவருக்குந் தந்தைதாய் எனும்இவர்இப் படியளித்தார்
ஆவதனால் ஆளுடைய பிள்ளையா ராய்அகில
தேவருக்கும் முனிவருக்குந் தெரிவரிய பொருளாகும்
தாவில்தனிச் சிவஞான சம்பந்த ராயினார். 69

188. காழியர் தவமே கவுணியர் தனமே கலைஞானத்
தாழிய கடலே அதனிடை அமுதே அடியார்முன்
வாழிய வந்திம் மண்மிசை வானோர் தனிநாதன்
ஏழிசை மொழியாள் தன்திரு வருள்பெற் றனைஎன்பார். 91

189. மறைவளர் திருவே வைதிக நிலையே வளர்ஞானப்
பொறையணி முகிலே புகலியர் புகலே பொருபொன்னித்
துறைபெரு மணியே சுருதியின் ஒளியே வெளியேவந்
திறையவன் உமையா ளுடனருள் தரஎய் தினையென்பார். 92

---

188-190. சீர்காழி வேதியர்கள் திரு ஞான சம்பந்தர் பாலூட்டப்பெற்ற செய்தியைக் கேட்டு “ இப்படி ஒப்பதோர் அற்புதம் எங்குளது ” என்று சொல்லி, கோயில் வாயிலின் முன்னே நின்று திருஞானசம்பந்தரை எதிரேற்றுத் துதிக்கின்றமை.

190. புண்ணிய முதலே புனமணி அரைஞா ணுடுபோதும்
கண்ணிறை கதிரே கலைவளர் மதியே கவின்மேவும்
பண்ணியல் கதியே பருவம தொருமூ வருடத்தே
எண்ணிய பொருளாய் நின்றவர் அருள்பெற் றனையென்பார். 93

191. சடையானை எவ்வுயிர்க்குந் தாயா னானைச் சங்கரனைச்
சசிகண்ட மவுலி யானை
விடையானை வேதியனை வெண்ணீற் றானை விரவாதார்
புரம்மூன்றும் எரியச் செற்ற
படையானைப் பங்கயத்து மேவி னானும் பாம்பணையில்
துயின்றானும் பரவுங் கோலம்
உடையானை 'உடையானே தகுமோ இந்த ஒள்ளிழையாள்
உள்மெலி' வென் றெடுத்துப் பாட. 482

192. சென்றகா லத்தின் பழுதிலாத் திறமும் இனிஎதிர் காலத்தின்
சிறப்பும்
இன்றெழுந் தருளப் பெற்றபே றிதனால் எற்றைக்குந்
திருவரு ளுடையேம்
நன்றியில் நெறியில் அழுந்திய நாடும் நற்றமிழ் வேந்தனும்
உய்ந்து
வென்றிகொள் திருநீற் றொளியினில் விளங்கும் மேன்மையும்
படைத்தனம் என்பார். 659

---

191. வைப்பூரில் வாழ்ந்த செட்டி ஒருத்தன் தன் ஆறு மகளிரையும் அறுவர்க்குப் பொருள் காரணமாக மணம் புரிவித்தனனாக, ஏழாவது மகள் அவனுடைய மருமகனை உறவொன்றையே கருதி மணம்புரிய உறுதி கொண்டவளாய் அவனோடும் ஓடி வந்த விடத்து, அவன் அரவு தீண்டி மாள மீளாத்துயருக்கு ஆளான அவளுடைய உள்மெலிவுக்காக இரங்கித் திருஞானசம்பந்தர் "சடையாய் எனுமால் சரணீ எனுமால்" எனவருந் தேவாரப் பதிகத்தைப் பாடத் தொடங்கினர் என்று சொல்கின்றுழிச் சேக்கிழார் பெருமான் அருமையான முறையில் இறைவனைத் தாம் துதிப்பதற்கு ஒரு வாய்ப்புக் கண்டது இப்பாட்டால் அறியப்படுகிறது.

சசிகண்ட மவுலியான் — கண்ட சசிமவுலியான் என மாற்றுக. துண்டப் பிறை முடியான் என்பது பொருள்.

192. மதுரையை நண்ணி வருகின்ற பரசமய கோளரியாரைக் குலச் சிறையார் கண்டு வணங்குதலும், அவரும் இவரை யெடுத்து "அரசியாரும் நீரும் நன்மை யுடையீரோ" எனக் கேட்க, மந்திரியார் மொழிந்ததைக் கூறுவது இப்பாட்டு.

193. ஞானத்தின் திருவுருவை நான்மறையின் தனித்துணையை
வானத்தின் மிசையன்றி மண்ணில்வளர் மதிக்கொழுந்தைத்
தேனக்க மலர்க்கொன்றைச் செஞ்சடையார் சீர்தொடுக்குங்
கானத்தின் எழுபிறப்பைக் கண்களிப்பக் கண்டார்கள். 728

194. மன்னவன் மொழிவான் என்னே மதித்தஇக் காலம் ஒன்றில்
வெந்நர கொருபா லாகும் வீட்டின்பம் ஒருபா லாகும்
துன்னுநஞ் சொருபா லாகும் சுவையமு தொருபா லாகும்
என்வடி வொன்றி லுற்றேன் இருதிறத் தியல்பும்
என்பான். 768

195. செய்வதொன் றறிகி லாதார் திகைப்பினல் திரண்ட சாம்பல்
கையினுற் பிசைந்து தூற்றிப் பார்ப்பது கண்ட மன்னன்
எய்திய நகைபி னேடும் ஏடின்னம் அரித்துக் காணும்
பொய்யினுல் மெய்யை யாக்கப் புகுந்தநீர் போமின்
என்றுன். ·792

196. கார்கெழு பருவம் வாய்ப்பக் காமுறு மகளிர் உள்ளம்
சீர்கெழு கணவன் தன்பால் விரைவுறச் செல்லு மாபோல்
நீர்கெழு பௌவம் நோக்கி நிரைதிரை இரைத்துச் செல்லும்
பார்கெழு புகழின் மிக்க பண்புடை வைகை யாறு. 812

---

193. திருஞானசம்பந்தர் தங்கியிருந்த மடத்திற்குப் போய் மங்கையர்க்கரசியாரும் குலச்சிறையாரும் அரசன் பிணிதீர்க்க அழைக்கச் சென்றகால் அவர்தம் திருவுருவைக் கண்டு களித்தமை சொல்லப்படுகிறது.

194. வலப்பாக வெப்பினைச் சம்பந்தப் பெருமான் போக்கிவிட்டாராக, இடப்பாக வெப்பு அதிகரித்ததாக, அவ்வேளையில் அரசன் கூறியது.

195. அனல் வாதத்தில் தோற்றமையை ஒப்புக்கொள்ள மனமில்லாத சமணரை நோக்கிப் பாண்டியன் கூறியது.

196. வைகையாற்று வருணனை.
விரைவுற — விரவுற என்றும் பாடம்.

197\. திருவுடைப் பிள்ளை யார்தந் திருக்கையால் இட்ட வடு
மருவுறும் பிறவி யாற்றில் மாதவர் மனஞ்சென் றாற்போல்
பொருபுனல் வைகை யாற்றில் எதிர்ந்துநீர் கிழித்துப் போகும்
இருநிலத் தோர்கட் கெல்லாம் இதுபொருள் என்று காட்டி, 846

198\. எம்பிரான் சிவனே எல்லாப் பொருளும்என் றெழுதும் ஏட்டில்
தம்பிரான் அருளால் வேந்தன் தன்னைமுன் ஓங்கப் பாட
அம்புய மலராள் மார்பன் அனபாயன் என்னுஞ் சீர்த்திச்
செம்பியன் செங்கோ லென்னத் தென்னன்கூன் நிமிர்ந்த தன்றே. 847

199\. தென்னவன் தனக்கு நீறு சிரபுரச் செல்வர் ஈந்தார்
முன்னவன் பணிந்து கொண்டு முழுவதும் அணிந்து நின்றான்
மன்னன்நீ றணிந்தான் என்று மற்றவன் மதுரை வாழ்வார்
துன்னிநின் றார்கள் எல்லாம் தூயநீ றணிந்து கொண்டார். 857

200\. மருவியவ ழிசைபொழிய மனம்பொழியும் பேரன்பால்
பெருகியகண் மழைபொழியப் பெரும்புகலிப்பெருந்தகையார்
உருகியஅன் புள்ளலைப்ப உமைதழுவக் குழைந்தவரைப்
பருகியமெய் யுணர்வினொடும் பரவியே புறத்தணைந்தார். 997

---

197\. புனல் வாதத்தில் திருஞானசம்பந்தர் வெல்வதைப் பற்றிப் பேசுகிறது.

199\. மூன்று வாதங்களிலும் திருஞானசம்பந்தர் வென்ற பிறகு, அரசனையும் மதுரை மக்களையும் அவர் திருநீறு அணிவித்ததைக் கூறுகிறது.

200\. திருஞானசம்பந்தர் காஞ்சியில் தழுவக் குழைந்த இறைவனை வழிபட்டமை சொல்லப்படுகிறது.

201. தாழ்ந்தெழுந்து திருமலையைத் தொழுது கொண்டே
தடஞ்சிலா தலசோபா னத்தால் ஏறி
வாழ்ந்திமையோர் குழாம்நெருங்கு மணிநீள் வாயில்
மருங்கிறைஞ்சி உள்புகுந்து வளர்பொற் கோயில்
சூழ்ந்துவலங் கொண்டிறைவர் திருமுன் பெய்தித்
தொழுதுதலை மேற்கொண்ட செங்கை போற்றி
வீழ்ந்தெழுவார் கும்பிட்ட பயன்காண் பார்போல்
மெய்வேடர் பெருமானைக் கண்டு வீழ்ந்தார். 1024

202. மண்ணி னிற்பிறந் தார்பெறும் பயன்மதி சூடும்
அண்ண லார்அடி யார்தமை அமுதுசெய் வித்தல்
கண்ணி னலவர் நல்விழாப் பொலிவுகண் டார்தல்
உண்மை யாமெனில் உலகர்முன் வருகென உரைப்பார். 1087

203. எண்ணிலாண் டெய்தும் வேதாப் படைத்தவள் எழிலின் வெள்ளம்
நண்ணுநான் முகத்தாற் கண்டான் அவளினும் நல்லாள் தன்பால்
புண்ணியப் பதினு ருண்டு பேர்பெறும் புகலி வேந்தர்
கண்ணுதல் கருணை வெள்ளம் ஆயிர முகத்தாற் கண்டார். 1109

204. அணங்கினும் மேம்படும் அன்னம் அன்னவள்
பணம்புரி அரவரைப் பரமர் முன்பணிந்
திணங்கிய முகில்மதி சண்பை ஏந்தலை
வணங்கியே நின்றனள் மண்ணு ளோர்தொழ, 1111

---

201. திருக்காளத்தியில், சம்பந்தர் காளத்தியப்பரையுங் கண்ணப்பரையுந் தெரிசித்தது.

தடஞ்சிலா தலசோபா னத்தால் — தடஞ்சிலைச்சோபானநிலை தன்னல் என்றும் பாடம்.

202. திருமயிலையில் வணிகர் குடியிற் றோன்றிய சிவநேசர் என்பார் மகளாகிய பூம்பாவையின் என்பு நிறைந்த மட்குடத்தினின்றும் அவளை எழுப்பும் பொருட்டுச் சம்பந்தர் சொற்றது.

203. வேதாப் படைத்தவள் — திலோத்தமை.
அவளினும் நல்லாள் — சிறந்த அழகு பொருந்திய பூம்பாவை.

204. அரவு அரைப் பரமர் = அரவினை அரையின்கண் அணிந்துள்ள சிவனார்.

205. பெருகிய அருள்பெறும் வணிகர் பிள்ளையார்
மருவுதா மரைஅடி வணங்கிப் போற்றிநின்
றருமையால் அடியனேன் பெற்ற பாவையைத்
திருமணம் புணர்ந்தருள் செய்யும் என்றலும், 1113

206. மற்றவர் தமக்குவண் புகலி வாணர்நீர்
பெற்றபெண் விடத்தினல் வீந்த பின்னையான்
கற்றைவார் சடையவர் கருணை காண்வர
உற்பவித் திதலால் உரைத காதென, 1114

207. பான்மையால் வணிகரும் பாவை தன்மணம்
ஏனையோர்க் கிசைகிலேன் என்று கொண்டுபோய்
வானுயர் கன்னிமா டத்து வைத்தனர்
தேனமர் கோதையும் சிவத்தை மேவினள். 1117

208. சங்கொடு தாரை சின்னந் தனிப்பெருங் காளந் தாளம்
வங்கியம் ஏனை மற்று மலர்துளைக் கருவி எல்லாம்
பொங்கிய ஒலியின் ஓங்கிப் பூசுரர் வேத கீதம்
எங்கணும் எழுந்து மல்கத் திருமணம் எழுந்த தன்றே. 1199

209. கோதையர் குழல்சூழ் வண்டின் குழாத்தொலி ஒருபால் கோல
வேதியர் வேத வாய்மை மிகுமொலி ஒருபால் மிக்க
ஏதமில் விபஞ்சி வீணை யாழொலி ஒருபால் ஏத்தும்
நாதமங்கலங்கள் கீத நயப்பொலி ஒருபா லாக. 1200

210 தேவர்கள் தேவர் தாமுந் திருவருள் புரிந்து நீயும்
பூவையன் னளும் இங்குன் புண்ணிய மணத்தின் வந்தார்
யாவரும் எம்பாற் சோதி இதனுள்வந் தெய்தும் என்று
மூவுலகொளியால் விம்ம முழுசுடர்த் தாணு வாகி, 1246

---

206. உற்பவித் திதலால் — உற்பவித் திடுதலால், உற்பவிப் பித்தலால் என்றும் பாடம்.

207. வணிகர் — சிவநேசர்.

208. திருநல்லூரில் நம்பாண்டார் நம்பி மகளைத் திரு ஞான சம்பந்தர் திருமணஞ் செய்துகொள்ளு நாளில் எழுந்த மணவொலிகள்.

210. திருமணமானவுடன், திருநல்லூர்ப் பெருமணக்கோயிலை எய்தி, “நாதனே, உன் பாத மெய்ந்நிழற் சேரும் பருவம் ஈது” என்று திருஞானசம்பந்தர் பாட, இறைவன் அருள் செய்தது.

211. கோயிலுட் படமேல் ஓங்குங் கொள்கையாற் பெருகுஞ் சோதி
வாயிலை வகுத்துக் காட்ட மன்னுசீர்ப் புகலி மன்னர்
பாயின ஒளியால் நீடு பரஞ்சுடர்த் தொழுது போற்றி
மாயிருள் ஞாலம் உய்ய வழியினை அருளிச் செய்வார். 1247

212. ஞானமெய்ந் நெறிதான் யார்க்கும் நமச்சிவா யச்சொ லாமென்
றூனமிர் நமச்சி வாயத் திருப்பதி கத்தை அங்கண்
வானமும் நிலனும் கேட்க அருள்செய்திம் மணத்தில் வந்
தோர்
ஈனமாம் பிறவி தீர யாவரும் புகுக என்ன, 1248

213. வருமுறைப் பிறவி வெள்ளம் வரம்புகா ணாதழுந்தி
உருவெனுந் துயரக் கூட்டில் உணர்வின்றி மயங்கு வார்கள்
திருமணத் துடன்சே வித்து முன்செலுஞ் சிறப்பி னாலே
மருவிய பிறவி நீங்க மன்னுசோ தியினுட் புக்கார். 1249

ஏயர்கோன் கலிக்காம நாயனர் புராணம்

214. ஆரு விருப்பின் மற்றவர்தாம் அருமை யால்முன் பெற்
றெடுத்த
தேனர் கோதைச் சிங்கடியார் தமையும் அவர்பின் திரு
வுயிர்த்த
மானர் நோக்கின் வனப்பகையார் தமையும் கொணர்ந்து
வன்தொண்டர்
தூநாண் மலர்த்தாள் பணிவித்துத் தாமும் தொழுது
சொல்லுவார். 38

212. நமச்சிவாயத் திருப்பதிகம்

காத லாகிக் கசிந்துகண் ணீர்மல்கி
ஓது வார்தமை நன்னெறிக் குய்ப்பது
வேத நான்கினு மெய்ப்பொரு ளாவது
நாத னாமம் நமச்சி வாயவே

என வரும் பாட்டை முதற்பாட்டாகக் கொண்டது.

213. நீங்க — நீங்கி என்று பாடம்.

214-5. கோட்புலியார் தாம் பெற்றெடுத்த சிங்கடியார் வனப் பகையார் ஆகிய இரு மகளிரையும் சுந்தரர்க்குத் திருநாட்டியத்தான்குடியின்கண்ணே அளித்து அவர்களை அடிமையாக ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று சொல்ல, அவர்களை மக்களாகக் கொண்டார் சுந்தரர் என்பது.

215. அடியேன் பெற்ற மக்களிவர் அடிமை யாகக் கொண்டருளிக்
கடிசேர் மலர்த்தாள் தொழுதுய்யக் கருணை அளிக்க
வேண்டும்எனத்
தொடிசேர் தளிர்க்கை இவர்எனக்குத் தூய மக்கள் எனக்
கொண்டப்
படியே மகண்மை யாக்கொண்டார் பரவை யார்தங்
கொழுநனார். 39

216. நீற்றழகர் பாட்டுவந்து திருவிளையாட் டினில்நின்று
மாற்றுறுசெம் பொன்குளத்து வருவியா தொழிந்தருள
ஆற்றினில்விட் டுக்குளத்தில் தேடுவீர் அருள்இதுவோ
சாற்றும்எனக் கோற்றொடியார் மொழிந்தருளத் தனித்தொண்
டர், 131

217. மீட்டும்அவர் பரவுதலும் மெய்யன்பர் அன்பில்வரும்
பாட்டுவந்து கூத்துவந்தார் படுவாசி முடிவெய்தும்
ஓட்டறுசெம் பொன்னொக்க ஒருமாவுங் குறையாமற்
காட்டுதலும் மகிழ்ந்தெடுத்துக் கொண்டுகரை ஏறினார். 137

218. கைகள் கூப்பி முன்அணைவார் கம்பை ஆறு பெருகிவர
ஐயர் தமக்கு மிகஅஞ்சி ஆரத் தழுவிக் கொண்டிருந்த
மையு லாவுங் கருநெடுங்கண் மலையாள் என்றும் வழிபடுபூஞ்
செய்ய கமலச் சேவடிக்கீழ்த் திருந்து காத லுடன்வீழ்ந்
தார். 188

219. வீழ்ந்து போற்றிப் பரவசமாய் விம்மி எழுந்து மெய்யன்பால்
வாழ்ந்த சிந்தை யுடன்பாடி மாறா விருப்பிற் புறம்போந்து
சூழ்ந்த தொண்ட ருடன்மருவும் நாளில் தொல்லைக் கச்சிநகர்த்
தாழ்ந்த சடையார் ஆலயங்கள் பலவுஞ் சார்ந்து வணங்கு
வார். 189

---

216. இறைவன் திருமுதுகுன்றத்தில் அளித்த பொன்னை மணிமுத்தாற்றில் இட்டு வந்த சுந்தரர் இப்பொழுது திருவாரூர்க் குளத்தில் வடகீழ்பாற் கரையை நண்ணிக் குளத்திலிறங்கித் தடவிப் பார்க்கவும், அவரது பாட்டைக் கேட்கும் விருப்புடைய கடவுள் பொன்னை வருவியாது தாமதித்தார் என்பது.

217. படுவாசி = நேர்ந்த வேறுபாடு.

218. காஞ்சியில், திருவேகாம்பரக் கோயிலுட் சென்ற சுந்தரர் வழிபட்டவாறு.

220. அன்பு நாரா அஞ்செழுத்து நெஞ்சு தொடுக்க அலர்
தொடுத்தே
என்புள் உருக்கும் அடியாரைத் தொழுது நீங்கி வேறிடத்து
முன்பு போலத் திரை நீக்கி முதல்வர் சாத்தும் பணிகொடுத்து
மின்போல் மறையுஞ் சங்கிலியார் தம்மை விதியாற் கண்ணுற்
றார். 226

221. மங்கை யொருபால் மகிழ்ந்ததுவும் அன்றி மணிநீள்
முடியின்கண்
கங்கை தன்னைக் கரந்தருளுங் காதல் உடையீர் அடியேனுக்
கிங்கு நுமக்குத் திருமாலை தொடுத்தென் உள்ளத் தொடை
அவிழ்த்த
திங்கள் வதனச் சங்கிலியைத் தந்தென் வருத்தந்
தீரும்என ; 232

222. சாருந் தவத்துச் சங்கிலிகேள் சால என்பால் அன்புடையான்
மேரு வரையின் மேம்பட்ட தவத்தான் வெண்ணெய் நல்லூ
ரில்
யாரும் அறிய யான்ஆள உரியான் உன்னை எனையிரந்தான்
வார்கொள் நகிலாய் நீஅவனை மணத்தால் அணைவாய்
மகிழ்ந்தென்றார். 239

223. விண்ணாள்வார் அமுதுண்ண மிக்கபெரு விடமுண்ட
கண்ணாளா கச்சிஏ கம்பனே கடையானேன்
எண்ணாத பிழைபொறுத்திங் கியான்காண எழிற்பவள
வண்ணாகண் ணளித்தருளாய் எனவீழ்ந்து வணங்கினார். 286

---

220. திருவொற்றியூரில் ஞாயிறு கிழவர் புதல்வியாய்த் தோன்றிய சங்கிலியார் கன்னி மாடத்தின்கண் இருந்து சிவத்தொண்டு செய்து வருகின்றவரை ஒரு நாள் சுந்தரர் கண்டார் என்பது. என்புள்ளுருகும் என்றும் பாடம்.

221. சுந்தரரது வேண்டுகோள்.

222. கனவிற் றோன்றி யிறைவன் சங்கிலியாருக்குக் கூறியது.

223. செய்த சபதத்திற்கு மாறாகத் திருவொற்றியூரை விட்டு நீங்கியதாற் கண்ணிழந்த சுந்தரர் காஞ்சியில் இறைவனை வேண்டி வணங்குதல்.

224. பங்கயச்செங் கைத்தளிரால் பனிமலர்க்கொண் டருச்சித்துச்
செங்கயற்கண் மலைவல்லி பணிந்தசே வடிநினைந்து
பொங்கிய அன் பொடுபரவிப் போற்றிய ஆ ரூரருக்கு
மங்கைதழு வக்குழைந்தார் மறைந்தஇடக் கண்கொடுத்
தார். 287

225. பாதி மதிவாழ் முடியாரைப் பயில்பூ சனையின் பணிபுரிவார்
பாதி இரவில் இங்கணைந்த தென்னோ என்று பயமெய்திப்
பாதி உமையாள் திருவடிவிற் பரம ராவ தறியாதே
பாதி மதிவாள் நுதலாரும் பதைத்து வந்து கடைதிறந்
தார். 339

226. கங்கைநீர் கரந்த வேணி கரந்தவர் அருளிச் செய்வார்
நங்கைநீ மறாது செய்யின் நான்வந்த துரைப்ப தென்ன
அங்கயல் விழியி னாரும் அதனைநீர் அருளிச் செய்தால்
இங்கெனக் கிசையு மாகில் இசையலாம் என்று சொல்லி, 341

227. என்நினைந் தணைந்த தென்பால் இன்னதென் றருளிச் செய்
தால்
பின்னைய தியலு மாகில் ஆம்எனப் பிரானார் தாமும்
மின்னிடை மடவாய் நம்பி வரஇங்கு வேண்டும் என்ன
நன்னுத லாருஞ் சால நன்றுநம் பெருமை என்பார். 342

228. பங்குனித் திருநா ளுக்குப் பண்டுபோல் வருவா ராகி
இங்கெனைப் பிரிந்து போகி ஒற்றியூர் எய்தி அங்கே
சங்கிலித் தொடக்குண் டாருக் கிங்கொரு சார்வுண் டோநீர்
கங்குலின் வந்து சொன்ன காரியம் அழகி தென்றார். 343

---

225. *திருவாரூருக்குத் திரும்பிய சுந்தரரை மீண்டும் வீட்டில் எற்றுக்கொள்ளவேண்டும் என்று பரவையாரிடங் கூறும் பொருட்டு இறைவன் அர்ச்சகர் வடிவில் நள்ளிரவில் பரவையார் மனைக்கேகி, "பாவாய், திறவாய்" என்றழைப்ப அவர் பதைத்து வந்து வாயில் திறந்தமை கூறப்படுகிறது.*

227. *பரவையாரது உரமுடை நெஞ்சு அறியற்பாற்று.*
*வர இங்கு — வரப்பெற என்றும் பாடம்.*

229\. நாதரும் அதனைக் கேட்டு நங்கைநீ நம்பி செய்த
ஏதங்கள் மனத்துக் கொள்ளா தெய்திய வெகுளி நீங்கி
நோதக ஒழித்தற் கன்றோ நுன்னையான் வேண்டிக் கொண்ட
தாதலின் மறுத்தல் செய்ய அடாதென அருளிச் செய்தார். 344

230\. அருமறை முனிவ ரான ஐயரைத் தைய லார்தாம்
கருமம்ஈ தாக நீர்இக் கடைத்தலை வருகை மற்றும்
பெருமைக்குத் தகுவ தன்றால் ஒற்றியூர் உறுதி பெற்றார்
வருவதற் கிசையேன் நீரும் போம்என மறுத்துச் சொன்
னார். 345

231\. வானவர் உய்ய வேண்டி மறிகடல் நஞ்சை உண்டீர்
தானவர் புரங்கள் வேவ மூவரைத் தவிர்த்தாட் கொண்டீர்
நான்மறைச் சிறுவர்க் காகக் காலனைக் காய்ந்து நட்டீர்
யான்மிகை உமக்கின் றானால் என்செய்வீர் போதா தென்
றான். 354

232\. ஆவதே செய்தீர் இன்றென் அடிமைநீர் வேண்டா விட்டால்
பாவியேன் தன்னை அன்று வலியஆட் கொண்ட பற்றென்
நோவுமென் அழிவுங் கண்டீர் நுடங்கிடை அவள்பால் இன்று
மேவுதல் செய்யீ ராகில் விடும்உயிர் என்று வீழ்ந்தார். 355

233\. துளிவளர் கண்ணீர் வாரத் தொழுதுவிண் ணப்பஞ் செய்வார்
ஒளிவளர் செய்ய பாதம் வருந்தஓர் இரவுமாறா
தளிவரும் அன்பர்க் காக அங்கொடிங் குழல்வீ ராகி
எளிவரு வீரு மானால் என்செய்கேன் இசையா தென்றார். 366

---

230\. வருகை மற்றும் — வருதல் நந்தம் என்றும் பாடம்.

231\. பரவையார் மறுத்தமையை இறைவன் வந்து சுந்தரர்க்குச்சொல்ல, "நீர் உரைத்தாற் பரவையோ மறுப்பாள், யான் நும் அடிமை யல்லேன்போலும்" என்று சுந்தரர் கூறி மேலுஞ் சொல்லுவது.

233\. மீண்டும் இறைவன் வந்து பரவையார்க்கு உணர்த்த, சுந்தரர் வருதற்கு இணங்குகின்ற பரவையார் கூறுவது.

### சாக்கிய நாயனார் புராணம்

234. கல்லாலே எறிந்ததுவும் அன்பான படிகாணில்
வில்வேடர் செருப்படியுந் திருமுடியின் மேவிற்றால்
நல்லார்மற் றவர்செய்கை அன்பாலே நயந்ததனை
அல்லாதார் கல்லென்பார் அரனார்க்கஃ தலராமால். 14

### புகழ்ச்சோழ நாயனார் புராணம்

235. கயமொடு கயமெதிர் குத்தின
அயமுடன் அயமுனை முட்டின
வயவரும் வயவரு முற்றனர்
வியனமர் வியலிட மிக்கதே. 20

236. மலையொடு மலைகள் மலைந்தென
அலைமத அருவி கொழிப்பொடு
சிலையினர் விசையின் மிசைத்தெறு
கொலைமத கரிகொலை யுற்றவே. 21

237. தார்தாங்கிக் கடன்முடித்த சடைதாங்குந் திருமுடியார்
நீர்தாங்குஞ் சடைப்பெருமான் நெறிதாங்கண் டவரானார்
சீர்தாங்கும் இவர்வேணிச் சிரந்தாங்கி வரக்கண்டும்
பார்தாங்க இருந்தேனோ பழிதாங்கு வேனென்றார். 36

---

234. சாக்கிய நாயனார் சைவத்திற் பிறந்து சாக்கியம் புக்காராயினும், சிவலிங்க வழிபாட்டு விருப்புடையராய் நாடோறும் சிவலிங்கங் கண்டு உண்ணும் நியதியுடையோராய் ஒழுகுங்கால் கல்லையே அலரென நினைத்து எறிந்துவந்தாராக, அக்கல்லே அலரானமை சொல்லப்படுகிறது.

235. புகழ்ச் சோழருடைய படையும் அவர் பகைவன் அதிகனுடைய படையும் பொருதது சொல்லப்படுகிறது.

237. தம்முன் கொணரப்பட்ட பகைவர் தலைகளில் ஒன்றின் நடுவே சிவனடியார் ஒருவருடைய புன்சடையைக் கண்டு புகழ்ச் சோழர் நடுங்கிக் கலங்கிக் கண்ணீர்பொழிந்து நினைத்தது.

### கழற்சிங்க நாயனர் புராணம்

238. வார்ந்திழி குருதி சோர மலர்க்கருங் குழலுஞ் சோரச்
சோர்ந்துவீழ்ந் தரற்றுந் தோகை மயிலெனத் துளங்கி மண்ணில்
சேர்ந்தயர்ந் துரிமைத் தேவி புலம்பிடச் செம்பொற் புற்றுள்
ஆர்ந்தபே ரொளியைக் கும்பிட் டரசரும் அணைய வந்தார். 7

239. கட்டிய உடைவாள் தன்னை உருவிஅக் கமழ்வா சப்பூத்
தொட்டுமுன் னெடுத்த கையாம் முற்படத் துணிப்ப தென்று
பட்டமும் அணிந்து காதல் பயில்பெருந் தேவி யான
மட்டவிழ் குழலாள் செங்கை வளையொடுந் துணித்தா ரன்றே. 10

### கோட்புலி நாயனர் புராணம்

240. தந்தையார் தாயார்மற் றுடன்பிறந்தார் தாரங்கள்
பந்தமார் சுற்றத்தார் பதியடியார் மதியணியும்
எந்தையார் திருப்படிமற் றுண்ணஇசைந் தார்களையும்
சிந்தவாள் கொடுதுணித்தார் தீயவினைப் பவந்துணிப்பார். 9

---

237. தம்முன் கொணரப்பட்ட பகைவர் தலைகளில் ஒன்றின் நடுவே சிவனடியார் ஒருவருடைய புன்சடையைக் கண்டு புகழ்ச் சோழர் நடுங்கிக் கலங்கிக் கண்ணீர் பொழிந்து நினைத்தது.

238-9. பல்லவத் தோன்றலார் கழற்சிங்கருடைய காதல் மனைவி திருவாரூர்க் கோயிலில் மலர் மண்டபத்தருகே வீழ்ந்த புதுப்பூ ஒன்றை மோந்ததற்காகச் செருத்துணை யென்பார் அவளது மூக்கைப்பிடித்து அரிந்தாராக, அதனை யறிந்த கழற்சிங்கர் "அப்பூவைத். தொட்டுமுன் எடுத்த கையன்றே முன்னர்த் துணிக்கத்தக்கது" என்று சொல்லி அங்ஙனஞ் செய்தார் என்பது.

239. கையாம் — கையே என்றும் பாடம்.

240. நாட்டியத்தான் குடியிலே தோன்றிய கோட்புலியார் என்னும் வேளாளர் அரசர்க்குற்றுழி யுதவச் சென்ற காலத்து வைத்த நெற்கூடுகளில் உள்ள நெல்லைச் சிவத்தொண்டிற்கே என வைத்துப் போயிருந்தும், பெரும்பசி யுழன்ற காரணமாக அந்நெல்லினை யெடுத்து உண்டு பின் கொடுப்போம் என்றிருந்த சுற்றத்தார் அனைவரையும் மீண்டுவந்த கோட்புலியார் துணித்து விட்டார் என்பது.

பதியடியார் = அப்பதியிலுள்ள தம் ஏவலாளர்கள். நீற்றழித்தங் கருவிதர நீற்றின்மிசை வழிந்திழிய என்றும் பாடம்.

### பத்தராய்ப் பணிவார் புராணம்

241. ஈசனையே பணிந்துருகி இன்பமிகக் களிப்பெய்திப்
பேசினவாய் தழுதழுப்பக் கண்ணீரின் பெருந்தாரை
மாசிலா நீறழித்தங் கருவிதர மயிர்சிலிர்ப்பக்
கூசியே உடல்கம்பித் திடுவார்மெய்க் குணமிக்கார். 6

242. நின்றாலும் இருந்தாலுங் கிடந்தாலும் நடந்தாலும்
மென்றாலும் துயின்றாலும் விழித்தாலும் இமைத்தாலும்
மன்றாடு மலர்ப்பாதம் ஒருகாலும் மறவாமை
குன்றாத உணர்வுடையார் தொண்டராங் குணமிக்கார். 7

### முழுநீறு பூசிய முனிவர் புராணம்

243. ஆரணியத் துவர்ந்தகோ மயத்தைக் கைக்கொண்
டழுகுறநுண் பொடியாக்கி ஆவின் சுத்த
நீரணிவித் தத்திரமந் திரத்தி னாலே
நிசயமுறப் பிடித்தோம நெருப்பில் இட்டுச்
சீரணியும் படிவெந்து கொண்ட செல்வத்
திருநீறும் அநுகற்பம் தில்லை மன்றுள்
வாரணியு நகிலுமையாள் காண ஆடும்
மாணிக்கக் கூத்தர்மொழி வாய்மை யாலே, 3

244. அடவிபடும் அங்கியினால் வெந்த நீறும்
ஆனிலைகள் அனல்தொடக்க வெந்த நீறும்
இடவகைகள் எரிகொளுவ வெந்த நீறும்
இட்டிகைகள் சுட்டஎரி பட்ட நீறும்
உடனன்றி வெவ்வேறே ஆவின் நீரால்
உரைதிகழு மந்திரங்கொண் டுண்டை யாக்கி
மடமதனில் பொலிந்திருந்த சிவாங்கி தன்னால்
வெந்ததுமற் றுபகற்பம் மரபின் ஆகும். 4

---

241-2. இவர் தொகையடியார்.

243. நிசயமுற — நிரட்சியாகும்படி.

மாணிக்கக் கூத்தர் மொழி வாய்மை — சிவாகமம்.

இந்தப்பாட்டும் வருகின்ற பாட்டும் பழைய பிரதிகளில் இல்லாததால் இடைச்செருகப்பட்ட பாக்கள் எனக் கருதப்படுகின்றன.

244. இட்டிகை = செங்கல்.

### அப்பாலும் அடிச்சார்ந்தார் புராணம்

245. மூவேந்தர் தமிழ்வழங்கு நாட்டுக் கப்பால் முதல்வனார்
அடிச்சார்ந்த முறைமை யோரும்
நாவேய்ந்த திருத்தொண்டத் தொகையிற் கூறும்
நற்றொண்டர் காலத்து முன்னும் பின்னும்
பூவேய்ந்த நெடுஞ்சடைமேல் அடம்பு தும்பை புதியமதி
நதிஇதழி பொருந்த வைத்த
சேவேந்து வெல்கொடியான் அடிச்சார்ந் தாரும்
செப்பிய அப் பாலுமடிச் சார்ந்தார் தாமே. 7

### பூசலார் நாயனார் புராணம்

246. நின்றவூர்ப் பூசல் அன்பன் நெடிதுநாள் நினைந்து செய்த
நன்றுநீ டால யத்து நாளைநாம் புகுவோம் நீஇங்
கொன்றிய செயலை நாளை ஒழிந்துபின் கொள்வாய் என்று
கொன்றைவார் சடையார் தொண்டர் கோயில்கொண் டருளப்
போந்தார். 10

### மங்கையர்க்கரசியார் புராணம்

247. மங்கையர்க்குத் தனியரசி எங்கள் தெய்வம்
வளவர்திருக் குலக்கொழுந்து வளைக்கை மானி
செங்கமலத் திருமடந்தை கன்னி நாடாள்
தென்னர்குலப் பழிதீர்த்த தெய்வப் பாவை
எங்கள்பிரான் சண்பையர்கோன் அருளி னாலே
இருந்தமிழ்நா டுற்றஇடர் நீக்கித் தங்கள்
பொங்கொளிவெண் திருநீறு பரப்பி னாரைப்
போற்றுவார் கழல்எம்மாற் போற்ற லாமே. 1

---

245. இவருந் தொகையடியார் ஆவர்.

246. தொண்டை நாட்டுத் திரு நின்ற வூரிலே வாழ்ந்த பூசலார் என்பார் அமைத்த மனக்கோயிலுக்குச் செல்வதால், "அந்நாள் ஒழிந்துப் பின்னொரு நாள் வைத்துக் கொள்வாய்" என இறைவன் கற்றளியமைத்த காடவர் கோமானுக்குக் கனவிற் றோன்றிக் கூறியது.

247. சேக்கிழார்க்கு மங்கையர்க்கரசியார்பால் உள்ள அன்பும் மதிப்பும் இப்பாட்டால் அறியற்பாலன.
போற்றுவார் "கழல்" என்பதன்கண் "புகழ்" என்றும் பாடம்.

### நேசநாயனுர் புராணம்

248. ஆங்கவர் மனத்தின் செய்கை அரனடிப் போதுக் காக்கி
ஓங்கிய வாக்கின் செய்கை உயர்ந்தஅஞ் செழுத்துக் காக்கித்
தாங்குகைத் தொழிலின் செய்கை தம்பிரான் அடியார்க் காகப்
பாங்குடை உடையுங் கீளும் பழுதில்கோ வணமும்
நெய்வார். 3

### வெள்ளானைச் சருக்கம்

249. சென்று கண்ணுதல் திருமுன்பு தாழ்ந்துவீழ்ந் தெழுந்துசே
ணிடைவிட்ட
கன்று கோவினைக் கண்டணைந் ததுஎனக் காதலின்
விரைந்தெய்தி
நின்று போற்றிய தனிப்பெருந் தொண்டரை நேரிழை
வலப்பாகத்
தொன்றும் மேனியர் ஊரனே வந்தனை என்றனர்
உலகுய்ய. 42

250. என்றும் இன்பம் பெருகும் இயல்பினுல்
ஒன்று காதலித் துள்ளமும் ஓங்கிட
மன்று ளாரடி யாரவர் வான்புகழ்
நின்றதெங்கும் நிலவி உலகெலாம். 53

---

248. காம்பீலி நகரிலே சாலியர் குலத்திலே தோன்றிய இவர் மனமொழிமெய்களாற் சிவத்தொண்டே புரிந்தமையும், சாதித்தொழிலே சிவத்தொண்டான விதமுஞ் சொல்லப்படுகின்றன.

249. வெள்ளானைமீது ஏறிவந்து பக்கத்தே நின்ற சுந்தரரைப் பார்த்துக் கண்ணுதலார் "விளையாட்டை முடித்துத் திரும்பினுயா" என்பார்போலவினுயது.

250. "உலகெலோம்" எனத் தொடங்கியவாறே இந்நூல் முடிகின்றது கருதற்பாற்று.
வான்புகழ் = மேலான புகழ்.

பரஞ்சோதி முனிவர்

இயற்றிய

# திருவிளையாடற் புராணம்

சோக்கலிங்கர் வணக்கம்

251. பூவி னாயகன் பூமக னாயகன்
காவி னாயக னாதிக் கடவுளர்க்
காவி நாயக னங்கயற் கண்ணிமா
தேவி நாயகன் சேவடி யேத்துவாம். 7

தட்சிணா மூர்த்தி வணக்கம்

252. கல்லாலின் புடையமர்ந்து நான்மறையா றங்கமுதற்
கற்ற கேள்வி
வல்லார்க ணால்வருக்கும் வாக்கிறந்த பூரணமாய்
மறைக்கப் பாலா
யெல்லாமா யல்லதுமா யிருந்ததனை யிருந்தபடி
யிருந்து காட்டிச்
சொல்லாமற் சொன்னவரை நினையாம னினைந்துபவத்
தொடக்கை வெல்வாம். 13

மூர்த்தி விசேடம்

253. இத்தகு சயம்பு தன்னை யேனைய சயம்பு வெல்லா
நித்தமுந் தெரிசித் தேகு நிருமல வொளியா மிந்த
வுத்தம விலிங்கங் கண்டோ ருரையுணர் வொடுங்கவுள்ளே
சித்தமா மொழியத் தோன்றுஞ் சிவபரஞ் சுடரைக் கண்
டோர். 13

---

251. காவில் நாயகன் = இந்திரன்.
ஆவிநாயகன் —பிரமன் முதலான தேவர்க்கெல்லாம் குண்டலிசத்தியின் வழியாய் ஆவியாய் நின்று செலுத்துந் தலைவன்.

252. ஆறங்கம் = சந்தசு, கற்பம், வியாகரணம், சிட்சை, சோதிடம், நிருத்தம் என்பன.
நால்வருக்கும் — சனகர், சனந்தரர், சனாதரர், சனற்குமாரர் ஆகியவர்க்கும்.

## வெள்ளியம்பலத் திருக்கூத்தாடிய படலம்

254. பராபர முதலே போற்றி பத்தியில் விளைவாய் போற்றி
சராசர மாகி வேருய் நின்றதற் பரனே போற்றி
கராசல வுரியாய் போற்றி கனகவம் பலத்து ளாடு
நிராமய பரமா னந்த நிருத்தனே போற்றி போற்றி. 20

255. அடியரேம் பொருட்டு வெள்ளி யம்பலத் தாடல் போற்றி
பொடியணி தடந்தோள் போற்றி புரிசடை மகுடம் போற்றி
கடியவிழ் மலர்மென் கூந்தற் கயல்விழி பாகம் போற்றி
நெடியநற் பரமா னந்த நிருத்தனே போற்றி போற்றி. 22

## கான்மாறி யாடின படலம்

256. பெரியாய் சரணஞ் சிறியாய் சரணங்
கரியா கியவங் கணனே சரணம்
அரியா யெளியா யடிமா றிநடம்
புரிவாய் சரணம் புனிதா சரணம். 23

257. நதியா டியசெஞ் சடையாய் நகைவெண்
மதியாய் மதியா தவர்தம் மதியிற்
பதியாய் பதினெண் கணமும் பரவுந்
துதியாய் சரணஞ் சுடரே சரணம். 24

258. பழையாய் புதியாய் சரணம் பணிலக்
குழையாய் சரணங் கொடுவெண் மழுவா
ளுழையாய் சரணம் உருகா தவர்பால்
விழையாய் சரணம் விகிர்தா சரணம். 25

---

254-5. *திருக்கூத்தைக் கண்டு பதஞ்சலி முனிவர் பாடுகின்றவாறு.*
*கராசல உரியாய் — யானைத்தோலைப் போர்த்தாய்.*

256. *கூத்துக் கற்ற பாண்டியன் தன்னுடம்பிற் சால வருத்தநோய் உண்டாதலைக் கண்டு, பன்னெடுங் காலமாய் ஆடும் இறைவற்கு எல்லையில்லா வருத்தம் இருக்குமே என்று அஞ்சி, கான்மாறி யாடா விடில் இறப்பதாகச் சொல்லி வாள்மேற் குப்புறவீழ, இறைவனும் மாறியாடிக் காட்டினன். அப்பொழுது பாண்டியன் பரவியவாற்றை இதுமுதல் ஐந்து செய்யுட்கள் கூறுகின்றன.*

259. இருளாய் வெளியாய் சரணம் மெனையும்
பொருளா கநினைந்து புரந்த ரன்மால்
தெருளா தநடந் தெரிவித் தெனையாள்
அருளாய் சரணம் அழகா சரணம். 26

260. அயனத் தனெனப் படுமா டரவச்
சயனத் தவனைத் தருதத் துவநால்
வயனத் தவவா னவர்வா னவசேல்
நயனத் தவணா யகனே சரணம். 27

வரகுணனுக்குச் சிவலோகங் காட்டிய படலம்

261. நாயினே னென்னை நடுக்கும் பழியகற்றித்
தாயினே ராகித் தலையளித்தாய் தாள்சரணஞ்
சேயினேன் காணச் சிவலோகங் காட்டிப்பின்
கோயினேர் நின்றவருட் குன்றேநின் றாள்சரணம். 60

262. மாழாந்து செய்யும் வினைவழிபோம் வன்னரகிற்
றாழா தடியனேற் கன்புதந்தாய் தாள்சரணம்
ஏழாகி நான்கு வகையா யெழுபிறப்பும்
பாழாக வென்னைப் பணிகொண்டாய் தாள்சரணம். 61

263. வெங்கட் பழியின் வினையேனை வேறாக்கித்
திங்கட் குலக்களங்கந் தீர்த்தாய்நின் றாள்சரணம்
அங்கட் சிவபுரமுண் டன்புடையார்க் கென்பதையின்
றெங்கட்குக் காட்டி யிசைவித்தாய் தாள்சரணம். 26

---

260. நால் வயனத்தவ = நான்கு வசனங்களை (வேதங்களை) உடையோய்.
சேல் நயனத்தவள் = அங்கயற் கண்ணி.

261-3. வரகுணதேவன் சிவலோகங் கண்டு ஏத்தியவாறு.

262. ஏழாகி நான்கு வகையாய் என்றது தேவர், மக்கள், விலங்கு, புள், ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம் என்ற எழுவகைப் பிறப்பும், அண்டசம், சுவேதம், சராயுகம், உற்பீசம், என்னும் நால்வகையுள் அடங்குதலை நோக்கி என்க.

விறகு விற்ற படலம்

264. விரைசார் மலரோ னறியா விகிர்தன்
அரசாய் மதுரை யமர்ந்தா னென்னே
யரசாய் மதுரை யமர்ந்தா னவனென்
புரைசார் மனனும் புகுந்தா னென்னே. 33

265. பாடன் மறையுந் தெளியாப் பரமன்
கூடல் கோயில் கொண்டா னென்னே
கூடல் போலக் கொடியே னகமும்
ஆட லரங்கா வமர்ந்தா னென்னே. 34

266. நீல வண்ணன் றேரு நிமலன்
ஆல வாயி லமர்ந்தா னென்னே
யால வாயா னலரில் வாசம்
போலென் னுளமும் புகுந்தா னென்னே. 35

267. பைத்தலை விடவாய் நாகம் பல்பொறி மஞ்ஞை நால்வாய்
மத்தமா னரிமான் புல்வாய் வல்லிய மருட்கை யெய்தித்
தத்தமா றறியா வாகித் தலைத்தலை மயங்கிச் சோர
இத்தகை மாவும் புள்ளு மிசைவலைப் பட்ட வம்மா. 42

268. வன்றரை கிழிய வீழ்போய் வான்சினை கரிந்து நின்ற
வொன்றறி மரங்க ளெல்லாஞ் செவியறி வுடைய வாகி
மென்றளி ரீன்று போது விரிந்து கண்ணீருஞ் சோர
நன்றறி மாந்தர் போல நகைமுக மலர்ந்த மாதோ. 43

---

264-6. செருக்குக்கொண்ட ஏமநாதனை நல்வழிப் படுத்தற்கும் அடியாராகிய பாணபத்திரரைக் காத்தற்குமாக இறைவனார் பாணபத்திரனடிமையெனச் சொல்லி ஏமநாதன் இருப்பிடம் போந்து பாடுகின்றவர் இங்ஙனம் பாடினார் என்க.

267. இறைவன் இசைத்த இசையினால் விளைந்த பயன் இது முதல் நான்கு பாடல்களிற் சொல்லப்படுகிறது.

புல்வாய் = மான். வல்லியம் = புலி.

269. வாழிய வுலகின் வானோர் மனிதர்புள் விலங்கு மற்றும்
ஆழிய கரண மெல்லா மசைவற வடங்க வைய
னேழிசை மயமே யாகி யிருந்தன வுணர்ந்தோ ருள்ள
மூழியி லொருவன் றூள்புக் கொடுங்கிய தன்மை யொத்த. 44

270. கண்ணிறை நுதலோன் சாம கண்டத்தி னெழுந்த முல்லைப்
பண்ணிறை தேவ கீதஞ் சராசர வுயிரும் பாரும்
விண்ணிறை திசைக ளெட்டும் விழுங்கித்தன் மயமே யாக்கி
யுண்ணிறை யுயிரு மெய்யு முருக்கிய திசைவல் லானே. 45

**கச்சியப்ப சிவாசாரியர்**

இயற்றிய

# கந்த புராணம்

சுப்பிரமணியர் வாழ்த்து

271. மூவிரு முகங்கள் போற்றி முகம்பொழி கருணை போற்றி
யேவருந் துதிக்க நின்ற விராறுதோள் போற்றி காஞ்சி
மாவடி வைகுஞ் செவ்வேண் மலரடி போற்றி யன்னன்
சேவலு மயிலும் போற்றி திருக்கைவேல் போற்றி போற்றி. 3

சரவணப் படலம்

272. தருப்ப மிக்குளார் காணுருத் தாவில்சீர் வெள்ளிப்
பொருப்பி லுற்றிடு பரம்பொருள் கருணையாற் பொறைகூர்
கருப்ப மற்றுயிர் முழுவதுந் தந்திடுங் கன்னிப்
பருப்ப தக்கொடிக் கவ்வழி யினையன பகர்வான் 2

273. பொம்ம லுற்றிடு நான்முக னாதியோர் புந்தி
விம்ம லற்றிட முந்துநம் விழியிடைத் தோன்றிச்
செம்ம லர்ப்பெருஞ் சரவணத் திருந்தநின் சேயை
யிம்ம லைக்கணே யுய்க்குதும் வருகென விசைத்தான். 3

274. செம்புலி யதளினன் செப்பிற் றேர்தலும்
அம்பிகை யுவகையோ டன்பு கொண்டெழீஇ
நம்பெரு மதலையை நாங்கொண் டேகுது
மெம்பெரு முதல்வநீ யெழுதியா லென்றாள். 4

275. கொம்மைவெந் நகிலினாற் குறிப டுத்திய
அம்மையீ துரைத்துழி யருளி னாலெழா
மைம்மலி மிடறுடை வான நாயக
னிம்மென வவளொடு மேற தேறினான். 5

---

272. தருப்பம் = செருக்கு. பருப்பதக்கொடி = பார்வதி.

276. நந்தியி னெருத்தமே னங்கை யாளொடு
நந்திவந் திடுதலு நாக மேலுளார்
நந்திய வினைத்தொகை நந்திற் றென்றிடா
நந்திதன் கணத்தொடு நண்ணிப் போற்றினார். 6

277. வேத நான்குங் குடிலையும் வேறுள
பேத மாய கலைகளும் பேரிசை
நாத மோடு நணுகின விஞ்சையர்
கீதம் யாவு மிசைத்துக் கெழுமினார். 10

278. அன்ன காலை யகிலமு மீன்றருள்
கன்னி தன்னொடு காமர்வெள் ளேற்றின்மேன்
மன்னி வைகு மதிமுடி வானவன்
தன்ன தாலயத் தைத்தணந் தேகினான். 15

279. தன்ன தாலய நீங்கியே கயிலையைத் தணந்து
பொன்னி னீடிய விமையமால் வரைப்பு றத்தேகி
யன்ன மாடுறுஞ் சரவணப் பொய்கையை யடைந்தா
னென்னை யாளுடை நாயக னிறைவியுந் தானும். 16

280. பிறையு லாஞ்சடைத் தேவனு மவன்றனைப் பிரியா
துறையு மாதுமோ ரறுவகை யுருவுகொண் டுற்ற
சிறுவ னீர்மையை நோக்கியே திருவருள் செய்து
நிறையும் வான்புனற் பொய்கையங் கரையிடை நின்றார். 17

281. முண்ட கச்சர வணந்தனின் மூவிரு வடிவங்
கொண்டு லாவிவீற் றிருந்திடு மொருபெருங் குமரன்
அண்டர் நாயகன் றன்னுடன் அகிலமீன் றாளைக்
கண்டு மாமுக மலர்ந்தனன் றனதுளங் களித்தான். 18

---

278. தணந்து = நீங்கி.

282. அந்த வேலையிற் கவுரியை நோக்கியெம் மையன்
இந்த நின்மகன் றனைக்கொடு வருகென இயம்பச்
சுந்த ரங்கெழு விடையினுந் துண்ணென இழிந்து
சிந்தை கொண்டபே ராதரந் தன்னொடுஞ் சென்றாள். 19

283. சரவ ணந்தனிற் றனதுசே யாறு ருத்தனையும்
இருக ரங்களா லன்புட னெடுத்தனள் புல்லித்
திருமு கங்களோர் ஆறுபன் னிருபுயஞ் சேர்ந்த
உருவ மொன்றெனச் செய்தனள் உலகமீன் றுடையாள். 20

284. எந்தை சத்திக ளுயிரெலா மொடுங்குறு மெல்லை
முந்து போலவொன் றாகியே கூடிய முறைபோல்
அந்த மில்லதோர் மூவிரு வடிவுமொன் றாகிக்
கந்த னென்றுபேர் பெற்றனன் கவுரிதன் குமரன். 21

285. முன்பு புல்லிய குமரவேண் முடிதொறும் உயிர்த்து
மின்பி றங்கிய புறந்தனை நீவலும் விமலை
தன்பெ ருந்தனஞ் சுரந்துபால் சொரிந்தன தலையாம்
அன்பெ னப்படு கின்றதித் தன்மையே யன்றோ. 22

286. ஆதி நாயகன் கருணையா யமலமாய்ப் பரம
போத நீரதா யிருந்ததன் கொங்கையிற் பொழிபால்
ஏதி லாததோர் குருமணி வள்ளமீ தேற்றுக்
காதன் மாமகற் கன்பினால் அருத்தினாள் கவுரி. 23

287. கொங்கை யூறுபா லருத்தியே குமரனைக் கொடுசென்
றெங்க ணாயகன் முன்னரே யிறைஞ்சுவித் திடலும்
அங்கை யாலவன் றனையெடுத் தகலமே லணைத்துப்
பொங்கு பேரரு ணீர்மையா லிருத்தினன் புடையில். 24

288. அருத்தி தந்திடு குமரவே ளொருபுடை யமரப்
பெருத்த மன்னுயிர் யாவையு முன்னரே பெற்ற
வொருத்தி தன்னையுங் கையினா லொய்யென வாங்கி
யிருத்தி னான்றன திடந்தனி லெம்மையா ளிறைவன். 25

---

284. கந்தன் என்னும் பெயர்பெற்றவாறு.

285. விமலை — இறைவி.

289. ஏல வார்குழ லிறைவிக்கு மெம்பிரான் றனக்கும்
பால னாகிய குமரவே ணடுவுறும் பான்மை
ஞால மேலுறு மிரவொடு பகலுக்கு நடுவாய்
மாலை யானதொன் றழிவின்றி வைகுமா றொக்கும். 26

290. விடையுற்றிடு பரமற்குமவ் விமலைக்கும் விறற்சேய்
இடையுற்றது கண்டாரயன் மகவான்முத லிமையோர்
கடையுற்றிடு கடலாமெனக் கல்லென்றிரைத் தணுகாப்
புடையுற்றன ரெதிருற்றனர் புறனுற்றனர் புகழ்வார். 27

291. காமாரிதன் விழிதந்திடு கழிகாதல வொழியாத்
தோமாரியல் புளனாகிய சூரன்கொடுந் தொழிலால்
யாமாரினு மிழுக்குற்றன மெமையாளினி யென்னாப்
பூமாரிகள் பொழிந்தார்பணிந் தெழுந்தாசிகள் புகன்றார். 28

292. வாரற்புத முறவீங்கிய வன்னத்தன முருந்தின்
மூரற்பவ ளச்சேயிதழ் முழுமாமதி வதனத்
தாரற்பெயர் பெறுமங்கைய ரதுகாலையி லரன்முன்
பேரற்பொடு பணிந்தேயெழப் பெருந்தண்ணளி
புரிந்தான். 29

293. கந்தன்றனை நீர்போற்றிய கடனாலிவ னுங்கண்
மைந்தன்னெனும் பெயராகுக மகிழ்வாலெவ ரேனு
நுந்தம்பக லிடையின்னவ னோன்றாள்வழி படுவோர்
தந்தங்குறை முடித்தேபரந் தனைநல்குவ மென்றான். 30

294. என்னாவருள் புரிகின்றுழி யிமையத்தவள் சேயைத்
தன்னாரரு ளொடுசென்றெதிர் தழுவித்தனத் திழிபால்
பொன்னார்மணி வள்ளத்துமுன் பூரித்தருத் திடவே
யன்னாண்நகி லமுதுக்கவை யாறொத்தொழு கினவே. 31

---

289. இதிலுள்ள உவமை நயம் நோக்கற் பாற்று.
291. தோம் ஆர் இயல்புளன் ஆகிய எனப் பிரிக்க.
292. ஆரற் பெயர் பெறு மங்கையர் = கார்த்திகை மகளிர்.
293. தந்தம் — எதுகை நோக்கி இங்ஙனம் நின்றது.

295. வானூர்சுர நதிபோற்சர வணத்தூடவை புகலுந்
தூநான்மறை கரைகண்டவன் முதல்வந்திடு துணைவ
ராஞவறு சிறுவோர்தமை யளித்தோன்சபித் திடலான்
மீனுயவண் வதிகின்றவர் புகும்பாலினை மிசைந்தார். 32

296. கயிலைக்கிறை யவண்மெய்த்தன கலசத்தினு முகுபா
லயிலுற்றிடு பொழுதத்தினி லறலிற்புடை பெயரு
மயிலைத்தனு வொருவித்தவ வடிவுற்றெழு தருவார்
துயிலுற்றுணர் பவரொத்தனர் மயலற்றிடு தொடர்பால். 33

297. அன்னூரறு வருமாயெழுந் தகன்பொய்கைவிட் டமலன்
முன்னுய்வணங் கினர்போற்றலு முனிமைந்தர்கள் பரங்கோடு
என்னுவுரை பெறுகுன்றிடை யிருந்தேதவம் புரிமின்
சின்னுண்மிசை யிவன்வந்தருள் செயுமென்றருள் செய்தான். 34

298. நன்றாலெனத் தொழுதன்னவர் நாதன்விடை பெற்றே
சென்றூருடு மடவாரொடு திருமாலயன் முதலா
நின்றூர்தமக் கருள்செய்தவர் நிலயம்புக வருளிப்
பொன்றூழ்சடை யினன்வெள்ளியம் பொருப்பின்றலை புக்கான். 35

299. அடையார்புர மெரிசெய்திடு மமலன்கயி லையிற்போய்
விடையூர்தியி னிழிந்தேதனி விறற்சேயொடும் வெற்பின்
மடவாளொடு நடவாப்பொலன் மாமந்திரத் தவையி
னிடையாரரி யணைமீமிசை யிருந்தானருள் புரிந்தே. 36

300. சேயோனெனு முன்னோனென்றனைச் சிலம்பின்வரு மொன்பான்
மாயோருத வியமைந்தரு மற்றுள்ளவி லக்கத்
தூயோர்களுந் தொழுதேமலர் தூவிப்பணிந் தேத்தி
யாயோர்தம துயிரேயென் வவனைக்குறித் தணைந்தார். 37

---

299. வெற்பின் மடவாள் = மலைமகள்; பார்வதி.

கச்சியப்ப முனிவர்

இயற்றிய

# விநாயக புராணம்

## கடவுள் வாழ்த்து

301. அக்ரமென வறிவாகி யுலக மெங்கு மமர்ந்தகர
வுகரமக ரங்க டம்மாற்

பகருமொரு முதலாகி வேறு மாகிப் பலவேறு
திருமேனி தரித்துக் கொண்டு

புகரில்பொரு ளுன்கினையு மிடர்தீர்ந் தெய்தப் போற்றுநருக்
கறக்கருணை புரிந்தல் லார்க்கு

நிகரின்மறக் கருணைபுரிந் தாண்டு கொள்ளு நிருமலனைக்
கணபதியை நினைந்து வாழ்வாம். 2

## மெய்கண்ட தேவர் வாழ்த்து

302. சிறிய ஆடியிற் பெரியமால் வரைப்பொருள் செறிந்தாங்
கறிவு நூல்களின் முடிவெலா மகப்படுத் தவற்றி
னெறியெ லாம்விளக் கியசிவ ஞானபோ தத்தைக்
குறிசெய் திந்தமி ழாலுரை குரவனைப் பணிவாம். 14

## நாட்டுப் படலம்

303. கயிலையி லிழைத்த குற்றங் கழுவுதல் வேண்டிப் போந்த
மயிலிய லுமையா ளாறு நகரையும் வழியிற் போக்கி
யுயரிய நகரி தென்றே யுற்றமா காஞ்சி மூதூர்
செயிரறத் தன்பாற் கொண்டு சிறந்தது தொண்டை நாடு. 3

---

302. ஆடி = கண்ணாடி.

303. குற்றம் — சிவ பெருமானுடைய கண்ணைப் புதைத்ததால் உலகு இருளால் அல்லலுற நேரிட்ட தீமை. ஆறு நகர் — காசி, மாயாபுரி, அவந்தி, அயோத்தி, துவரை, மதுரா வென்பன.

நகரப் படலம்

304. கொடுப்பதுங் குறையின்றிக் கொள்வது மிகையின்றித்
தொடுப்பவர் தமக்கெல்லாஞ் சுருக்கிய விடைநல்கி
விடுப்பதுங் கலனின்று விழுப்பொருள் கொணர்ந்தில்லின்
மடுப்பது மல்லாது வணிகர்கள் மற்றறியார். 88

305. தோளொடு தோண்முட்டத் தொடையொடு தொடைமுட்டத்
தாளொடு தாண்முட்டத் தலையொடு தலைமுட்ட
ஆளொடு மாள்முட்ட ஆணும்பெண் ணொடுமுட்ட
நீளொளி மணிவீதி நிரந்தரித் தனசனமே. 96

306. மேனிலை மாடத் திட்ட விளக்கொடு சலன மின்றேல்
வானிடை யுடுவை வேறு வகுத்தறி தரவொண் ணாது
கானிவர் திலக முண்டேற் கன்னியர் நுதலி னோடு
கூனிளந் திங்கள் வேறு குறித்தறி தரவொண் ணாதே. 119

307. சென்னைமல் லீசர் சென்னை கேசவ ரிவரை யப்ப
னன்னையென் றறிந்து பத்தி யாற்பணி புரிகின் ஞரு
முன்னுறப் பணிகின் ஞரு முறைமுறை துதிக்கின் ஞரும்
இன்னராய் வாழ்த லுற்ரு ரிருநில மாந்த ரெல்லாம். 132

308. அத்தகு கோயிற் பாங்க ரவிர்மணிக் கோயில் கொண்டு
சித்திபுத் திகள்வேட் டோர்க்குஞ் சேர்க்குந்தன் னருளே தன்பாற்
சித்திபுத் திகளாய் வைகத் திகழ்பிர சன்ன வைங்கை
யுத்தம னிருந்தான் மும்மை யுலகமும் போற்றி யுய்ய. 133

---

304. தொண்டை நாட்டின்கண் உள்ள சென்னை மாநகரில் உள்ள வணிகர் இயல்பு கூறுகின்றது.

305. வீதி வருணனை.

307. மல்லீசுரரையும் கேசவரையும் முறையே அப்பனென்றும் அன்னை யென்றும் கருதி நகரமக்கள் வழிபட்டார் என்பது.

308. மேற்கூறிய இரு கோயில்களுக்கும் தென்பால் பிரசன்ன விநாயகர் கோயில் உண்டு. அவ்விநாயகரைப் பற்றியது இப் புராணம் என்க.

309. ஈங்கார்வத் திருந்தருளும் பிரசன்ன விநாயகர்தா மிறைஞ்சு
மன்பர்க்
காங்காங்கு வரங்கொடுத்து விளையாடுங் கதைமுழுது மகிலந்
தேரப்
பாங்கான வடமொழியிற் றுரைசெய்த பிருகுமுனி பரமற்
போற்றி
நீங்காம னெடுங்கால மிருந்துமகிழ்ந் ததுமிந்த நிகரில்
வைப்பாம். 134

நைமிசப் படலம்

310. நடுநிலை பிழைத்த லின்றி நண்ணறி வுடைய ராகிக்
கொடுவினை பலவு நீக்கிக் கொழுந்தெழு மன்ப ராகிப்
படுமனத் துறுதி யோடு பண்பினர் கேட்கப் புக்கால்
விடுவது புரியா தெந்த விதத்தையும் விளம்ப வேண்டும். 23

புராண வரலாற்றுப் படலம்

311. பகர்பிரமம் பதுமம்வயி ணவமே சைவம் பாகவதம்
பவுடிகநா ரதமார்க்கண்டந்
திகழ்ந்தபண் ணவர்க்குரிய வாக்கி நேயஞ் செறிபிரம
கைவர்த்த மிலிங்கம் யார்க்கு
மகிழ்வுபுரி வராகமே காந்த மோடு வாமனமே கூர்மமச்
சியங்கா ரூடம்
புகரில்பிர மாண்டமெனு மிவைமூ வாறும் புகல்கிரந்த
நாலிலக்கம் புகலக் கேட்டீர். 1

---

310. நைமிச வனத்தில், சவுனகமுனிவன் செய்த வேள்விக் காலத்தே கேட்ட மாதவர்க்குச் சூத முனிவன் கூறியது.

311. பதினெட்டுப்புராணம் இவையென்பது. பிரமம், பதுமம், வயிணவம், சைவம், பாகவதம், பவுடிகம், நாரதம், மார்க்கண்டேயம், ஆக்கினேயம், பிரமகைவர்த்தம், இலிங்கம், வராகம், காந்தம், வாமனம், கூர்மம், மச்சம், காரூடம், பிரமாண்டம் என்பன அவற்றின் பெயர்.

312. சாற்றுசனற் குமாரமே நார சிங்கந் தகுகாந்தஞ் சிவதருமந்
தழைதூர் வாசம்
போற்றியநா ரதமேகா பிலமெல் லோரும் புகழுசனஞ்
சவுனகமாம் பிரமாண் டஞ்சீர்
மாற்றரும்வா ருணங்காளி புராண மேத்தும் வாசிட்ட
மிலிங்கமொடு சவுரம் பாவம்
பாற்றியபா ராசரிய மாரீ சம்பார் பகர்சாம்பம் பார்க்கவமென்
றவற்றின் பேராம். 3

313. விலக்கரு முனிவர் தம்மால் விளங்கிய வுபபு ராணந்
துலக்கிய கிரந்த மெல்லாந் தொகையொரி லக்க மாகும்
அலக்கணை யறுக்கு மந்தப் புராணமூ வாற னுள்ளு
நலக்கும்பார்க் கவபு ராண நாயக மாகி நிற்கும். 4

314. பிரணவப் பொருளாய்ப் பேத மபேதமே பேதா பேதம்
வரமலி பொருளா யொன்றாய் வரம்பிலா வின்ப மாகும்
பரவிய வைங்கைப் புத்தேண் மான்மியம் பகரு நீரால்
விரவிய பார்க்கவத்தை விநாயக புராண மென்பார். 5

315. நித்தியமாய் நிர்க்குணமாய் நின்மலமாய் நிரஞ்சனமாய்
நினைவுக் கெட்டாச்
சத்தியமாய்த் தற்பரமாய்த் தத்துவமாய்ச் சச்சிதா னந்த மாகி
யத்துவிதப் பொருளாகி யகண்டபரி பூரணமா யமல ஞான
மெத்தியவுள் ளகத்தமர்ந்த விநாயகமான் மியந்தவத்தோர்
விரும்பிக் கேட்பார். 11

### அரசியற்கைப் படலம்

316. நலமிகு செல்வம் பெற்று நல்குர வினரைக் காத்தல்
இலனற மாதி சீர்த்தி யிலனெனப் பிறர்சொ லெவ்வ
வலனுரைக் கஞ்சி யேனும் வறியனை யிலனென் றெள்ளாது
அலர்புகழ் பயனும் வேண்டி னுக்கையு மளிக்க மைந்தா. 40

---

312. உபபுராணம் 18 இவை யென்பது. அவையாவன : நாரசிங்கம், காந்தம், சிவ தருமம், தூர்வாசம், நாரதம், காபிலம், உசனம், சவுனகம், பிரமாண்டம், வாருணம், காளி, வாசிட்டம், இலிங்கம், சவுரம், பாராசாரியம், மாரீசம், சாம்பவம், பார்க்கவம் என்பன.

314. பார்க்கவ புராணம் விநாயக புராணம் எனப்படுமாறு.

316. சோமகாந்தவரசன் கான்புகத் துணிந்தபின், தன்மகன் ஏமகண்டனுக்குரைத்தது. மேல்வரும் மூன்று பாட்டும் அவன் கூற்றே.

317. நனிபயன் பயப்பச் சிறுமுயற் சியினு னலத்தகு
வினையுமற் றனைய
வினையினைத் தொடங்குங் காலது தனக்கு வேண்டிய
பொருள்களும் படையும்
இனிதுறு பொழுது முபாயமுஞ் செயலு மிடைப்படு
மூறுக ணீக்கித்
துனியற முடிவு போக்கிடு மாறுஞ் சூழ்தர வல்லவ
னமைச்சன். 102

318. இழிந்த தொழிலி னுணுவதேயெய்தற் கரிய நாணென்பர்
ஒழிந்த மனவாக் குடலொடுக்க மொளிவா ணுதலார்
நாணேயாங்
கழிந்து விடநாண் மண்கோடல் கருதார் நலமெல்லாம்
வளர்ப்பா
ரழிந்து நாண்மற் றுயிர்வாழா ராவி யழிந்து நாணுள்வார். 149

319. உழுவித் திருவ ரிருவருமுழு வித்து முழுது முணலாகும்
உழுதுண் பவரே தமக்குரிய ருபகா ரியரென் பாரவரே
தொழுதுண் பவரே பிறர்க்குரியார் தொழின்முற் றுழந்து
முழவினர்பான்
முழுது மடுப்ப வேண்டுதலின் முதன்மைத் துழவென்
றறிமைந்தா. 151

மூவரு முபாசித்த படலம்

320. என்று நீங்குருத் திருவுரு வுடையதா யெங்கு
மொன்றி நின்றுணர்ந் திடுமறி வானந்த வுருவாய்த்
துன்றும் யோகினர் தியானிக்கப் படுஞ்சுக மாகிச்
சென்று சேர்தராக் கணேசநின் றிருவடி தொழுதாம். 15

321. உலக காரண காரண மாயுயிர்க் குயிரா
யிலகு ஞானியர் தமையிழந் தெய்துநற் பேருய்ப்
பலவு மாய்ப்பரப் பிரமமாய்ப் பரேசமாய்ப் பரமாய்த்
திலக மாகிய கணேசநின் றிருவடி தொழுதாம். 16

---

320-4. *பிரளய காலத்திற்குப் பிறகு அயன் அரி அரன் ஆகிய மூவரையும் விநாயகர் தோற்றுவித்தார் என்றும், அவரை யறிய மூவரும் நோற்றனர் என்றும், பின்னர் விநாயகர் காட்சியளித்தார் என்றும் கூறும் இப்புராணம் மூவரும் விநாயகரைப் பரவியவாற்றை இதுமுதல் ஐந்து பாடல்களிற் கூறுகின்றது. வியாசர்க்கு முன்னொரு நாள் பிரமன் கூறிய வரலாற்றை இப்பொழுது சோமகாந்தவரசற்குப் பிருகு முனிவர் கூறுவதாக அமைந்தது இப்படலம்.*

322. சகல லோகமும் படைத்தளித் தழிக்குந்தற் பரமா
யகில லோகத்தும் புகலிடந் தனக்கிலா வமைவாய்ப்
புகலு லோகங்க ளனைத்துக்கும் புகலிடந் தானும்
பகவ னாகிய கணேசநின் பதமலர் தொழுதாம். 17

323. உகத்துக் காதியாய்த் தேவருக் காதியா யுலவாச்
சுகத்துக் காதியாய்ச் சுரர்களுக் கீசராய்ச் சுடரு
மகத்துக் கீசராய்க் கணங்களுக் கீசராய் மதிப்போ
ரகத்துக் கூடிய கணேசநின் னடியிணை தொழுதாம். 18

324. சாமி நின்னிரு தாண்மலர் சார்ந்தவ ரெல்லாம்
நாம வெம்பிணி நலிவொரீஇ நற்சுக மடைவர்
ஆமி தைத்தெரிந் தியாங்களு முனைச்சர ணடைந்தேம்
ஏம மல்குறக் காத்தியென் றேத்தின மிரந்தேம். 25

325. என்று மூவரு முபாசித்த வியல்பிது வாமென்
றன்று நான்முகன் வியாதனுக் கருளிய தாக
நன்று தேர்ந்தனை யினியவர் பெற்றநல் வரமும்
நின்று கேளென நிகழ்த்துவன் பிருகுமா தவனே. 26

---

325. பிருகு முனிவன் வியாசற்கு உரைத்தான் என்க.

நிரம்ப அழகிய தேசிகர்

இயற்றிய

# திருப்பரங்கிரிப் புராணம்

## குமரன்தவசுச் சருக்கம்.

326. மன்பெரு கிரிக்கு நேரே வடகிழக் கணைந்த பாலிற்
றன்பெய ரிட்ட வோடை வேலினாற் றந்து மூழ்கிப்
பின்பதன் சிறிய வாயுப் பெருந்திசை யிலிங்கஞ் சேர்த்தி
யன்பொடு கண்டோர் வேட்ட லருளுகென் றுவா கித்து, 38

327. மறைமனுக் கொண்டீ ரெட்டாம் வரிசையா லருச்சித் தேத்தி
யிறையவர் திருக்கை மீது யானிழைத் தருளும் பூசைக்
குறைவிலாப் பயன்கொ ளென்று குளிர்ந்தநீர் பெய்து செவ்வேள்
மறுவறு வருட மூன்று மாதவ மிழைத்த காலை, 39

328. கரும்புயல் சிவந்த கஞ்சக் காடுபூத் தனைய மாயன்
அரும்பவிழ் கமலச் சேக்கை யண்ணலா தியருஞ் சூழத்
தரும்பனி மதியிட் டென்னத் தவளவா லெயிற்றுப் பேழ்வாய்
வருங்கணம் வளையத் தாதை மகிழ்ந்துமால் விடைமேல் வந்தான். 40

329. வீறுசேர் பானு கோடி விளங்கருஞ் சோதி தன்னை
யாறிரட் டித்த கண்ணா லருந்தியே பரவிச் செவ்வேள்
சீறடி நோவச் சூழ்ந்து செய்யவாய் மழலைச் செந்தேன்
ஊறிடக் கனிச்சி தாங்கு முத்தமற் பழிச்சு வானால். 41

---

326. சிவபெருமான் இறைவிக்கு உணர்த்திக்கொண்டிருந்த மந்திரப்பொருளை மறைவாகக் கேட்டு வெளிப்படுத்திய குற்றந் தீரும் பொருட்டு முருகன் கயிலையை நீங்கித் திருப்பரங்கிரி யடையவேண்டியவரானார் என்று கூறும் இப்புராணம், அவர் திருப்பரங்கிரியில் சரவணப்பொய்கை யுண்டாக்கி அதில் மூழ்கிச் சிவபூசை செய்தவாற்றைச் சொல்லத் தொடங்குகிறது.

330. முகைய விழ்ந்திட விளரி வண்டு மூரன்ற பைங்கணை
சிந்துவேள்
தகைய விழ்ந்திட நுதன்ம லர்ந்தவ தகுப மூம்பொரு டத்துவ
பகுற லேப்பணி கக்கு நஞ்சு பதித்தி டுங்கள வெண்பொடி
நகுமெ ழிற்பெற வருப ரங்கிரி நாத சேவடி
போற்றுவாம். 42

331. அளிமு ரன்றிடு மிதழி யந்தொடை
யணித ரும்புய விமலவான்
குளிரி டுந்திரை நதியு டன்பிறை
குலவி டுஞ்சடை முடியமா
முளரி யண்ணலொ டரிபு ரந்தரர்
முடித மும்பிடு பதமுளாய்
நளிர்பெ றும்பொழில் வளர்ப ரங்கிரி
நாத சேவடி போற்றுவாம். 43

332. உலக முந்திய வறுவி தம்பெற
வொழிவி லாதெழ விரிசெய்தே
யலகி லம்புவி பிறவி கொண்டிட
அருள ருந்துணை வினைசமன்
மலிவி டும்பொழு தருள்பொ ருந்தினர்
மலம் கன்றிடு பிறவிதீர்
நலமெ மும்பொருள் வளர்ப ரங்கிரி
நாத சேவடி போற்றுவாம். 44

333 தானு மேசத சத்தெ னும்படி
சத்த றிந்திட வரியதாம்
ஊன மேயிரு ளாகி மூடிட
உற்ற பானு மறைத்தகன்
மேனெ டும்பட லந்து டைக்க
விளம்பு சற்குரு வுணருமோர்
ஞான மேவடி வமர்ப ரங்கிரி
நாத சேவடி போற்றுவாம். 45

---

330. பகுறலேப்பணி — பஃறலேப்பணி என்பதன் திரிபு.

331. புயனே, விமல, சடைமுடிய, பதமுளாய், நாத, போற்றுவாம் என்றவாறு.

334. இன்னன பழிச்சி யிருபதந் தடவி
யெழின்முடி புவிதொடப் பரவுந்
தன்னிளங் குமரன் றனையெடுத் திறுகத்
தழுவியே யுச்சிமோந் திருத்திப்
பொன்விழு தனைய கற்றையஞ் சடிலன்
புகன்றிடுங் கருணையூற் றெழுந்த
பன்னிரு விழியா யுன்செய லதனாற்
பரவையி னுவகைமூழ் கினமால். 46

335. தேன்றுளும் பியதோர் தெய்வநூல் வடித்த
தெளிவெனு மந்திரம் பலிக்க
மாந்தர்கள் வெருவிக் குருமுகத் துணரு
மாறுனைத் தவம்புரிந் திடவே
பாந்தண்மேற் கிடந்த பூமியி னிழிந்து
பரங்கிரி மருவுவா யென்றேம்
ஏந்திளங் கலசக் கொங்கையாள் பயக்க
விளமைபொங் கியவடி வெடுத்தோய். 47

336. இம்மனு மட்டோ வன்றெழு கோடி
யிசைத்திடு மந்திர மனைத்தும்
நம்மையுந் தனையுந் தெரிந்ததோர் குரவன்
நவின்றிட வவன்செவி புகட்டித்
தம்மனத் தெழுதி யியற்றிடப் பயனைத்
தந்திடுங் கூன்றிரை தவழ்ந்து
சும்மைசெய் பரவை வயிறுதிக் கொளுத்தச்
சோதிவேற் பணிவிடை கொடுத்தோய். 48

---

334. சிவபெருமான் குமரன் தவத்தால் மகிழ்ந்தது.
சடிலன் — சடிலத்தை யுடையோன்; சடையோன்.

336. மனு = மந்திரம்.

337. எழுதொணு வேத மெடுத்தெடுத் தறைவோர்
ஏனைய நால்வகை வருணம்
பழுதறு நான்கி னுச்சிர மத்தோர்
பார்புக ழிலிங்கிக ளுடனே
முழுதுணர் தூய தந்திரத் தோர்க்கு
மொழிந்திடு மைந்தெழுத் துரித்தாம்
விழுதுவிட் டெழுந்து திசையொளி புதைக்க
விளங்குசந் திரோதய முகத்தோய். 49

338. கற்றையங் கிரண மகுடகோ டீரக்
கடவுளர் முனிவரே னையர்க்கும்
பற்றிய நெஞ்சம் விளைத்திடு மிந்தப்
பரங்கிரிக் கந்தமா தனத்தின்
முற்றிய தெய்வக் கொடுமுடி யதனின்
முயலுதி யென்றது வழாமை
யுற்றிடு தவத்தான் மகிழ்ந்தனங் கறையூற்
றெழுக்கிய சோதிவேற் கரத்தோய். 50

339. இன்னன கூறி யிருளெடுத் துண்ணும்
இளம்பிறைக் குருத்தினைச் செருகும்
பொன்னவிர் சடையான் வேண்டிய வரத்தைப்
புகலெனத் தந்தையைப் பரவிப்
பன்னிரு விழியுங் குளிர்ந்திடப் பார்த்துப்
பார்த்துநின் றிடுமிளங் குமரன்
துன்னமு தொழுகத் துளும்புதீங் கிளவி
தொகுத்தவாய் மலர்ந்திது கூறும் :— 51

340. திருவுளத் தேருச் செய்கையை யடியேன்
செலுத்திய பிழைபொறுத் திடுதி
மருவுளத் தோர்கை மலர்ந்திடப் பெறுதி
மழலையுந் தெளிந்திடாச் சிறியேற்
கருள்விழிப் பார்வை தினந்தினந் தருதி
யன்பர்கள் விரும்பிய பொருளைத்
தரவிளம் பசுவின் கன்றினைத் தொடருந்
தாயென இரங்கிய வுளத்தோய். 52

340. இது முதல் வரும் செய்யுட்களில் முருகப்பெருமான் செய்துகொண்ட வேண்டுகோள் சொல்லப்படுகிறது.

341. தாரணி தன்னிற் றழுவிடா தவரைத்
தழுவிய கொடுமையும் வயிற்றில்
ஆவல்வெம் பசியா லருந்திடா தவர்பால்
அருந்திய வினைமுதற் பவமுந்
திரவே பரங்குன் றடைந்திருந் திடுவோர்
சிவகதி யடைந்திட வேண்டுஞ்
சூரர மகளிர் கழுத்தணி தாலி
துலங்கிட நஞ்சுவாய் மடுத்தோய். 53

342. அய்யநின் னுருவம் விளங்கிடத் தாபித்
தருச்சனை செய்திடு மிலிங்கந்
துய்யகண் குளிரக் கண்டவர் தந்தை
தூயதாய் குரவர்வே தியருக்
கையமுற் றிழைத்த பவந்துடைத் தியற்றும்
அருஞ்செயல் முடித்துவீ டருள்வை
பையர வினங்கி யுறவுகொண் டாடப்
பனிமதி சூடுசெஞ் சடையோய். 54

அரிச்சந்திரச் சருக்கம்

343. மெய்யை யகன்று தனக்குறுதி விரும்புந்
துணைவர் வேறில்லை
மெய்யைக் கெடுத்து நாடோறும் விளைக்குந்
தருமம் பயனில்லை
மெய்யைத் தவிர்ந்து புவிசூழ்ந்து மெலிந்து
தேடு நிதியமிலை
மெய்யை யகற்றி யுடல்வருந்தி விதிக்குந்
தவங்கள் வேறில்லை. 23

---

340. இதுமுதல் வரும் செய்யுட்களில் முருகப் பெருமான் செய்துகொண்ட வேண்டுகோள் சொல்லப்படுகிறது.

341. பவம் — பாவம் என்பதன் குறுக்கம்.

343. மெய்ம்மையின் பெருமையை உரோமசமுனிவர் அரிச்சந்திரனுக்கு உரைத்தவாறு.

நற்கீரச் சருக்கம்

344. பனிவரையின் மகளுதவ வுண்டருளுஞ்
செங்கனிவாய்ப் பாலா போற்றி
குனிசிலேவேண் மிகநாண வடிவழகு
கொண்டருளுங் குமரா போற்றி
வினையமெழுஞ் சூர்கிளேயை வேரறுக்க
வுளத்தில்வைத்த விருத்தா போற்றி
முனிவருளங் கனியமிக வரங்குலவு
பரங்கிரியின் முருகா போற்றி. 17

345. கருதரிய வாறுமுகங் கொண்டருள
நிறைந்தவருட் கடலே போற்றி
திரைமருவு நிலவங்கஞ் சேரவுயிர்ச்
சரக்கையிடுஞ் செட்டி போற்றி
விரிதருவான் குஞ்சரத்தைக் கண்ணியிட்டுப்
பிடித்தவெழில் வேடா போற்றி
குருதியெழும் வேலேந்தி வரங்குலவு
பரங்கிரியிற் குமரா போற்றி. 18

---

344. மதுரையில் எழுந்தருளியுள்ள அங்கயற்கண் பாகனேயன்றி, மானிடரில் மாறனேயன்றி வேறெவரையும் பாடுவதில்லே யென்று கொண்ட நக்கீரராற் பாட்டுப் பெறவேண்டி, முருகக்கடவுள் இரு வீரரையனுப்பி நக்கீரர்பாற் குற்றங்கண்டு அவரை ஒரு குகையில் அடைக்கும்படி கட்டளை யிட்டதற்கேற்ப அவரும் வந்து அடைத்தாராக, நக்கீரர் திருமுருகாற்றுப்படையும் பிறிதொரு பாடலும் பாட, முருகக்கடவுள் காட்சியளிக்க, நக்கீரர் பாடுவாரானுர். அதனே இப்பாட்டிலும் வருகின்ற பாட்டிலுங் காண்க.
வரம் குலவு = மேன்மை விளங்குகின்ற.

345. நிலவங்கம் = உலகமாகிய கப்பல். "விரிதருவான்......வேடாபோற்றி" என்புழி, யானையை வலேயிட்டுப் பிடித்த வேடா என்றன்றித் தெய்வ யானையை மாலேயிட்டுக் கைப்பிடித்த மணவேடமுடையோய் என்று பொருள்கொள்ள வேண்டும் என்பதை யறிக.
"குமரா போற்றி" யென்றும், "முருகா போற்றி" யென்றும் நக்கீரர் பாடியதற்குக் காரணம் காண்பார்போல் இந்நூலாசிரியர் (நிரம்பவழகிய தேசிகர்) திருமுருகாற்றுப் படையைக் கிழவோன் என முடித்தமைக்காகக் காலந் தாழ்த்தே வருவோம் என முருகக்கடவுள் நக்கீரர் கனவிற் கூற, அவரும் "இளேயோன்" என்று சொல்லிப் பாடப் பிறகு அருள்சுரந்தார் என்றவாறு எழுதினர். இதனே இச்சருக்கத்து 12, 13-ஆம் பாடல்களால் அறியலாம்.

சிவப்பிரகாச சுவாமிகள்

இயற்றிய

# திருக்கூவப் புராணம்

## சேந்நெல்வைத்த சருக்கம்

346. முன்னரக் கூவ புரத்திடைக் காம
முதலிய முக்குறும் பெறிந்தோர்
புன்னெறிப் படுமைம் புலன்களுந் தடுத்தோர்
பொய்யினை மெய்யினிற் கண்டோர்
சென்னியிற் பிறைகொண் டவன்றனக் கன்பு
செறிந்தமை யடியர்கட் டிகழ்த்து
நன்னிலைத் தரும சீலனு ரெனவோர்
நாமவந் தணருள ரானுர். 2

347. உருவநல் லறமாக் கறைமிடற் றிறையன்
புயிரென வந்ததே யனையார்
பொருவினன் னெறியின் வரும்பெருஞ் செல்வர்
புரமெரி படுத்தவிற் கோலத்
தொருவன தடிமுப் பொழுதும்வந் தனைசெய்
தறுசுவை யடிசின்மா தவர்க்குப்
பரிவொடு மளித்து மிச்சில்கொண் டெமக்குப்
பயனிது வெனவொழு குறுநாள், 3

---

346. கூவபுரம் — தொண்டைநாட்டில், திருவாலங்காட்டின் தென்புறமாக உள்ள தொரு பாடல்பெற்ற பதி. இது திருவிற்கோலம் எனவும் படும்.

இந்தச் சருக்கத்தில், திருவிற்கோல நாதருக்குச் செந்நெல் வைத்தவர் எனப்பெயர் வந்தவாறு சொல்லப்படுகிறது. இவ்வரலாற்றை நைமிசவன முனிவருக்குச் சூதமுனிவர் உரைத்தார் என்று இப்புராணம் கூறும்.

348. கோதினந் தரும சீலர் கொடைகண்டு
நாணாட் கொண்டோ
மேதகு மவர்தம் மேன்மை விளக்கவோ
வறிந்தி லேமால்
ஓதமுன் முகிலொ டுங்கிற் றொருபுடை
யதனால் யாரும்
பேதுறு பசிநோய் கூரப் பெருமித
மிழந்து நைந்தார். 4

349. வறியவக் காலம் போத மறுவறுந்
தரும சீலர்
செறியுமெய்த் தவர்கட் கெல்லாஞ் செழுங்கறி
யமுதி னோடு
நறியமென் புழுக்க லன்பா னறுசுவை
யளித்த ளித்தந்
நெறியினிற் பெறும்பே றொன்றே நிற்கநின்
றிலது செல்வம். 5

350. பழகுதஞ் செல்வ மெல்லாம் பயன்றரு
கதலி யாக
அழகுதம் பெருகு கற்பி னளவலா
தளவி லாமல்
ஒழுகுநன் மனைவி யார்தம் முரியபொற்
றாலி யாதி
முழுதும்விற் றடியார்க் கன்பான் முதிர்சுவை
யமுத ளித்தார். 6

351. மனையிலுள் ளனவ னைத்து மாண்டிடச்
செயலொன் றின்றி
யினியருந் தவர்கட் கந்தோ வென்செய்கே
னெனத்து ளங்கி
யனையவர்க் கிரப்புற் றேனா மமுதமிட்
டொழிந்த துண்பேன்
எனமனந் துணிந்தவ் வாறு நெற்பலி
யிரந்து செய்தார். 7

---

348. கோதில் நம் தருமசீலர் எனப் பிரிக்க.

350. இவ்வரலாறு இளையான்குடிமாறர், குங்குலியக்கலையர், அரிவாட்டாயர் ஆகியோருடைய வரலாற்றோடு ஒப்புநோக்கற் பாலது.

352. இம்முறை யந்த ணாள ரெண்டின
முணவொன் றின்றித்
தம்முட றளர்ந்தொன் பானுட் டையல்பா
கனைப்பூ சித்தே
யம்மனை வருகு வார்மெய் யயர்ந்துவந்
தருகு வீழ்ந்தார்
மைம்மலி குழலி னார்தம் மதிமுகத்
தறைந்த ழுங்க. 11

353. அவ்வமை யத்தி லீச னடியவ
ரொருவர் யாண்டுந்
துவ்வரி தாக மேனி துவண்டுகண்
ணுள்வி ழுந்து
செவ்விதழ் புலர்ந்து வாடுந் திருமுக
மோடு முன்றில்
வெவ்விய பசியின் வந்தேன் வினையிலீ
ரென்று சென்றார். 12

354. தொண்டர்வந் துரைத்த மாற்றஞ் சுடுதழற்
காய்ந்த வெவ்வேல்
புண்டுளை படப்புக் கென்னச் செவிப்புலம்
புக்கு நெஞ்சம்
உண்டிட வெழுந்து போகி யுரியநன்
மனையா ரோடும்
வண்டவர் தமைவ ணங்கி மனையினுட்
கொண்டு புக்கார். 13

---

352. எட்டு நாட்கள் பலவிடங்களிலும் பலிக்கு உழன்று பெற மாட்டாதவராய் வருந்தி மெய்தளர்ந்தும் அகந்தளர்வின்றிக் கோயில் புக்கு வழிபாடு செய்து மீண்டு வந்து மனையில் எய்த்திருந்தார் என்பது "இம்முறை" என்றவிடத்துக் குறிக்கப் பெறுகிறது.

353. துவ்வரிதாக = உணவு அரிதாகவும்.

355. அன்னைபங் குடையோ னன்ப ரயர்வுகண்
டாற்ற லாகா
தின்னுமிந் நகர முற்று மிரந்து காண்
குவன்பு குந்து
செந்நெல்வந் திலதே லாவி தீர்ப்பனென்
றில்லிற் கோதித்
தன்னிக ரிலாதா ரன்பு தரும்வலி
கொண்டு சென்றார். 15

356. எம்மையா டிருவிற் கோலத் திறையவன்
கருணை தன்னாற்
செம்மையா மனத்தர்க் கெய்தச் செந்நெலங்
கிரண்டு நாழி
நம்மையா ளுடைய தொண்டர் நனிபெருஞ்
செல்வ முன்னின்
மும்மையா யடைந்த தென்ன முதிர்மகிழ்
வுற்று மீண்டார். 17

357. வாங்கிய செந்நெற் குத்தி மாதவர்
பசிநோய் தீரப்
பாங்கொடு மமுத மாக்கிப் படைத்திட
வேண்டு மென்ன
ஓங்குறு மனத்தன் பாற்றம் முடற்றளர்
வெண்ணா தம்பொற்
பூங்கொடி யனையார் போனம் பொருக்கென
வமைத்துப் பின்னர். 20

---

355. இல்லிற்கு = மனைவிக்கு.

356. மெல்ல மெல்ல ஒவ்வொரு மனையிலும் பலிக்காகப் புகுந்த அவர் முடிவில் ஒரு மனையில் இறைவனருளால் இரண்டு நாழி செந்நெல் பெற்று மீண்டார் என்க.

357. கணவர் வரவை எதிர் நோக்கி யிருந்த மனைவியார் அவர் கொண்டுவந்த செந்நெல்லை வாங்கி அமுதாக்கினமை சொல்லப்படுகிறது.

போனம்—போனகம் என்பதன் தொகுத்தல்.

358. திருந்திய கொழுநர்க் காயிற் றமுதெனச்
செப்பி நம்பால்
அருந்துயர் கெடவந் தாரை யமுதுசெய்
விப்பீ ரென்ன
விருந்தினர் தமைவ ணங்கி யமுதுசெய்
வித்த வேலை
மருந்தெதிர் பவரின் மிக்க மறையவர்
மகிழ்ச்சி கொண்டார். 21

359. அந்த ணாளர்தம் மன்பினை யுலகிடை
யலர்த்த
நந்தி லாவருட் கூவநா யகனுள
நாடித்
தந்த மாவுரி போர்த்ததன் றனியுரு
மறைத்து
முந்து தொண்டர்கள் போலொரு
மூப்புரு வெடுத்தான். 23

360. அன்று மேவிய காரைக்கா லம்மையே
யம்மை
யென்ற வாசக மெய்பெற வவளுரு
வென்னத்
துன்று மேனியிற் றசையொழிந் தென்பெலாந்
தோன்ற
மன்று ளாடிய திருவடி மலர்நடை
தளர, 24

---

358. மருந்து எதிர்பவரின் = அமிர்தத்தை எதிர்கண்டவரைப் போல.

359. வந்த மாதவர் அமுது செய்துவிட்டுப் போனாராக, தருமசீலரும் மனைவியாரும் சேடித்த அமுதுண்ணப் புகுந்தகாலை, கூவநாயகன் மூப்புடை வடிவொன்று எடுத்து வந்தமை சொல்லப்படுகிறது.

360 என்ற வாசகம் மெய்பெற — என்று கூறிய சொல் மெய்யே யென்று கருதும் படி ; தசை யொழிந்து என்பெலாந் தோன்றும்படி வருவதால், முன்னர்ப் புனிதவதியாரை "அம்மையே" என இறைவன் அழைத்ததற்கேற்ப அவர் தம் பிள்ளையே இவர் என இப்பொழுது சொல்லும்படி.

361\. பொருவி றன்னைவிற் கோலத்த னெனும்பெயர் புதுக்க
வுருவ மூள்வளைந் தொருகழைத் தண்டுமுன் னூன்றித்
திருவி றைஞ்சுபொற் பையர வல்குலாள் சிரிப்பத்
தரும சீலர்தம் மனையிடைப் புகுந்தனன் றலைவன். 25

362\. ஐயனை யாதனத் திருத்தி யிங்குநா
முய்யவந் தவர்தமக் குள்ள போனகம்
பையர வல்குலாய் படைத்தி யென்னலு
மையலின் மங்கையர் மகிழ்வுற் றிட்டனர். 28

363\. இட்டலு மிறையவ னெண்டி னங்கணீர்
பட்டினி யொடுமிகப் பரிந்து தொண்டுசெய்
நிட்டையின் வழுவுறு நுங்க ளெஞ்சிடை
மட்டிலை யன்பென மறைந்து கூறுவான். 29

364\. கலிமிகு சிறுவிலைக் காலஞ் செல்வரை
மெலிவுறு நுமக்குநம் விளங்கு மாலயத்
துலைவற வனுதின மொரும ணிக்குட
மலிவுறு செந்நெல்முன் வைத்துங் கொண்மென. 30

365\. இத்திற நாடொரு மிறைவ னாலயம்
வைத்தசெந் நெற்கொடு வருந்தொண் டர்க்கெலாந்
துய்த்திட வமுதறு சுவையொ டும்படைத்
துத்தமர் சிவனரும் பதத்தி லொன்றினர். 34

---

361\. விற்கோலத்தன் = வில்லழகன். அப்பெயர் புதுக்குதல் வில்லைப்போற் கூனன் எனும் பெயர் பெறுதல்.

362\. புகுந்த தலைவன் "இளைத்தேன்" ஒருபிடி அன்னமிடில் மிக்க புண்ணியம் என விளம்ப, உண்ண விருந்த அவ்விருவரும் உண்ணாது வெளிப்போந்து அவ்வடியாரை உள்ளே அழைத்துப் போய் ஆசனத்தமர்த்தி அமுதிட்டமை சொல்லப்படுகிறது.

363\. நிட்டை = உறுதி.

364\. வைத்தும் = வைப்போம்.
"கொண்மென" என்பது, தருமசீலர் "கடையனேனையும் எண்ணிவந்து அருளிய இறைவனே" என, என்று இயைந்து, ஆலயத்தை யடைந்து செஞ்சாலி கண்டு உவந்தனர் என மேல்வரும் பாடல்களில் முடியும். இதுவும் அந்நெல்லைக் கொண்டு அடியார் பலரை ஊட்டிச் சேடமுண்டு உவப்புற்றார் என்பதும் 31 முதல் 33 வரையுள்ள பாடல்களிற் சொல்லப்பட்டுள.

மீனுட்சி சுந்தரம் பிள்ளை

இயற்றிய

# திருநாகைக் காரோணப் புராணம்

## நாகநாதப் படலம்

366. படுகட னடுவட் டோன்றும் பரிதிதன் குலத்து தித்தோன்
வடுவறு கலைக ளெல்லா மயக்கறத் தெளிந்த வல்லா
னுடுபதிக் குடையினுனு முட்குறும் வனப்பின் மிக்கான்
றெடுகழற் காலான் சாலீ சுகனெனு நாம வேந்தன். 65

367. மேயகா ரோணம் புக்கு விண்ணவர் திர்த்த மாடிப்
பாயகா ரோண நாதன் பங்கயப் பாதம் போற்றி
நேயமார் துணைவ ரோடு நிலவிய சறுவ திர்த்தத்
தாயவான் கரையை நாடி யடைந்தன னணங்கு கண்டாள். 66

368. காண்டலு நகிலோர் மூன்றுட் கரந்தது நடுவ ணுள்ள
தாண்டகை யினையன் மண்மே லாயகந் தருவன் கொல்லோ
மூண்டவிற் காமன் கொல்லோ முதிரெழிற் குமரன் கொல்லோ
வீண்டடைந் தவன்யா ரென்று வேந்திழை திகைத்து
நின்றுள். 67

369. நகிலொன்று மறையக் கண்ட நல்லிழை மடவார் யாருந்
தலையொன்று பெருமை வாய்ந்த தடாதகை போன்று ளின்னள்
நிலையொன்று மறியே மென்று நெடிதிறும் பூது மேவிக்
கலையொன்று முதல்வி பூசைப் பயனுளங் கருதி நின்றுர். 68

---

367. அணங்கு = சேடன் மகள். அவளது காட்சி இங்குச் சொல்லப்படுகிறது.

368. அவளது ஐயம்.

இந்தப் படலத்தில் நாகநாதர் சிறப்புச் சொல்லப்படுகிறது. சேடனென்பான் மகவு ஒன்றும் பெருததற்கு வருந்தி வசிட்டரருளாற் சிவலிங்க பூசை செய்யத் தலைப்பட்டுக் கும்பகோணம், சண்பகாரணியம், பாம்புரம் முதலிய தலங்களிற் பூசைசெய்து இறுதியிற் காயாரோணத்திற் பூஜையியற்றிட, ஒரு பெண் மகவு மூன்று நகிலுடையாளைப் பெற்றுன். அவளைக் கண்ட சாலீசுகன் அவளைக் காதலித்து மணந்தது இப்பகுதியிற் சொல்லப் படுகிறது.

சாலீசுகனுக்கு நாட்டை யளித்துவிட்டு முடிவிலே சேடன் இலிங்கத்தைப் பூசை செய்து வீடு பேறுற்றது இப்படலத்திற் சொல்லப்படுஞ் செய்தி.

370. தந்தையா காய வாணி சாற்றிய படிய னைத்து
முந்தைநா ளுரைத்த வாறு நகிலொன்று மறைந்த வாறு
நிந்தையில் வனப்பு வாய்ந்த புரவலனிற்கு மாறுஞ்
சிந்தையி லுணர்ந்தா ணைஞ் செறிதர நங்கை நின்றாள். 69

371. மருவல ருடலம் போழ்ந்து வார்குடர் மாலை சூடி
வெருவரக் கொழுவோ டருள் விடக்குவாய் குதட்டிப்
பின்னர்ப்
பெருகுநெய்த் தோரு மாந்திப் பெரும்பசி யடங்கு மேமே
யிருகடை வாயு நக்கு மெரிதவ ழிலைவேல் வேந்தும், 70

372. விதிகடைக் கூட்ட லாலே மிளிர்தரு பொலங்கொம்
பொன்று
மதியமொன் றற்முன் றூங்கி மழைமுகில் பின்னென்
றேந்திப்
பொதிசுவை யமுத கும்பம் பொலிதர விரண்டு கொண்டு
துதிசெய நின்ரு லென்ன நிற்குந்தோ கையைக்கண்
ணுற்ருன். 71

373. காதலங் கடலுண் டாக்குங் காரிகை பாதந் தோய
வாதலங் கமையு மாநோன் பாற்றிய தரவ வேந்தன்
பாதலங் கொல்லோ மேலாப் பகர்தலங் கொல்லோ விந்தப்
பூதலங் கொல்லோ வென்னுப் புந்தியு ளையங்
கொண்டான். 72

374. அணிமலர் வாடிற் றில்லை கண்ணிமை யாடிற் றில்லை
மணிமுக மதிய கத்து வருவெயர் கூடிற் றில்லை
தணிவிலிவ் வேது வாலித் தரைமக ளல்ல ளென்று
கணிபுனை தடந்தோ ளண்ணல் கருத்துறத் தெளிந்தா
னன்றே. 73

---

372. சாலிசுகனது காட்சி.
373. அவனது ஐயம்.
374. அவன் தெளிதல்.

375. இறையவன் முகத்து நாட்ட மிரண்டனு ளொன்று வெப்ப
நிறைதரச் செயுமற் றென்று தட்பமே நிகழ்த்தா நிற்கும்
அறைவிழி யிரண்டுங் கூடி யன்னவை யியற்று மென்று
குறையறு காதல் பொங்கக் குறிப்பறிந் தனன்கோ
மானே. 74

376. இறையிவை மதிக்குங் காலை யெழுந்தவெங் காம வேட்கைப்
பொறையுடை யவளா யீங்குப் புகுந்தமை தந்தைக் கோத
நறைமலர்க் குழலா ரோடு நாகர்கோன் மகண்ம றைந்தான்
மறைதலு மதிமா ழாந்து மன்னனு மிருக்கை
புக்கான். 75

377. துங்கமிகுந்த வொருசாலீ சுகனென் பவனங்
குலத்துதித்தான்
சங்கநிகருங் களத்தொருபெண் டந்த காமந்
தலைக்கொண்டான்
அங்கமுழுதும் வெப்படைவா னதுகா ணேனென்
றகல்வான்போற்
பங்கமருவு மேல்கடற்போய்ப் படிந்தான் பரியே
ழுடைத்தேரான். 76

378. தனையடைந் தவரை யாருந் தாழ்தர வுயர்த்தா நின்ற
தனைநிகர் கருணை மூர்த்தி சாற்றிய துணர்ந்து கஞ்சா
தனைபுணர் மார்ப னுய சவுந்தர மாலைச் சார்ந்தான்
றனையரும் புகழ்சால் சாலீ சுகனெனுந் தரையாள்
வேந்தன். 110

---

375. "இருநோக் கிவளுண்க ணுள்ள தொருநோக்கு நோய்நோக்கொன் றந்நோய் மருந்து" என்னுந் திருக்குறளோடு இதனை ஒப்பு நோக்குக.

377. ஞாயிற்றின் மறைவைத் தற்குறிப்பேற்றத்திற் கூறுவது.

378. சாலீசுகன் தான் கண்ட பெண்ணை யடையுமாறு எவ்வாறோ எனக் கலங்கி, காரோணப் பெருங்கோயிலை நண்ணி இறைவனைத் தொழுது நின்றானாக, இறைவனும் "வருந்தற்க. நமது சவுந்தரப்பேர் மாலிடஞ் செல்லுதி" யென்று கூற, அவனும் அங்ஙனஞ் சார்ந்தமை சொல்லப்படுகிறது.

379. மந்தரம் பொருவு தோளான் மாமணிக் கோயின் மேவிச்
சுந்தர ராச மாலைத் தொழுதெதிர் நிற்ற லோடும்
அந்தர நாட ருண்ண வமுதமுன் னளித்த தெய்வக்
கந்தர மேனிமாலக் காவலன் முன்னந் தோன்றி, 111

380. புரவல வஞ்சே லாதி புராணர்க்கு வடபா லுள்ள
துர னுடைக் காரி காப்ப தோங்கிய தரும ரூபத்
திரமரு வியத ரைக்கு ரோசத்திற் றிகழ்வ தென்றும்
அரவநாட் டெளிது செல்லற் காயதோர் பிலமொன்
றம்மா. 112

381. ஆயவப் பிலத்தூ டேகி னரவநாட் டடைவை யாங்கு
மேயபன் னுகர் வேந்தன் மேதகு முகமன் செய்து
தூயதன் மகளை மன்ற றனைந்துசெய் தளிப்ப னென்றுன்
மாயனை வணங்கி யாங்கு விடைகொண்டான் வள்ளற்
கோமான். 113

382. அறிதுயி லமர்ந்த மூர்த்தி யருளிய வாறே சென்று
மறிமழுக் கரக்கா ரோண வள்ளலார் வடதி சைக்கட்
செறியரைக் குரோசத் தெல்லை சிவணிய பிலத்துட் புக்கான்
குறிகெழு நாகர் நாடு குறுகினு னரசர் கோமான். 114

383. ஏற்றமா ரொருமார்த் தாண்ட னியலமை பெருங்கு லத்திற்
ருேற்றமே யினன்யான் சாலீ சுகனெனு நாம முள்ளேன்
ஆற்றநின் பாங்க ரொன்று கருதிவந் தடைந்தே னென்றுன்
மாற்றமொன் றுரையான் சேடன் மகிழ்ச்சியிற் றிளைப்
புற்றுனே. 119

---

383. சேடனும், மகளிடம் நிகழ்ந்த செய்தி கேட்டு, அவளாற் காணப்பட்டவன் வந்து மணப்பான் என்று கூறி அவன் வரவை எதிர்நோக்கி யிருக்குங்காலை அவனும் வர, "நீ யாவன், வந்த கருமம் யாது" என வினவ, அவனும் விடையிறுக்கின்றுன். அவ்விடை ஈண்டுச் சொல்லப்படுகிறது.

384. ஒருநகில் மறையக் காட்சி யுதவினு னிவனே கொல்லென்
றருமக டன்னை நோக்க அனையளு மினைய னேநின்
மருமக னெனச்சொல் லாது சொற்றிட மகிழ்ச்சி கூர்ந்த
பொருவரு நாகர் கோமான் யாரையும் பொருந்தக்
கூட்டி, 120

385. மணமகன் றனக்கெண் ணில்லா மணிப்பணி யெடுத்துச்
சூட்டிப்
பணவர வல்குன் மாதர் பவளவாய் வாழ்த்து மல்கத்
தணவரு மிய்மு ழங்கத் தவாதமங் கலங்கூத் தாடக்
குணமுயர் மகளை யந்தக் கொற்றவற் குதவி னனே. 121

## அந்தகக்கவி வீரராகவ முதலியார்

இயற்றிய

# திருக்கழுக்குன்றப் புராணம்

நாட்டுப் படலம்

386. இல்லுழைக் குழவி யுள்ளி யுள்ளிப்போ
மெருமை யீட்டஞ்
செல்லுழிப் பொழிந்த பாலைத் தொடர்ந்துபோஞ்
செங்கா லன்னம்
மல்லலந் திம்பா லாழி மடுத்தெழு
மழைக்கார்ப் பின்னர்
நல்லெழிற் பனிவெண் டிங்க ணடப்பதே
கடுப்ப தம்மா. 17

கயிலாயச் சருக்கம்

387. சித்தர் விஞ்சையர் கருடகாந் தருவரத்தேவர்
பத்தர் மாதவர் புரந்தர ரேனையோர் பணிந்தாங்
கத்த சங்கர அரகர போற்றியென் றவைக்கண்
உய்த்த பன்மலர் மாரிகள் மாரியோ டொழுக்க, 27

388. வாணி நாரதன் றும்புரு முதல்வரர் சித்தர்
பாணி யாழ்வழி வழிந்ததேன் றிருச்செவி பருகச்
சேணின் மேநகை யரம்பையர் திலோத்தமை முதலாம்
பூணின் மாநகி லரமடந் தையர்நடம் புரிய, 28

389. முழாவுந் தக்கையு மொந்தையும் படகமு முருடு
மெழாலும் பாண்டிலுஞ் சங்கமும் வங்கிய மியாவும்
விழாவு மன்றலு மனையவத் தாணிமீ தியவர்
குழாமுங் கூட்டமுங் கடலுடைந் தனவெனக் குமுற, 29

---

386. துண்டீர நாட்டு வளங் கூறுவது. துண்டீரநாடு என்பது துண்டீரன் என்னும்
அரசனால் ஆளப்பட்ட காஞ்சி.
நிறம் பற்றிய உவமை.

387-9. கயிலாயச் சிறப்புக் கூறுவன.

390. கடையி னோக்கமுந் திருமுடித் துளக்கமுங் கருத்தும்
அடையு மாற்றமுஞ் செயற்கையிவ் வகையினு மமைத்து
நடைய காரண காரிய நாதர்யா வருக்கும்
உடைய நாயகன் றானென இருந்தன னுடையான். 30

### கங்காசலச் சருக்கம்

391. தார்விரித்தெழுஞ் சான்மலி யென்றொரு
பேர்விரித்த பெருந்திரு நாட்டகஞ்
சேர்விருத் தசிரவா வெனுமுனி
யேர்விருப்பி னிருவரை நல்கினான். 1

392. சண்டனும்பிர சண்டனு மென்றவன்
முண்டகத்து மனத்தும் முளைத்தவர்
பண்டிழைத்த பழவினைத் திமையாற்
புண்டரப்புள் ளுருவிற் பொருந்தினார். 2

393. இன்ன தன்மை யிருவரைத் தந்தைபார்த்
தன்ன புள்ளர சாமின்க ணீரென
நன்னர் வாழ்க்கையை நல்கினு மையயாந்
துன்ன லோமது பாவத் தொடர்ச்சியால். 3

394. அறிவிற் சான்ற வறநெறி யாற்றினும்
பொறியிற் போக்கும் பிறவிபு கத்தருந்
தறியைச் சூழ்பவர்க் கொவ்வவந் தாரணி
செறியக் காப்பினுந் தீநர குய்க்குமால். 4

---

391. சான்மலி யென்பது நாட்டின் பெயர். விருத்தசிரவா என்பது முனிவன் பெயர்.

392. சண்டன், பிரசண்டன் என்பன அம்முனிவனுடைய மக்கள் பெயர். அவ்விருவரும் முனிவனுடைய நெற்றியிலும் மனத்திலுந் தோன்றினவர்கள் என்று இப்பாட்டுச் சொல்லுகிறது. புண்டரம் = கழுகு.

394. அம் தாரணி = அழகிய நிலம்.

395. ஆத லாலில் லறத்து மரசினும்
போத லஞ்சுதும் புண்ணிய மூர்த்திதன்
பாத பூசனை ஞானப் பரிசினாற்
கோதிலா முத்திப் பேறின்று கூறென்றார். 5

396. என்ற மைந்த ரிருவரை மாதவ
னொன்ற மார்பந் தழீஇயெடுத் துச்சிமோந்
தன்றை நான்முறை யாய்தந்தை யுய்திறன்
நன்றை யாற்றுவர் நந்தன ரல்லரோ. 6

397. நீவி ரீது நினைத்த தெளிதன்று
தேவர் பூசையைச் சிந்தித்த சிந்தையாற்
பாவ ரென்கினு நங்குடிப் பல்சனம்
யாவ ருங்கரை யேறுத றிண்ணமே. 7

398. இறைவர் ஞானமு மேதமி லாமையும்
பொறையும் பூண்ட புதல்வர்ப் பெறுவரேன்
வறவ ரேனு மவரையவ் வல்வினை
பிறவி யேழினும் பின்றொட ராதரோ. 8

399. மைந்தர் காணும் பொருட்டிலென் மாதவம்
உய்ந்ததா லென்று வந்துவந் தோய்கலான்
எந்தை பூசனை ஞானத் தியல்பெலாஞ்
சிந்தை தேற விதிமுறை தேற்றினான். 9

400. சாத்திப் பன்மலர் தாதைதன் சேவடி
யேத்திக் கட்புனல் சோர விருவரும்
நாத்து தித்தினி நாதனைப் பூசனை
பார்த்து யுந்தலம் யாதெனப் பற்றினார். 10

---

396. பழைய நான்முறையே தாய்தந்தையர் உய்யும்வண்ணம் நன்றினை யாற்றுவார் புதல்வர் அல்லரோ என்றார் என்க.

399. மைந்தர்காள் நும்பொருட்டு என்றும், உவந்து உவந்து ஓய்கலான் என்றும் பிரிக்க.

400. உயுந்தலம் — இடைக்குறை.

401. என்னை யாளுடை யானிறை கொண்டதோர்
முன்னை வேத கிரிபுக்கு முக்கணன்
றன்னை வாழ்த்தித் தொழுமின் றநயர்காள்
பின்னை யாதும் பெறுததொன் றில்லையே. 11

402. என்ப தோத இருவருந் தாழ்ந்தெழுந்
தன்பரா யந்த வேதவெற் பண்மினர்
நன்ப ராக நறுமலர் நீரினன்
முன்ப ராவி யருச்சனை முற்றினர். 12

403. கோடி பானு கலந்தெழுங் கோலமோ
டாடு சேவடி யான்வந் தணுகிநும்
ஊடு வேட்கை யுரைமின்க ளென்றலும்
ஈடிலா முத்தி யேயென் றிவர்சொனர். 13

404. உற்றவிந் தக்கிர தயுகஞ் சென்ற
பிற்றை முத்தியை யீதுநம் பேரவை
யிற்றை நாண்முத லெய்திச் சிவகணக்
கொற்ற நீர்மையுங் கொண்மென நல்கினன். 14

தலவிசிட்டச் சருக்கம்

405. இறக்க வுத்தர காசியிற் கமலையெல் லையிற்போய்ப்
பிறக்க வம்பலந் தரிசிக்க முத்தியைப் பெறுவார்
சிறக்க வெத்துணை தூரத்துக் கழுக்குன் றச்சிகரம்
உறக்கை யாற்றொழ வக்கணத் தெய்துவ ருரவோய்!

---

402. பாரகம் = பூர்தாது.
404. ஈதும் = ஈவோம்.

சிவக்கொழுந்து தேசிகர்

இயற்றிய

## திருவிடை மருதூர்த் தலபுராணம்

### திருநாட்டுச் சிறப்பு

406. மள்ளர்தம் விழியின் சாயல் கயலென மறிக்கக் கையால்
தெள்ளுநீர் வயலு ணின்று செறிகளை களையு நல்லார்
அள்ளல வனையும் பற்றிக் குழிசியி னடைப்பர் காணிற்
கள்வனை விடுவர் கொல்லோ வுலகினிற் களைக மைர்ப்பார். 32

407. விளைவுகண் டரிவாள் கொண்டு மேவின ரரியும் போது
களையினிற் பிழைத்த செங்கட் கமலமொண் குமுத மென்னுங்
கிளையுறு மலருங் கூட அரிபட்டுக் கிடந்த வம்ம
தளர்வுறி லடுத்தோர் தாமுந் தளர்வுறு மறிஞர் போல. 37

### திருநகரச் சிறப்பு

408. மொழிதரு மொருமை தன்னே டிருமைசெய் முத்தீ வேட்டுச்
செழுமறை நான்கு நன்முய்த் தெளிந்துமற் றையத் தீரப்
பழுதக லங்க மாறும் பயின்றர ணிடத்தி லன்பும்
எழுதரும் பிறவி யெட்டா தியற்றிநாள் கழிப்பர் சில்லோர். 42

---

406. அலவன் கள்வன் என்பன ஒரு பொருளன.
கள்வன் = திருடன், நண்டு. களைகள் குற்றங்களும் வயலின்கண் களைகளுமாம்.

407. இதிலுள்ள உவமைநயத்தை நோக்குக.

408. திருவிடைமருதூரை வருணிக்கு மிடத்துச் சிலாது இயல்பு கூறப்படுகிறது.

409. வண்ண வண்பிறை நுதல்விரி மதர்விழி வந்தீண்
டெண்ணின் மாதவ மியற்றிமெய் யிளைத்தனை
போலும்
நண்ணு முத்தமிழ் முனியுரை பயன்பெற நாமும்
அண்ண லுற்றன முருவுகொண் டருந்தவர் மகிழ. 2

410. திருந்தி டும்பர்முன் பாலிடை நெய்யெனத் திகழா
திருந்தி டெந்தமைக் காட்டினை யெளிமையாய்ப்
புவியோர்க்
கருந்த வம்புரிந் தவரிடத் தன்பினு லதனைப்
பொருந்து றக்கடைந் தெடுத்தெதிர் வைத்தது
போல. 3

411. புவன மெங்குநின் மகிமையே பொருந்திட
நிற்பாய்
தவமி யற்றிய தெவ்விதஞ் சார்ந்தெவ ணிருந்தாய்
அவண ருந்திய தெதுநமைப் பிரிந்தனை யதன்பின்
உவகை பூத்திடு மனத்திடை நினைத்ததீண்
டுளதோ. 4

412. நாம கிழ்ச்சி யுற்றன மினிநவில் வரமாக
நாம மிக்கசீர்க் கைலையை நல்குவோ மென்னின்
நீம கிழ்ந்துறைந் திடுமது நின்னதே யாகும்
நீம முற்றசெல் வங்களு நிற்குநின் னேவல். 5

413. மாயைநீக் குவமெனில் வித்தை வடிவநின் மேனி
மேயகா மமாதிய பகைவி லக்குவ மென்னில்
ஆய வுட்பகை யுனக்கிலை யன்பினே ரெவர்க்கும்
பாய வின்பமு முத்தியும் பரிவினீ தருதி. 6

---

409. மதர்விழி = மதர்த்த கண்ணையுடையோய் ; பார்வதீ.
முனி = அகத்தியன்.

412. நீமமுற்ற = ஒளிபொருந்திய.

414. மற்று நின்றனக் கியான்றரு வரமொன்று மில்லை
யுற்றி டுன்மொழி யமுதை யுட்கொண்டு நாமுவப்
பாம்
இற்றை நந்தமக் கொருவரந் தருதிநீ யென்னக்
கற்றை வார்சடை யவன்சொலக் கவுரிமிக் குவந்து, 7

415. மன்னுற வுணர்வை யாவு மற்றினி யெனைவி னுத
லென்னையான் வினுவி லுண்மை யிசைத்திட
வேண்டுமன்றே
பன்னுறு பரமானந்தப் பரவையுண் மூழ்கி யாங்கே
துன்னிநின் றதனைத் தானே தொடர்ந்தினி
தருந்தல் செய்து, 9

416. வாசக மனத்திற் கெட்டா மறைத்தனிப் பொருளா
யோங்குந்
தேசினைப் பொருந்தி டன்பிற் செழுமல ராதி
கொண்டு
பூசனை யகத்தி னுள்ளும் புறத்துஞ்செய் திருந்தே
னுன்பால்
நேசமிக் குடைய ராகி நிலவுநின் னடிய ரென்ன, 10

417. நினைத்ததை யுளதோ வென்றாய் நினைப்பன்யான்
மறைப்பி னீயம்
மனத்திலீ துணர வந்து வதிந்ததூஉ மறிவே
னன்றாய்
வினைப்படு தவஞ்செய் காலை விளங்கிராப் பகலே
காணேன்
எனைத்தனி யின்று கண்டே னுனைமுன்னு மின்றுங்
கண்டேன். 11

---

415. உமை கூற்று.

418. சாற்றிடு விசும்பி னூடு தம்பித மாகி நிற்குங்
காற்றென விரவி யின்பாற் கலந்திடு திங்களென்னப்
போற்றிடங் குன்பா னின்றே னெனவுமை புகல
லுற்ருள்
மாற்றமின் னவைகட் கண்ணல் மகிழ்ச்சிகூர்ந்
திசைக்கு மன்னே. 12

419. ஆற்றுநின் றவத்தி னுண்மை யறியவே யின்று
காறுந்
தோற்றிடா திருந்தேங் கண்டேந் தோற்றினஞ்
சோதி யாகச்
சாற்றிடு மினைய சோதி யுருவமா மிலிங்கந் தன்னைப்
போற்றிடு மெவருங் காண வீண்டுநாம் பூசிக்
கின்ருேம். 13

420. தருபவர் தருவ யாவுந் தடக்கையின் வாங்கி நல்கித்
திருவளர் மார்ப னண்ண லேவின செய்து நிற்ப
அருமறை யாக மங்க ளறைதரு விதிகொண் டந்தப்
பொருவரு மூர்த்தி தன்னைப் பூசையங் கினிது
செய்து, 22

421. ஆங்கதன் பின்ன ரேவ லாற்றிய வமர ரியார்க்கும்
ஓங்கிடு வரமு மன்னே ருலகமு மருளிச் செய்து
பாங்குறு மிமய வல்லி பங்கய வதன நோக்கித்
தேங்கிள முறுவல் செய்யத் தேவிநே ரின்ன
சொல்வாள். 23

---

419. பூசிக்கின்ருேம் என்று சொல்லி இறைவன் பூசிக்கத் தலைப்பட்ட தும், பொற்பீடத்தைப் பூமடந்தை கொடுக்க, மயன் விமானந்தர, ஒவ்வொரு தேவரும் பூசைக்கு வேண்டிய ஒவ்வொன்றைத் தருவாராயினர்.

422. பொன்னிறக் கடவு ளாதிப் புலவரும் பிறரு மெய்தி
நின்னையர்ச் சிப்ப தன்றோ நீதிநீ யிந்த மூர்த்தி
தன்னிடை யெவ்ரைப் பூசை புரிந்தனே சாற்று
கென்றாள்
முன்னவன் கருணை யுற்று மொழிகுவ னெவருங்
கேட்ப. 24

423. ஓதுமர்ச் சனைசெய் தோனு முகந்து கொண்ட
தேவும்
போதுறு கோதை வேற்கட் பொற்றொடி நாமே
யாகும்
ஏதுவென் னெம்மை நாமே யருச்சித்தற் கென்னி
லிந்த
மாதவர் நமைப்பூ சித்தன் மறந்ததீண் டறிதற்
காமால். 25

424. என்னவோ திடலு மன்னை யிமைத்திடோர் குழுவுங்
காண
நின்னரு ளுருவந் தன்னை நிகழுமா தவர்க்குக் காட்டி
முன்னதைப் பூசை செய்யு முறைமையுங் காட்ட
லுற்றாய்
அன்னவ ரிடத்திலுற்ற அளவிலாக் கருணை
தன்னால். 26

425. அவர்களை நோக்கி மேலுன் னருட்டிரு வாக்கி
னாலும்
உவகையிற் படுத்த வேண்டு முரைக்குமுன் னதுவு
நீயே
நவிலுவை யெனினுமி யானு நண்ணுவ ரிடத்தன்
பாலுந்
தவறின துரிமை யாலுஞ் சாற்றின னென்றாண்
மன்னே. 27

426. சத்தியிது மொழிந்திடலு நித்தனுவந் தருந்தவர்க
டம்மை நோக்கிப்
பத்தியெனுங் கற்பகமொன் றுங்களிடத்
திருந்தெவையும் பயக்கு மாற்றான்
அத்தனையன் றனக்கரிய நம்மையுங்கட்
கழைத்தெளிதி னல்கிற் றன்ன
தெத்தகையோர்க் குளதவர்கட் கெளியமியா
மவர்வேண்டு மெவையு மீவோம். 28

427. என்றிறைவ னிசைத்திடலு முனிவரெங்கட்
குமதிடத்தி னிலகு பத்தி
துன்றிடச்செய் வதுவுமதைக் கொள்வதுவுங்
கொண்டுவினைத் துயரி னீக்கி
நன்றிதரு கருணைபுரிந் தருளுவது மியாவையுநீர்
நாங்க ளிங்கே
யொன்று முணர்ந் திலமெமைநீ ரன்புடைய
ரென்றதனு லுயர்வு பெற்றோம். 29

428. பூசைபுரிந் திடுபவர்க ளெவரேனுஞ் சுகர்களெனப்
புகலு நூல்க
ளாசையுட னஃதியற்று ரெவரேனும்
விலங்கொடுபுள் ளனைய ராகுந்
தேசுறுநந் தமைப்பூசை யொருமலரா
யினுங்கொண்டு செய்வோர் கட்கு
வீசுபுகழ் விரதமொடு தவந்தருமம் வேறொன்றும்
வேண்ட லின்றே. 44

---

427. நாங்கள் அன்புடையோம் என நீர் கூறியதால் நாங்கள் உயர்வு பெற்றோம் என்று முனிவர் இறைவற்குக் கூறுகின்றார். பிறகு, இறைவன் பிரணவத்தின் பொருளையும் சிவபூசையின் மேன்மையையும் முனிவர்க்கு உரைத்தருளுகின்றான்.

429. துன்றுபுக ழருச்சனைசெய் தவர்பெருமை
தனையெவரே சொல்ல வல்லார்
என்றுசுடர் விழிநுதற்செஞ் சடைக்கடவு
ளிசைத்திட்டா னிமையோர் தாமும்
நின்றவகத் தியனாதி முனிவரரும் பூசிப்பா னிதமு
மெண்ணி
யின்றிறைவற் காலயஞ்செய் திடுகவென
மயனையழைத் தியம்பி னார்கள். 45

430. அற்புறு மயன்வா னவருமா தவரு மறைந்தசொற்
செவிபுகுந் திடுமுன்
சிற்பநூ லதனிற் சிறந்திடு விதியைச் சிந்தையிற்
குறித்தன னதன்முன்
சொற்பயில் கனகச் சிகர மாங்கே தோன்றிய
தஃதனை யுவன்முன்
கற்றிடு திறத்திற் சமைந்ததோ விறையோன்
கருணையிற் சமைந்தது கொல்லோ. 46

431. மொழிதருஞ் சோதி மயமகா லிங்க மூர்த்தியைப்
பெருநலக் கொம்பைப்
பொழிதருங் கருணை யேகநா யகனைப் புறத்துள
தேவர்க டம்மை
யெழின்மிகுந் திலங்கு மவரவர் கோயி லிடங்களிற்
காமிகா கமத்தின்
உழிபெரு விதியி னுடொறும் பூசித் தூவகையுற்
றிருந்தனர் மாதோ. 50

432. பன்னக மதனைப் பணியெனப் புனைந்த பரமனு
முமையவ ளுடனே
இன்னண முனிவர் கணங்களும் விசும்பி னிலங்கிடு
தேவர்தங் கணமுங்
கின்னரர் கணமும் பூசனை புரியக் கிளர்தருபேரரு
டாங்கி
யன்னவர் வேண்டும் வரங்களீந் திருக்கு மணிதிக
ழாலய மதனில். 51

**பிரதக்கிண மகிமைச் சருக்கம்**

433. அதினுற் றிசைவலம் வருவோர் பெறுவர்க
ளணிநீ டிலகிடு முயர்செல்வம்
மதிநன் குறுவர்கண் மகவுற் றிடுவர்கள் மருவார்
தமைவென் றிடுவார்கள்
சதிர்பெற் றிடுவர்கள் பிணியற் றிடுவர்கள்
சகமெச் சுறுவர்க ளிவையன்றிப்
பதமொன் றவணுறு மதனுக் கியல்புறு
பரிமே தப்பல னடைவார்கள். 3

434. மகரா லயம்வளை தருமிப் புவிதனை வலம்வந்
திடினுறு வதுமெய்தும்
புகழ்வா ரணமுக விறைவே லவன்மறை புகல்வோ
ரநுமதி முனமெய்தி
மிகுமா தரவொடு செயினெய் திடுபயன் விரைவெய்
திடுவெங் கொலையாதி
யிகழ்பா தகவினை யவர்செய் தனவுள யாவுந்
தெருமர லுடனேகும். 4

435. கையா மிணைமலர் குவியா மனமொடு கருணைத்
திருமுக மலர்வெய்த
மெய்யா லொருவலஞ் செய்வா ரதனிடை வினைநீத்
துளமெண் ணியவெய்திப்
பையா டரவணி யெம்மா னுறைதரு பதியுற்
றுறைவர்கண் மகிழ்வோடு
தையா மதியினில் விழவிற் புரிதரு தகையோர்
பெறுபலன் புகல்வாரியார். 6

---

433–5. இப்பாடல்களில், திருவிடைமருதூர்க் கோயிலில் உள்ள சுவ மேதப் பிரதக்கிணம் என்பதிற் பொருந்தி வலம் வருவோர் அடையும் நன்மைகள் சொல்லப்படுகின்றன.

## மீனாட்சிசுந்தரம் பிள்ளை

## இயற்றிய

# காசி ரகசியம்

### காசி வணக்கம்

436. தானங்க ளெதுசொற் றாலுந் தனைமுத லெடுத்துக் கூறு
மானங்க ளுடையதாகி மாதேவன் வடிவுற் றூர்க்கு
ஞானங்க ளோடு நல்கி தலமுற வைகு மொண்பூங்
கானங்கள் பொலியுந் தெய்வக் காசியை வணக்கஞ் செய்வாம். (பாயிரம்) 13

### கங்காதேவி வணக்கம்

437. மாற்றவ ளிடப்பால் மேவி வாழ்வதை யுணர்ந்து வள்ளல்
போற்றுறும் வலப்பால் மேவிப் புரிந்துவந் தாடா நின்றோர்
சாற்றருங் கொடிய பாவத் தனையழித் தறங்க ளெல்லாம்
ஏற்றிநன் கருளுந் தெய்வக் கங்கையை யிறைஞ்சல் செய்வாம். (பாயிரம்) 14

### காசி மான்மிய முரைத்த அத்தியாயம்

438. மற்றொரு தலத்திற் பரசிவ காட்சி மருவுற வேண்டுவோர் விரதம்
உற்றொரு மனமா யியமமுற் பலநா ளுளுற்றினு மதுபெற லரிதாங்
கற்றொரு மனமா யடங்குறு ரேனுங் காசியில் வதிந்திறப் பார்க்குப்
பற்றொருங் ககல வகிலநா யகனே பரையொடு தோன்றிநன் கருளும். 6

---

438. வேத தரும முனிவரென்பார் தீபகனுக்குக் காசியின் பெருமை யுரைக்கலுற்றுக் கூறுகிறார். பரை = பார்வதி.

439. காசியின் யாவன் விருப்பம்வைத் திடினுங் கருதுபல்
வானவர் குழாமும்
ஆசியி னவன்பால் விருப்பம்வைத் தடையு மானந்த
ரூபீயா யடியார்
பேசியின் புறவீற் றிருப்பவ னமரும் பெற்றியா
லானந்த வனப்பேர்
நாசியின் விழிவைத் தவருஞா னியரும் நாடொரு
மியம்புவ ததற்கே. 7

440. மேவிய காசி நகர்த்தியா னஞ்செய் விறலினன்
கூற்றினைக் கடப்பான்
பாவிய வரங்கள் பற்பல நல்கும் படிபல தீர்த்தமு
முளவால்
ஓவிய மணிமா ளிகையவி முத்தத் துறைபவர்
யாவரே யெனினுங்
காவியங் கண்ணு ளொருபுறப் பெருமான்
கழலிணை கலந்திடுந் தகையோர். 8

441. அடைதர முடியா தணித்தலாத் தேசத்
தமர்ந்துகா சியைநினைத் தாலும்
மிடைதரு பலபா தகங்களி னீங்கி விரும்புஞா
னத்தின் ராவர்
தடையற நாளு மித்தலத் தன்ன தானஞ்செய்
பவர்பெறும் பேற்றை
யுடையநா யகனு மொழிவனோ மொழியா
தொழிவனோ யானறி கிலனால். 9

---

439. காசிக்கு ஆனந்தவனமென்று பெயர் வந்த காரணங் கூறுகிறது.
440. பாவிய = பரவிய், நிரம்பிய.
441. அணித்து அல்லாத் தேசம் என்பது இடைக்குறைந்து நின்றது.

442. அன்னிய தலத்திற் கோடிமா மறையோர்க்
கனேகநா ளன்னமிட் டதனுன்
மன்னிய பலமிக் காசியி லொருவன் வயிற்றெழு
பசிசிறி தவிய
பன்னிய பிச்சை யிடுதலி னுண்டாம் பலத்தினை
நிகர்தரா தென்னின்
முன்னிய விதற்கு நிகரென வொன்றை மொழிநரு
மடவரே யன்றே. 10

443. ஆன்றவித் தலத்தில் வசித்திட வொருவ னவாவுறி
னதற்குவிக் கினஞ்செய்
மான்றநெஞ் சுடையோன் கிளையொடும் பிதிரர்
வகுப்பொடு மளற்றிடை யழுந்தும்
என்றவித் தலத்துக் கேத்திர சந்நி யாசஞ்செய்
திருப்பவர் பெறும்பே
றான்றமற் றெவரான் மொழிதர முடியு மும்பர்நா
யகனவ ரன்றே. 11

444. அன்னிய தலத்திற் கொலைகள வாதி யைம்பெரும்
பாதகம் புரிந்தோர்
மன்னிய காசி யகத்தடைந் தொழிப்பர் மற்றிதி
னிருந்தவை செய்வோர்
துன்னிய வெந்தத் தலங்கள்சென் றுலுந்
தொலைதரா துறவளர்ந் தெழுந்து
பன்னிய கொடிய நரகெலாம் புகுத்திப் பாரழி
யினுமழி யாதால். 12

---

443. அளறு = நரகம்.
444. இதனைக் கீழேவரும் 507-ம் பாட்டோடு ஒப்பிடுக.

445. பூதலத் துள்ள தீர்த்தங்க ளனைத்தும் புகூஉத்துளைந்
தாடலின் பேறு
காதலின் மணிகன் னிகைப்புன லொருநாட்
கலந்துமூழ் கிடுபல னெவ்வா
றாதலிற் காசி யகத்தொரு கணம்வா ளாவமர்
தலின்வரு பேற்றை
யோதலுற் றிடுபஃ றலங்களும் பற்ப லுகம்வசிப்
பினுமளி யாவே. 13

446. கண்டமாத் திரத்தாற் சகலபா தகமுங் காற்றிமிக்
குயர்த்துத லிதுவே
யுண்டரா திபரும் பொன்னுல காதி யவாவுத
லொழிந்திவ ணமர்வார்
எண்டவாக் கலியிற் காசியின் வசிப்பா ரேயலாற்
கதியெவ ரடைவார்
வண்டருப் பொழில்சூ ழித்தலம் பாவ மலைக்கொரு
வச்சிரா யுதமே. 14

447. முன்னைநா ணடந்த தொருகதை யுண்டான்
மொழிகுவ னதனையுங் கேட்டி
யென்னைமற் றதுவென் றிடினெரு கற்பத் திறுதியிற்
பிரளய மெழுந்து
பொன்னைநேர் நிறத்த புடவியை மூடப் புக்கரம்
படிந்ததப் புடவி
மின்னைநேர்சடைமா முனிவர ராதி மேலுல
கத்தவர் வெருண்டார். 15

448. திருமறு மார்ப னடியிணை வணங்கிச் சீதர நந்த
கோவிந்த
மருமலர்த் துளப மாலைதாழ் புயத்த மாமகண்
மணாள கூர்வாள

---

445. புகூஉத் துளைந்து = புகுந்து மூழ்கி.
மணி கன்னிகைப்புனல் = மணி கன்னிகைக் கட்டத்தில்.
447. புடவி = நிலம்.

வெருவரும் புடவி முழுவதும் பிலத்து வீழ்ந்தது
கண்டுங் காணுய்போற்
பொருவரும் புகழ்நீ யிருத்தலென் னின்னே
புக்கெழுப் புதியெனத் துதித்தார். 16

449. துதிமொழி கேட்டு விச்சுவ நாதன் றுணையடித்
தாமரை நினைந்து
மதியமை நெடுமா லெறும்வலி படைத்த
வராகமாய்ப் பாதலம் புகுந்து
திதியமை புடவி யொருமருப் பேற்றுத் திறலின்மே
லெழுந்துமுன் போந்து
பதிதர வைத்தான் வராக கற்பப்பேர் பட்டதக்
கற்பத்துக் கம்மா. 17

450. பண்டுபோற் புடவி நிறீஇயது தெரிந்து பண்ணவர்
முதலியோர் நறும்பூக்
கொண்டுதூய்ப் பணிந்து துதித்திட நெடுமால்
குறுகிய வவர்முக நோக்கி
மண்டுகா தலினென் னிருதயத் தளியின்
மகிழ்ந்தம ரகில நாயகற்கே
தொண்டுபூண் டியற்றுந் துதியவ ளருளாற்
றென்னிலை நின்றதிப் புடவி. 18

451. செய்யபொற் றகட்டின் மணிபதித் தென்னத்
திகழுமிப் புவியிடைக் காசி
வெய்யவிப் பெருக்கு வெள்ளமிக் காசி
வியனக ருட்புகா தொழிந்த
தையமற் றதனு லெற்றைக்குங் காசி
யழிவிலா திருப்பது தேற்றம்
வையமுற் றுணர்ந்து காசியை யடையின்
மறுகுதல் சற்றுமின் றுமால். 19

---

450. பண்ணவர் = பண்ணினையுடையோர்; தேவர்.
451. மறுகுதல் = கலக்கமடைதல்.

452. ஆனந்த மயமா யானந்த கானத்
தகிலநா யகன்பல வுயிர்க்கும்
ஆனந்த முதவு மன்னபூ ரணியோ
டமருவ னவன்றரி சனஞ்செய்
தானந்த முனிவர் பற்பல வரங்க
ளவாய்திறீஇப் பூசனை புரிந்த
ஆனந்த விலிங்கம் பற்பல வுளவா
லவற்றிய லுரைக்கமுற் றுதே. 20

453. திருமல னமரா நின்ற நெடும்புகழ்த்
தலங்க ளெல்லாம்
பொருமலற் றியானுங் கூடப் பொருந்தியே
யமரா நிற்பேன்
அருமையிற் பிரித லோர்கா லடுப்பினு மளவி லாத
பெருமையிற் சிறந்த காசிப் பிரிவையா னென்றும்
பேணேன். 22

454. என்னையா னுரையா நிற்ப தென்னையாண் டருளின்
மேவு
மின்னைநேர் சடில மோலி விச்சுவ நாதன் றானும்
அன்னைநே ருமையா ளோடு மரும்பெறன் மகார்க
ளோடுந்
தன்னைநேர் காசி நீங்கான் கயிலையிற் றணந்த
போதும். 23

455. பற்பல வுரைப்ப தென்னை பரகதி யடைய
வேண்டின்
வெற்பெனத் திரண்ட பாவ மிக்கவ
ரெனினும் யார்க்குஞ்
சொற்படு பழியே நல்குந் துணிபுடைக் கலியி
னெண்ணு
தற்புதக் காசி மேவி யமர்தலே வேண்டு மன்னே. 24

---

453. பிறதலங்களைப் பிரிந்தாலும் காசியைப் பிரியேன் என்று திரு மால் முனிவர்க்குக் கூறியது. திருமலன் = சிவன்.

454. கயிலையை ஒருகால் சிவன் பிரிந்தாலும், காசியை ஒருநாளும் பிரியான் என்றவாறு.

## கச்சியப்ப முனிவர்

### இயற்றிய

## திருப்பேரூர்ப் புராணம்

### திருநீற்று மேட்டுப்படலம்*

456. பெரிது மோங்கிய வத்தகு பிப்பில நிழலில்
தெரிய வோதிய வித்துரு லதையெனுந் தெரிவை
விரியும் வார்புனல் விழுநதி தோய்தர விழைவுற்
றுரிய ஆயமுந் தானுமுற் றவணடுத் திருந்தாள். 17

457. இருக்கு மெல்லையின் மரஞ்சிலை யெனுமிவை தமையும்
உருக்கு மின்னிசை யாழ்தழீஇ யுளர்ந்துபாடினளால்
தருக்கின் வைகிய தன்மையுங் கவினுமா டகங்கள்
திருக்கி யாழெழூஉந் திறத்தையும் நோக்கினனரக்கன். 18

458. மாது மற்றிவள் போல்பவர் வையகத் தில்லை
கோதை மல்கிய குழலியைக் குறுகுது மென்னுப்
போதி யின்குளிர் கொம்பினைப் பொருக்கென விடுத்துச்
சோதி மல்குபெண் கொம்பினைத் துன்னினனரக்கன். 19

---

* இப்படலத்தில் திருப்பேரூரின்கண் உள்ள திருநீற்று மேட்டுமண்ணைக் காஞ்சி நதியிற் குழைத்திடலால் வரும் நன்மை பேசப்படுகிறது. பாண்டிநாட்டுக் கசேந்திர மோக்க நகரத்தில் ஆண்ட "தான்மிக பாண்டியராசன்" என்பானுடைய மனைவி "வித்துருலதை" என்பாளைப் பற்றிக்கொண்டிருந்த அரக்கனொருவன் அவளினின்று நீங்கிய வரலாறு கூறப்படுகிறது.

456. அத்தகு பிப்பிலம்—கொங்கணதேசத்து அந்தணன் ஒருவன் முன்னர்த் தாமிரபர்ணியில் நீராட வந்தவன் மாண்டவுடன் அரக்கனாகிப் பற்றிக்கொண்டிருந்த அரசமரம்.

457. உளர்ந்து = தடவி.

459. பாடு மாடகத் திவவியாழ் பாணியின் வழுக்கி
மாடு வீழ்தர வளரிளங் கொடிமறிந் தாங்கு
நீடு வார்குழல் வித்துரு லதைவிய னிலமேற்
பீடு சோர்தர விழுந்தனள் பெயர்ந்தன ளுணர்வு. 20

460. புடையு ளார்பொருக் கெனச்சிவி கையிற்கொடு போந்தார்
அடைய லார்க்குரு மேறனை தான்மிக வரையன்
நடையின் மாமயில் வென்றவிந் நங்கைதான் பிணியை
உடைய ளாவளோ வெனப்பெருந் துயருளத் துழந்தான். 22

461. பிரம ராக்கதன் பிடித்தன னெனச்சிலர் பேச
விரவி டாகினி மோகினி பூதவே தாளம்
பரவு பேய்முத லானவற் றியல்பெலாம் பயின்ற
கரவி லார்தமை யழைத்தனன் காவலன் கடுப்பின். 23

462. அடிய ரின்னலை யரக்குதற் கெளிவருங் கருணை
குடிகொ ணாதன் குறைவற நல்வினை வளர்க்கும்
முடிகொள் வேந்தனுக் கிரங்கிமுன் னடுத்தனன் வேந்தன்
படியின் மாதவன் பதமலர் பணிந்தனன் பண்பால். 25

463. அம்மை நல்வினை சாலவு மாற்றினை யன்றி
இம்மை நல்வினை யெதிரற வீட்டினை யினையை
மம்ம ரின்னலின் மறுகுவ தடாதென மணிவேற்
செம்மல் வந்தன மெனமுனி செயிர்தபக் கூறும். 26

---

460. தான்மிக அரையன் — பெயர்.

461. கடுப்பின் — விரைவில். (அவ்வித்தை வல்லார் செய்தன பயனின்றிப் போனமை 24-ஆம் பாட்டிற் சொல்லப்பட்டுளது.)

462. அரக்குதற்கு — நீக்குதற்கு.

464. மறைகள் பல்கலை முழுவதுந் தெள்ளிய மறைஞன்
அறையு மந்திர முழுவதுங் கணித்துய ரறிஞன்
நிறையு மொண்பொரு ணிகழ்த்திய தானத்தி
னேற்றுப்
பொறையி ருந்தனு நீத்தவன் புல்லிய வரக்கன். 27

465. ஆத லாலவன் மந்திர மாதிகட் ககலான்
பாதி மாதொடு மிரசத மன்றினிற் பரதஞ்
சோதி நாயகன் சுரர்தொழக் குயிற்றுபே ரூரின்
வேதன் யாகஞ்செய் விழுத்தகு குண்டமொன்
றுளதால். 28

466 அண்ண லார்திரு வருளிஞ னீறதில் வளரும்
நண்ணு நீற்றினைத் தரித்தவர் வினையெலா நசிக்கும்
உண்மை யீதுநீ யொண்டொடி மனைவியைப் போதந்
தெண்மை தீர்நதிக் காஞ்சியி னிரும்புன லமுத்தி,
29

467. பிரம தீர்த்தமும் பெய்வளை யுருவினிற் பெய்து
வரநி லாவுமந் நீற்றினை வடிவெலாந் திமிர்தி
விரவு தீவினை யரக்கன்விட் டகலுமென் றுரைத்துச்
சுரர்கள் போற்றுறு நாரதத் தொன்முனி
மறைந்தான். 30

468. உரைத்த மாதவ ஞெண்கழ லுவந்தெதிர் வணங்கி
விரைத்த பூந்தொடை வேம்பினை யாக்கிய வேந்தன்
அரைத்த சாந்தணி யருப்பிளங் கொங்கைமா
தினைக்கொண்
டிரைத்து ராவிய கடற்படை யொடுமினி
தெழுந்தான். 31

---

464. தனு—உடல்.

469. அந்த ணர்க்கரும் பொருள்பல வார்த்தினன் காஞ்சி
உந்தி யம்புன லுறுமுறை யுவகையிற் படிந்தான்
சுந்த ரந்தவிர்ந் திருந்ததன் றுணைவியைத்
தோய்த்தான்
நந்து குண்டிகைத் தீர்த்தமு நங்கைக்காட் டினனால்.
(33)

470. நீற்று மேட்டினை யடுத்தொளிர் நீற்றினை யள்ளிப்
போற்று காஞ்சியம் புனல்கமண் டலப்புனல்
பொழிந்திட்
டாற்றன் மன்னவ னங்கையிற்
குழைத்துமென் றேறல்
ஊற்று பூங்குழ லாளுடன் முழுதும்பூ சினனால். 34

371. நீறு பூசலு நேரிழை மாதுட னின்றும்
பாறி யாங்கொரு பாறையிற் படீரென விழுந்து
கீறி நீண்முடி கெழுமிய பிரமராக் கதன்முன்
கூறு தீவினை யுடலினைக் கொம்மென விடுத்தான். 35

472. விடுத்த வவ்வயின் விண்ணவ னுயினன் விமானம்
அடுத்த தன்னதி னேறின னரசனை நோக்கித்
தொடுத்த தீவினை யேனையுந் தூயனாக் கினையென்
றெடுத்து நன்னய மியம்பின னெய்தினன் றுறக்கம்.
36

473. மம்மர் நீங்கிமுன் போலுணர் வெய்தினன் மாது
செம்மன் மன்னவ னேக்கினன் சிந்தையிற்
களித்தான்
வம்மென் றன்னவ டனைக்கொடு மறுவலுங் காஞ்சி
விம்மி ரும்புனல் படிவித்தான் விதியுளி மாதோ. 37

474. வணங்கி நாதரை விடைகொண்டு வல்வினை தீர்ந்த
அணங்கி னேடகன் கழனிசூழ் கன்னிநா டடுத்து

---

469. பாண்டியன் தனது நாட்டை விட்டுப் புறப்பட்டவன் பேருரை யடைந்து காஞ்சியம் புனலுள் மனைவியொடு படிந்தமை சொல்லப்படுகிறது.

நிணங்கொள் வேலவ னெடிதுவாழ்ந் திருந்தன
னென்ப
பிணங்கு ளுதநான் முறையுளி யறமெலாம் பெருக்கி.
39

475. பரவு நீற்றுமேட் டொளிர்பொடி பரித்தவர் தமக்குப்
பிரம ராக்கத மேயன்று பெயர்வது மலடும்
விரவு நோயும்வெவ் விடருந்தீ வினையுமே வுவன
வரதி லாவுபல் பொருள்களும் வானமும் வீடும். 40

நிரம்ப வழகிய தேசிகர்

இயற்றிய

## சேது புராணம்

### தோத்திரச் சருக்கம்

476. உலகி லுயர்ந்தாய் பெருமாயை யுடையா
யிலேமூன் றுடைக் கழுமுள்
இலகு படையா யிணைமலர்த்தா ளிறைஞ்சு மடியா
ரிளைப்பனைத்தும்
விலகும் பரனே யெப்பொருளும் வீட்டு முதலே
விண்ணுறையும்
அலகி றேவர் தந்தேவே யருமா மறையின்
சிரத்தறிவே. 4

477. யோக முனிவர்க் குண்மைநெறி யுரைப்பா
யென்று மொருங்கெவையும்
ஆக நிறைந்த வானந்தா வகில நாதா வுலகளிக்கும்
ஏக முதலே சுகவடிவா மிறைவா வணங்கு
மெழிற்றெண்டர்
சோக மருவும் பயநீக்கற் றுணையாஞ் சரண
மலர்த்துகளாய். 5

475. பரித்தவர்—தாங்குவோர்; தரிப்போர். பெயர்வது இராக்கதமே யன்றி, மலடும் நோயும் இடரும் தீவினையும் என்க. மேவுவன பொருள்களும் வானமும் வீடும் என்க.

476-9 இவை நான்கு பாட்டாலும், இராமன் சேதுறை சிவனைப் போற்றியது கூறப்படுகிறது.

478. பேரா ருயிரே யிறும்பூது பிறங்கும் வீரப்
பெற்றியினாய்
சோரா மகபா தகந்தீர்க்குந் துணைவா வவிச்சை
துடைப்பானே
காரார் கால காலனே கால மானா யதுகடந்தாய்
சாரார் போக்கு வரவிரண்டாற் றவிக்குந் தாபந்
தணிப்பானே. 6

479. இலங்கை நிருதன் பிரமகத்தி யென்கண் இலையாம்
வகையருளால்
விலங்க முனிந்த வேதியனே விடமுண் டிருண்ட
மிடற்றானே
யலங்கன் முருகுகமழ் கூந்த லரிவை பாகா
வமரநதிச்
சலங்கொண் முடியா யிறுதிபடாத் தலைவா விரூபத்
தழற்கண்ணா. 7

480. படர்செங் கதிர்வெண் மதியழலாற் பயிலு நயன
மூன்றுடையாய்
சுடரு மகுட கோடீரா சோம ரூபா மார்க்கண்டற்
கடருங் கூற்றின் பயங்கடிந்தா யண்ட மனைத்து
மாக்கியளித்
தடனங் கழிக்கு முக்கிரனே யொன்றாய் முழுது
முணர்ந்தோனே. 10

481. வரனே வரதா ஐவகையா மறங்க ளொழிப்பாய்
வாய்மைபயில்
உரனா ரின்ப வுருவினனே யுழலும் பவநோய்க்
கொருமருந்தாம்
பரனே பயமில் பட்டிகர்க்கும் பண்புள் ளவர்க்கும்
பதியாஞ்சங்
கரனே கணக்கில் கணத்தலைவர் காடு புரக்குங்
காவலனே. 11

---

479 விரூபத் தழற் கண்ணா—வேறாகிய மூன்றாங் கண்ணையுடையோய்.
480-2 இலக்குவன் போற்றியவாறு.

482. காட்டு மகிலத் திருவுருவா காணு மவற்றின்
காரியானுய்
ஈட்டும் வினையா லெங்கெங்கே யான்போய்
பிறப்ப னங்கங்குன்
தாட்டன் பதுமத் துணையிலன்பு தருவா யவலந்
தருநெறியில்
வேட்டு நடத்த லருளாமல் வேத நெறியில்
விருப்பருளாய். 12

483. தேவ தேவே யொருபாலிற் செம்மை யொருபாற்
கருமையதாய்
மேவு மேனிச் சங்கரனே வேருேர் வடிவாம்
விழிநுதலாய்
ஓவில் கருணை யாலயனே யுடல்கொண் டுலகிற்
பிறந்துழன்று
சாவ வருந்தீ வினைக்கஞ்சுந் தவத்தோர் ரச்சந்
தவிர்ப்பானே. 14

484. என்க ணிணைநின் றெழும்பார்வை யெந்த
ஞான்று மிராகவனும்
மன்கண் படர மற்றவர்பான் மருவா
தொழிய வரந்தருவாய்
உன்க ணடைந்த மார்க்கண்ட னுயிருண்
கூற்றை யுதைத்தவன்றன்
புன்கண் டீர்த்த வுனைச்சேரும் புனிதர்க்
கரிய பொருளுண்டோ. 15

485. அளியி னீடு நிதியமே யகில லோக நாதனே
யொளிகொ டேவ தேவனே யுன்பொருட்
டிறைஞ்சுகேன்
விளிவி லாத வன்புநின் மெய்ப்ப தத்தி னல்கியே
யெளிய னேனை யாளுமா றிரங்கி ராம நாதனே. 17

---

483–4 சீதை போற்றியவாறு.
484 சீதையின் கற்புத்திறம் நோக்குக.
485 அநுமன் பாவியவாறு.

486. ஆதியே யகில நாதா அம்பிகா பதியே திங்கட்
பாதிசேர் சடையி னானே பாய்விடைப்
பதாகை யானே
சோதியே யழிவி லானே துங்கவா னவனே வேத
நீதியே திரிந்த குற்றம் நித்தலும் பொறுப்பாய்
நீயே. 44

487. போகமும் வீடு மில்லாப் புனிதனே போற்றி போற்றி
யாகுமா றவையி ரண்டு மடியவர்க் களிப்பாய்
போற்றி
மோகமார் மாயை தன்னான் முகுந்தனை யயனைத்
தோன்றும்
ஏகனே போற்றி போற்றி யிராமநா யகனே போற்றி.
70

சேது பலச் சருக்கம்

488. ஆரணப் பரியினா னதி யோர்தமை
மார்கழித் திங்கள்வை கறையின் மாபெருஞ்
சீரியற் பூசைசெய் யாத தீமையு
நீரலைச் சேதுவி னீங்கு மாலரோ. 124

489. மதுவழிந் தொழுகிய மாலைக் கொன்றைசேர்
புதுமதிச் சடிலனைப் பொறிகொண் மார்பனைத்
துதிதரு கிற்றிலர் தொல்ப வங்களுங்
கதிதரு சேதுவிற் கழியு மாலரோ. 125

490. நாசமில் செழுஞ்சிவ நாபந் தன்னையு
மாசில் சாளக்கி ராமத்தை யும்மனத்
தாசைகூர் துவாரகா சக்க ரத்தையும்
பூசியார் பவமு மிச்சேதுப் போக்குமால். 126

---

486 குறுமுனி போற்றியவாறு.
487 வானவரனைவரும் போற்றியவாறு.

491. களிமிக வுளங்கொள் கங்கா மிருத்திகை
துளசிநன் மிருத்திகை தூய நன்னுத
லொளிபெறப் புனைகிலா ருடைய பாவமுந்
தெளிபுனற் சேதுவிற் றீரு மாலரோ. 127

492. கோவிசந் தனத்தினைக் கோடு நெற்றியில்
ஆவிசேர் நெஞ்சினி லம்பு யத்தினிற்
பாவ மோசனம் வரப்பரித் திடார்பவம்
ஓவிடுஞ் சேதுவி லுதக மூழ்கினால். 128

493. உருத்திர விழிமணி களத்து ரத்திடாக்
கருத்திர வினர்பவக் கணமும் புண்ணிய
சருத்திர முனிவரர் பெற்ற சத்தியத்
திருத்திர வியநிகர் சேது விற்கெடும். 129

494. கருக்கிள ருயிர்களைக் காத்த ளித்திடும்
உருக்கிளர்ந் தோங்கிய வும்பர் நாயகன்
மருக்கிளர் துழாய்மணி வணைந்தி டார்பவந்
திருக்கிளர் சேதுவிற் றீரு மாலரோ. 130

495. இரவிறு பிராமியத் தெழுந்து சுத்தனை
யரியர னுமமுந் துதியொ டன்னவர்க்
குரியமந் திரமுற்று முண்மை யாமனுத்
திரமொடெண் ணலர்பவஞ் சேது விற்கெடும். 131

---

491 மிருத்திகை—மண்.
492 மோசனம்=தீர்தல்.

திரிகூட ராசப்ப கவிராசர்
இயற்றிய

# திருக்குற்றாலத் தலபுராணம்

## வாழ்த்து

496. சீதமழை முகில்பொழிக தேசமெலாம் பயிர்விளைக
செல்வ மோங்க
மாதர்குழா மக்கள்குழா மனையறங்க
ளுடன்பொலிந்து மலிந்து வாழ்க
மேதகுசீர்ச் சைவநெறி வேதநெறி தழைத்தோங்க
மேலு மேலும்
பூதலமேற் சிவபெருமா னாலயங்கள் பூசனைகள்
பொலிக மாதோ. 21

## திருக்குற்றாலத் தலமகிமைச் சருக்கம்

497. கூரேறு மழுப்படையார் தலங்கண்மகி
தலத்தனந்த கோடி யேனுஞ்
சீரேறு மூர்த்திதலந் தீர்த்தமெனு மூவகையாற்
சிறந்த தானம்
ஈரேழு தலமாகு மெந்தையார்க் கதிகதல
மிவற்றி னுள்ளும்
ஓரேழு தலமதிக மிவையிலொரு தலமதிக
முணர்த்தக் கேண்மின். 1

498. வரமேவு திருவாரூர் காளத்தி யருணை தில்லை
மதுரை காஞ்சி
புரமாதி பலதலத்தும் போந்துறைத
லொவ்வொருவர் பொருட்டே யாகும்
பரமான தனிமுதல்வ னூழிதொறு முலகமெலாம்
படைத்துங் காத்துந்
திரமாக அரசிருக்கும் பரமரக சியத்தானந்
திருக்குற் றாலம்.

499. பூதல் விலாசந் தன்னிற் புதுமைசேர்
தலங்கள் யாவும்
பேதமாங் கற்பந் தோறும் பிரளயத்
தொடுங்கித் தோன்றும்
ஆதலு மழிவு மில்லா வநாதியே திருக்குற் றூலந்
காதலி னறிவு மிக்கீர் காரண முணர்த்தக் கேண்மின்.

500. பொருந்திரைக் கடல்களேழும் புடைபடு
தீவுந் தாவிப்
பெரும்புறக் கடலு ணேமிப் பிறங்கல்கால்
சாயப் பாய்ந்து
வருந்திரண் மேரு வாதி வரைகளுந்
திசையும் பாரும்
ஒருங்குற வொருக்கி மேல்கீ ழுலகெலாம்
புகுந்து தாக்கி, 4

501. பரந்தெழு புவனமெல்லாம் படர்ந்தபே
ருகாந்த வாரி
துரந்தெழு மண்ட மூலத் தங்கியின் சுடரான் மண்ட
உரங்கெழு சண்டவாயுக் கனலெலா மொடுங்கி வான
நிரந்தரித் துலோகா லோக நெடுவெளி
யாய காலம். 5

502. ஆருநீர் கனல்கா லண்ட மழிக்குநா ளழியா தாகிக்
கூருமால் வரையும் யாறுங் குறிக்கொண்டு
திசைக டோறும்

---

500 நேமிப் பிறங்கல்—சக்கரவான மலை.
காலசாய—தலைகுனிந்துவிழ.
ஒருக்கி—ஒடுக்கி.

501. அண்ட மூலத்து—பிரமாண்டத்தில்.
சண்ட வாயு—பிரசண்ட மாருதம்.

நேருறு குரோச மைந்தாய் நின்றது
திருக்குற் ருலம்
மேருவி லேந்திக் கங்கை மிலேந்தநம்
பரனே போல. 6

503. அப்பெரும் புவன மெல்லா. மழியுநா ளழியா தாகி
யிப்புரங் கிரியும் யாறு மிருந்தவா
றெவ்வா றென்னின்
முப்புர மொடுங்குங் காலே மூவர்வீ டென்ன மூன்று
மொப்புற நின்ற தென்று மொருவன
தருளான் மன்னே. 7

504. அரவணி சடையா னெங்கு மமர்கினு
மருந்தேன் கங்கை
கரைபொரு திரிகூ டத்துக் கலேயெலா
நிரம்பா நிற்பன்
விரவுபே ருலக மெல்லாம் வெயில்விரித்
தெழுந்த் தேனும்
இரவிதன் கிரணங் காந்தத் திசைதரு
பொலிவு போல. 8

505. தருமமே கருதித் தானந் தவம்பல
புரிந்தா ரேனுந்
திருவளர் திருக்குற் ருலச் சிவபிரான்
சன்னி தானந்
துருவினர் பணிவார்க் கன்றித் தொலேந்திட
லரிது பாவம்
பரிதிசன் னிதியி லன்றிப் பஞ்சினேச்
சுடுமோ காந்தம். 9

---

502. குரோசம்—கூப்பிடு தூரம்.
503. மூவர் வீடு—சுதன்மன், சுசிலன், சுபுத்தி என்னும் மூவருடைய இருப்பிடம். இம்மூவருந் திரிபுர மெரித்த நாட் பிழைத்தவர்.
505. காந்தம்—சூரியகாந்தக்கல்.

506. புந்தியுற நினைந்தார்க்கே யருணகிரி தரிசனைக்கே
புலியூர் பேறு
நந்துதவழ் திருவாரூர் பிறந்தார்க்கே யிறந்தார்க்கு
நல்குங் காசி
யெந்தையார் திருவருளாற் பிறந்தார்க்கு
மிறந்தார்க்கு மெதிர்கண் டார்க்குஞ்
சிந்தையுற நினைந்தார்க்கு மழியாத கதிகொடுக்குந்
திருக்குற் றாலம். 18

507. எத்தலத்தி லெவர்புரிந்த பாதகமு மித்தலத்தி
லெய்தத் தீருங்
கைத்தலத்தின் மழுவுடையார் குற்றாலந்
தனிற்புரிந்த கடிய பாவம்
அத்தலைநால் வகையிலறு மித்தலம்விட் டகன்றாரே
லவனி யாதி
முத்தலத்திற் சென்றாலு முடியாது முடியாது
முடியா தன்றே. 20

508. புவலோகத் திருப்பவர்கள் சுவலோகம்
விரும்புவர்மேற் போகம் வேட்டுச்
சுவலோகத் திருப்பவர்சத் தியலோகம்
விழைந்திருப்பர் தொலையா வேதன்
தவலோகத் திருப்பவர்கள் மாலுலகம் விரும்புவரித்
தனைக்கு மேலாஞ்
சிவலோகத் திருப்பவருந் திரிகூடத்
திருக்கும்வரஞ் சிந்திப் பாரே. 26

---

506. மற்ற நான்கு தலத்தினும் நினைத்துங் கண்டும் பிறந்தும் இறந்தும் பெறும் பயன் திருக்குற்றாலத்து நினைத்தும் கண்டும் பிறந்தும் இறந்தும் பெறலாமென்பது.

507. இதனை இத்தொகுதி 444-ஆம் பாட்டோடு ஒப்பிடுக.

508. சத்தியலோகம்—பிரமனுலகம்.

509. கயிலாயத் தினிலுறையுஞ் சீகண்ட பரமனுயர்
கயிலை நீங்கி
மயிலாய சாயன்மட மங்கைகுழல் வாய்மொழியை
மணந்து மேருச்
சயிலாதி பொதியில்வரைத் தலங்களழி யினுமழியாச்
சங்கக் கோயி
லெயிலாக விருப்பதனாற் பூலோக கயிலாய
மிதுவே யன்றோ. 27

510. குற்றால மென்றொருக்கா னினைப்பவர்க்குப்
பாவமொரு கோடி தீருங்
குற்றால மென்றொருக்கா லுரைப்பவர்க்குப்
புண்ணியங்கள் கோடி சேருங்
குற்றாலந் தனிலிருந்து செய்புமொரு தவமனந்த
கோடி யாகுங்
குற்றாலங் கண்டுதொழக் கூடினர்க்கே
பரமபதங் கூடு மாதோ. 34

511. ஆதுலர் சாலை சோலை யாவின்வா யுறைகண் ணுடி
யோதுவார்க் குணவு தண்ணீ ருறுபந்தர்
மடந்த டாகங்
கோதிலா வுரிஞ்சி சுண்ணங் கொலையுயிர்
விடுத்த லேறு
மாதலைக் கெண்ணெய் கண்ணோப் மருந்துநன்
மகப்பால் சோறு. 37

---

509. சீகண்டன் = விடத்தைக் கழுத்திலே தரித்தவன்.
சயில + ஆதி — சயிலாதி எனகின்றது வடநூன் முடிபு.
சங்கக் கோயில் — சங்க வடிவமாகச் செய்யப்பட்ட கோயில்.

511–12. இவற்றால் முப்பத்திரண்டு அறங்கள் இவை யென்பது அறியப்படும்.

512. அருசம யத்தோர்க் குன்டி யழிந்தோரை
நிறுத்த லட்டேண்
பிறரறங் காத்த லையம் பெண்போக
மகப்பே றுய்த்தல்
நறியதீன் விலங்கூண் வண்ணு ணுவிதன்
சிறைச்சோ ருதி
மறுதலத் தறமெண் ணுன்கு மனையறத்
திவ்வூர் நல்கும். 38

திருமால் சிவபிராஞனை சருக்கம்

513. விஞ்சையர்க்கு விஞ்சைபொழி மேகமே
யவுணவிருள் விடியக் கூவுஞ்
செஞ்சேவற் கொடியுயர்த்த சேவகனே தெய்வமடப்
பிடியோ டாடுங்
குஞ்சரமே வள்ளிபடர் குன்றமே சூரர்பெருங்
குலத்தை மாய்ப்ப
அஞ்சுமுக மமையாதென் ருறுமுக மாகவெழுந்
தருளி ஞனே. 106

514. செங்கைவே லுழவா போற்றி தேவர்தந்
தலைவா போற்றி
கங்கையாள் புதல்வா போற்றி கார்த்திகை
சிறுவா போற்றி
பங்கயத் தடஞ்சூழ் செம்பொற் பணிமதில்
இலஞ்சி மூதூர்க்
கொங்கலர் கடப்பமாலைக் குமரதே
சிகனே போற்றி. 107

---

513–5. அகத்திய முனிவர் இலஞ்சிவாழ் முருகக் கடவுளைப்போற்றியவாறு.

515. போற்றியென் றிறைஞ்சி ரோமம் பொடிப்பமெய்
துடிப்ப மேனி
மாற்றிலாப் புளகம் போர்ப்ப வாய்தழு
தழுப்பப் பாடல்
சாற்றிநின் றேத்து ஞானத் தமிழ்க்குறு
முனியை நோக்கி
யேற்றமாங் கருணை கூர்ந்தா னிலஞ்சிவாழ்
குமர மூர்த்தி. 108

உமாபதி சிவாசாரியார்

இயற்றிய

## கோயிற் புராணம்

### பாயிரம்

516. பூங்கமலத் தயனுமலர் புண்டரிகக் கண்ணனுந்
தாங்குபல புவனமுமேற் சகலமுமா யகலாத
வோங்குமொளி வெளியேநின் றுலகுதொழ்
நடமாடுந்
தேங்கமழும் பொழிற்றில்லைத் திருச்சிற்றம்
பலம்போற்றி. 1

517. மறந்தாலு மினியிங்கு வாரோமென் றகல்பவர்போற்
சிறந்தார நடமாடுந் திருவாளன் றிருவடிகண்
டிறந்தார்கள் பிறவாத விதிலென்ன பயன்வந்து
பிறந்தாலு மிறவாத பேரின்பம் பெறலாமால். 15

---

517. சிதம்பரத்தில் வந்து பிறப்பதாயின், பிறவியும் வேண்டற் பாற்று என்பது.

518. இங்கிவர் தம்பா லன்பா லிறைநடக் கருத்த ராய்முற்
றங்கிய வாறைஞ் ஞூறு தாபத ரணைய நீரிம்
மங்கல தினத்து வாழ வம்மினென் றுரைத்துத்
தாமும்
பங்கமி லதுக ணத்திற் பன்முறை யெண்ணி
யெண்ணி, 2

519. கறவையான் வரவு பார்க்குங் கற்றின மெனவுங்
கார்சே
ருறையுண வுணர்ந்து நோக்கி யோய்ந்தபுள் ளெனவு
மோங்கற்
செறிமுகின் முழவு கேட்குந் திகழ்மயிற் றிரளும்
போல
இறையவ னடமே சிந்தித் திடைத்தினங் கடத்தி
னூர்கள். 3

520. எண்ணருங் காதல் கூரு மிருவருங் காண ஞானக்
கண்ணிணை நல்க முன்னைக் காரிருள் கழிவுற் றின்ன
வண்ணமென் றறிய வாரா வளரொளி மன்றுண்
மாதோ
டண்ணனின் றாடு கின்ற ஆனந்த நிருத்தங்
கண்டார். 10

521. திருவடி நிலையும் வீசுஞ் செய்யகா லுஞ்சி லம்பும்
உருவள ரொளியும் வாய்ந்த ஊருவு முடுத்த
தோலும்
அரைதரு புரிவுங் கச்சி லணிகளு மழகா ருந்தி
மருவிய வுதரபந்தக் கோப்புநூல் வரய்ப்பு
மார்பும். 11

---

518. இங்கிவர்—வியாக்கிரபாதர் பதஞ்சலியார் என்னும் முனிவர்கள். ஆறைஞ்ஞூறு தாபதர்—மூவாயிர முனிவர்.

519. கற்றினம்—கன்றுகளின் கூட்டம். உறையுணவு—மழைத்துளி ஆகிய உணவு.

521. ஊரு—தொடை.

522. வீசிய செய்ய கையும் விடதரக் கரங்க வித்த
தேசும் வண் துடியு மங்கிச் செறிவுமுன் றிரண்ட
தோளுங்
காசைகொண் மிடறுந் தோடார் காதும்
வெண்குழையுங் காண
மாசிலா மணிவாய் விட்டு வழங்கிடா நகைம
யக்கும், 12

523. ஓங்கிய கமலச் செவ்வி யொளிமுக மலருங் கண்கள்
பூங்குழ லுமையை நோக்கும் புரணமும் புருவப்
பொற்பும்
பாங்கமர் நுதலும் பின்றாழ் படர்சடைப் பரப்பும்
பாம்பும்
நீங்கருந் தாரு நீரு நிலவுமே னிலவு நீறும், 13

524. கடிமல ரணைய வாரிக் காரிரு ளளகஞ் சேர்த்த
முடியுநன் னுதலும் பொட்டு முயங்கிரு புருவ
வில்லும்
வடிகொள்வேல் விழியுங் காதும் வளர்குமிழ் மலருந்
தொண்டைப்
படிவவா யிதழு முத்த நகையுமெய்ப் பசுமை
வாய்ப்பும், 14

525. பூங்கமு கமர்க மூத்திற் பொலிந்தமங் கலநாண்
பொற்பும்
பாங்கம ரமையார் தோளும் பங்கயச் செங்கை
தாங்கும்
ஓங்கு செங்கழுநீர்ச் செல்வி யொளிதரு மலருந்
தாருங்
கோங்கரும் பவைப ழித்த கொங்கையுங் குல்வு
பூணும், 15

---

522. விடதாம்—விடத்தைத் தரித்திருப்பது; பாம்பு.
காசை—காயா. கொள்—உவமவுருபு.
523. புரணம்—அசைவு. தார்—கொன்றை மாலை.
525. அமை ஆர்—மூங்கிலை யொத்த.

526. துடியம ரிடையும் பாந்தட் டொகுபணந் தகுநி
தம்ப
வுடையமர் துகிலு மல்க வொல்கிய நிலையுஞ் செய்ய
அடிமலர் மிசைய ணிந்த ஆடகப் பாட கக்கீழ்
விடுசுடர்ச் சிலம்பும் வாய்ந்த மெல்லியல்
வியந்து காண, 16

527. ஆடிய பெருமான் வெய்யோ னலர்கதி ராயி ரத்துக்
கூடிய மண்ட லம்போற் குறைவிலா வகைநி றைந்து
நாடரு ஞான மன்று ளுமய்ய அயன்மான் முன்பு
தேடரு மேனி கொண்டு திருநடஞ் செய்யக்
கண்டார். 17

528. பொருவில் புயங்கப் புனித னடங்கட் புலன்மேவத்
தெரிபொழு தங்கத் தொருசெய லின்றிச் சிரமேவக்
கரமலர் நுந்தப் புனல்விழி கம்பித் துரைகாணு
இருவரு மின்பக் கடலு ளலைந்தா ரென்செய்தார். 18

529. தற்பர மாகுந் தலைவனு துண்மைத் தன்மைப்பொற்
சிற்பர மாமம் பரவொளி யுந்தன் றிருமேனிப்
பொற்புட னுடும் பொலிவும் விழிக்குட் புணராதால்
அற்புத னேயிங் கார்கில மென்றென் றயர்கின்முர். 19

530. காரண னேமுன் காமனே வேவக் கண்வைத்த
பூரண னேநின் புகழ்நடம் யாரும் புணர்வெய்தப்
பாரிருண் மோகந் தீரருண் ஞானம் பணி
யென்றென்
முரண மோதுஞ் சாகைக ளோரா யிரமாக. 20

---

529. ஆர்கிலம்—கருத்து முற்றுப்பெறுகின்றிலேம்.
530. மோகந்தீர், ஞானம் பணி என்முறென்க.

531. கரணம னைத்தும் புலனிவை காணா கைவிட்டான்
மரணமெ மக்கிங் கிதுதமி யோம்வாழ் வருண்மாறில்
திரணமு மெய்ச்சஞ் சலமில தென்றா
லொன்றா நின்
புரணமெ னக்கொண் டருளுக வென்றார்
நின்றார்கள். 22

532. இவ்வகை யேநான் மறைமுத லேனோ ரிரவெய்தப்
பைவிர வாரப் பணியணி நாதன் பரிவாலிப்
பொய்விர வாமெய்ப் பொலிவினர் யாரும்புணர்
வெய்தத்
திவ்விய மாமம் பரபத ஞானந் தெரிவித்தான். 23

533. நாரணன் வேதா வாசவன் வானோர் நவைசேரா
ஆரண மேலோர் தாபதர் மூவா யிரவோர்நற்
சாரணர் தாவா நாரதர் பூதா திகளாசைக்
காரண ரேனோ ராடலை நேரே கண்டார்கள். 24

534. கண்டனர் கண்ணுக் கின்புற முன்னே கரமுச்சிக்
கொண்டன ருள்ளக் கொள்கைத தும்பக் குறியாரப்
பண்டரு வேதப் பாடலொ டாடிப் பரபோகத்
தண்டன தாமெய்க் கருணையி னூடுற்
றலைவுற்றார். 25

### திருவிழாச் சருக்கம்

535. மழைவ ழங்குக மன்னவ னோங்குக
பிழையில் பல்வள னெல்லாம் பிறங்குக
தழைக அஞ்செழுத் தோசை தரையெலாம்
பழைய வைதிக சைவம் பரக்கவே. 53

---

532. அம்பர பதம்—சிதம்பரத் தலத்திலே.

குலசேகர பாண்டியர்

இயற்றிய

# இலிங்க புராணம்

## கடவுள் வாழ்த்து

536. சீர்பூத்த முத்தொழிலுந் திறம்பாது நின்றியற்றும்
ஏர்பூத்த முத்தேவு மியாமேயென் றிசைப்பதுபோற்
போர்பூத்த முத்தலைவேல் பூங்கமலக் கரத்தேந்துங்
கார்பூத்த மிடற்றிறைவன் கழல்கழற்றுள்
வணங்குவாம். 3

## மாயனும் அயனுந் துதித்த அத்தியாயம்

537. கிடைத்தற் கரிய வரும்பொருளே கேடின் றுயர்ந்த
பரஞ்சுடரே
யுடைக்கும் பரவைக் கடல்விடமுண் டுலவா
தெம்மைப் புரந்தோனே
படைத்து மளித்து மெவ்வுலகும் பாழ்பட்
டொழியக் கடைநாளில்
துடைத்தும் விளையாட் டயர்கின்ற தோன்றா
லுன்னைப் போற்றுவமே. 3

538. கீற்று மதியந் தவழ்குடுமிக் கிளர்செம் பவள
மால்வரையே
ஆற்றுந் தவத்தின் றுறைபோய அன்பர் படியு
மருட்கடலே
யூற்றும் பசுந்தேன் கமழ்கொன்றை யுருவப்
பசுந்தார் நறுந்தாது
தூற்றுந் திரங்கக் கங்கைபுனை தோன்றா லுன்னைப்
போற்றுவமே. 4

---

537-9. மாயனும் அயனும் இன்னணஞ் சிவனைத் துதித்தார் என்று சூத முனிவர் மாதவர்க்குக் கூறுகின்றார்.

539. அரிய பழநான் மறைக்கொழுந்தா யமல மாகி யழிவின்றி
யெரியுங் கனலாய் வெண்மதியா யெறிக்குங் கதிர்செய் பருதியா
யுருவா யருவாய்ச் சின்மயமா யுள்ளும் புறம்பு முணர்வரிய
துரியா தீதமாய் நின்ற தோன்றா லுன்னைப் போற்றுவமே. 5

### நான்முகனும் மாயனுந் துதித்த அத்தியாயம்

540. நினைப்புமாய் மறப்பு மாகி நினைவினுக் கெட்டா தொன்றாய்
அனைத்துமாய் நின்றாய் போற்றி யருமறைக் கொழுந்தே போற்றி
கனைத்துவண் டிமிர விள்ளுங் கடுக்கையங் கண்ணி யோடு
புனிற்றுவெண் டிங்கட் கண்ணி புனைந்தசெஞ் சடையாய் போற்றி. 2

541. நள்ளிருட் பிழம்புமேவு நாகிளந் திங்க ளேக்கிப்
புள்ளிமான் பிள்ளை துள்ளும் புனைமலர்க் கரத்தாய் போற்றி
உள்ளொடு புறமா யெங்கு முறைந்தரு ளிறைவா போற்றி
வெள்ளியம் பொருப்பில் வாழும் விமலனே போற்றி போற்றி. 3

542. பொருப்புவிற் குழைய வாங்கிப் புரமெரி மடுத்தாய் போற்றி
மருக்கமழ் குமுதச் செவ்வாய் மலைமகள் கொழுந போற்றி

---

540-44. அயனும் அரியுந் துதித்தவாறு.

நெருப்புரு வெடுத்து முன்னம் நெடுவிசும் புருவி
நின்ற
அருட்பெருங் கடலே போற்றி யமலனே போற்றி
போற்றி. 4

543. கடையுக மதனிற் மூன்று மண்டங்கள் கழிய வுண்டு
சுடலையி னடித்தாய் போற்றி சுடரொளிப் பிழம்பே
போற்றி
விடவர வணிந்தாய் போற்றி மெய்புணர் வெய்தி
நின்ற
அடியவர்க் கருள்வாய் போற்றி யண்ணலே போற்றி
போற்றி. 5

544. கூற்றுயிர் குடித்த பைம்பொற் குரைகழற் ருளோய்
போற்றி
ஏற்றுயர் கொடியாய் போற்றி யீறிலா முதலே
போற்றி
ஆற்றருந் தலத்தின் மிக்கோ ரறிந்துணர் பொருளே
போற்றி
ஊற்றுதேங் கொன்றை வேணி யொருவனே போற்றி
போற்றி. 6

**சிவபூஜை பண்ணினவர் பேறுபெற்ற அத்தியாயம்**

545. மணிமிடற் றிறையைத் தூயநீ ராட்டி வயங்குபொற்
பீடத்தின் மீதிற்
பணிமொழி யுமையாள் தன்னொடும் வைத்துப்
பச்சிளந் தேன்மலர் தூவி
இணையிலாத் தூப தீபமு நல்கி யிணையடித் தாமரை
தொழுதோர்
புணையிலாப் பிறவிப் பெருங்கட னீந்திப் போகுவர்
கயிலைசென் றடைவார். 6

---

545. சூதமுனிவர் மற்ற முனிவர்க்கு உரைத்தவாறு.

மறை ஞானசம்பந்தர்

இயற்றிய

# சிவ தருமோத்தரம்

## பரம தருமாதி யியல்

546. ஆதரவே பரமான அறம தாகும்
ஆதிநடு அந்தமிவற் றனைத்து மாகும்
ஆதரவற் றவரீகை யறமே யாகா
தாதலினு லாதரவே மூல மாகும்
ஆதரவே பிரகிருதி யான்மா வீச
வெனும்பொருளு மறிவிக்கு மமலன் தானும்
ஆதரவே யடைவிக்கு மாத லாலே
யனைத்தினுக்கு மாதரவே மூல மாமே. 1

## சிவஞான தான வியல்

547 செய்தார் சிறக்கச் சிவபுரத்தைச் சிற்ப வுரையிற்
றிகழ்விதியால்
எய்தார் பிறப்பிற் சிவலோக மெய்திப் போகம்
இனிதருந்தி
வெய்தாம் வினையும் ஆணவமும் வீயா மாயை
யொடும்விடவே
மெய்யாம் பரம வித்தையுற விமலன் கமலம்
விரவுவரே. 73

548. சிவனற் புரியைச் சென்றடைவர் சிந்தை மகிழச்
சிவபுரிசெய்
தவதி முதலோர் தருமுதலுஞ் சாரும் பூணி
யொடுமெற்றும்
புவலோ கத்தின் மிசைப்புகுவர் பொருள்கொண்
டேவல் புரிந்தாருங்
கவரா வொருமைக் கருத்துறினே கணிகை யவருங்
களிப்புறவே. 74

---

546. ஆதரவு—சிரத்தை

548. தரு முதலும்—மாம் முதலானவை.
சாரும் பூணி—பொருந்தப் பெறும் எருது.

549. சிறந்து செறிவர் சிவபுரத்தைத் தெரிதற்
கரிய சிவனகருட்
பிறந்தார் பிறழா நிலைமையினைப் பிரியா
தொருமைப் பெருமையுடன்
உறைந்தா ருறையு மவர்க்களமும் உதவு
வார்க ளுறையுள்ளும்
இறந்தா ரிறக்க வெண்ணுநர்க ளென்னு
மிவர்க ளெல்லோரும். 75

550. பணிவார் பரவிப் பரமேசன் பதிக டம்மைப்
பணிதற்கே
துணிவார் வழியிற் றுணைச்செல்வார் தொடர்ந்து
கூடித் தொழுவாரென்று
எணியா ரிவர்க ளெல்லோரு மிறைதன் புரத்தி
லிருப்பதற்கே
அணியா ரவல வினையனைத்தும் அறுப்பார் சமனைக்
கறுப்பாரே, 76

551. சிவனைப் பூசை செய்விப்பார் சிவனற் புரியைச்
சென்றடைவர்
அவனைப் பருவத் தறிவிக்கு மாசா ரியனை
யன்பரையுந்
தவரைத் தமிக்கும் பிணிதனையுந் தணிப்பார் தாமும்,
தனித்தேமே
எவரிப் பிணியைத் தணிப்பாரென் றிளைப்பா
ரிளைப்புக் கிளைப்பாரும். 77

---

549. அன்னமும் என்பது இடைக்குறைந்து நின்றது.
550. எணியார்—எண்ணப்பட்டவர்.
சமன்—நடுநிலையாளன்; கூற்றுவன். கறுப்பார்—கோபிப்பவர்.
551. செய்விப்பார் சென்றடைவர், தணிப்பார்தாமும் இளைப்புக்கு இளைப்பாரும் சென்றடைவர் என்க.

552. ஆக்கை யாலோ தனத்தாலும் மறுநோ யுதனை
யருந்தவர்க்குப்
போக்கு விப்பா ரவர்தாமும் பொருந்திப் போகஞ்
சிவபுரியுள்
நீக்கிப் பிறந்து நிலமிசையே நில்லா துடல
மென நினைந்து
நோக்கற் கரிய பரமசிவ னேன்று ளடைவர்
நோயறவே. 78

ஐவகை யாகவியல்*

553. ஆசை முதலா மாசனைத்தும் அறுத்தே யுடலும்
வெறுத்தரிய
தேசன் சிவன்பொற் பாதமலர் செறிந்தார் பிறப்பை
மறந்தார்கள்
பேசற் கரிய பெருமையினைப் பெற்றாரல்லர்
கற்றாலும்
மாசு மலிந்த ஆசையினால் மயங்கித் தியங்கும்
மானிடரே. 16

பலவிசிட்டகாரணவியல்

554. அலைபுன லதனு ளாழ்ந்த சிலைமரப் புணையா னன்றிச்
சிலையினாற் றீரந் தன்னைச் சேர்வதூஉ மில்லைத்
தேரிற்
றொலைவிலாப் பாவப் பௌவச் சுழியிடைச்
சுழல்வார் தம்மை
நிலைமையா ரன்றித் தீயார் நீக்கிவான் கரையி
னீட்டார். 7

---

*ஐவகை யாகங்களாவன கருமம், தவம், செபம், தியானம், ஞான மென்பன.

553. ஆசை முதலா மாசுகளை யறுத்தார் பெறும் பேறும் அறாதார் அடையும் கேடுஞ் சொல்லப்படுகின்றன.

554. சிலை—கல்வினை. தீரம்—கரை.
நல்லொழுக்கமுடைய ஞானிகளேயன்றித் தீயோர் பிறவிக்கடலினின்று முத்திக் கரைக்கு ஏற முடியாதென்பது.

555. தம்மனை யடைந்த யோகர் தமதடி பணிந்து தாமும்
எம்மையே யாளு மீசன் இவரென இட்ட பிச்சை
வெம்மைய நரகந் தன்னில் வீழ்ந்ததங் குலத்தை
மீட்டு
மெய்ம்மையே சிவலோ கத்து ளிருத்திடும்
வியப்பென் வேறே. 12

556. ஆதலான் முனிவர் தம்மை யவமதி செய்யா தஞ்சிப்
பூதலத் தோர்கள் பூவாற் புனலினாற் பரிவு
பொங்கப்
பாதபூ சனையும் பண்ணிப் பணிந்தவர் பணியுஞ்
செய்து
நாதனே யிவர்க ளென்று நாடுக வுளத்தெந்
நாளும். 31

557. செறிந்துதா வென்று நின்ற மிடியனைச் சிறியனாக்கி
யுறைந்துளான் பெரிய னெங்ங னென்றுளத் தூகஞ்
செய்வான்
சிறந்ததா தாவே யல்லன் செட்டிவன் செய்கை
யெல்லாம்
இறந்திடுந் தருமம் ஏற்கும் மிடியரு மின்றே
லெங்கும். 43.

---

555. சிவயோகியருக்கு இடும் பிச்சையின் பயன் கூறப்படுகிறது.

556. ஆதலால்—சிவஞானிகட்குக் குற்றஞ் செய்வோர் நரகத்துன்பம் அடைவர் ஆதலால்.
அவர் பணியுஞ் செய்து—அவருக்குத் தொண்டு செய்து.

557. வந்திரக்கும் மிடியனை யிகழ்ந்து செல்வமுளான் உள்ள இடம் நாடி அவனுக்குக் கொடுக்க நினைப்பவன் ஈவோனல்லன், வாணிகன் என்க. மிடியர் இலரேல் தருமம் இறந்திடும் எனக் கூட்டுக.

558. பொருளரி தாகிற் கேட்பார்க் கின்சொலு மரிதோ
போந்தால்
விரைவுட னெழுகை யோடல் வியந்தெதிர் கொள்கை
பீடத்
துரிமையி னிருத்தல் பாத பூசனை யுவப்புச்
செய்கை
பிரிபொழு துடனே செல்கை யெனுமிவை யேழும்
பேறே. 44

559. இரக்கமா தரவு கூர ஈபவன் கையி லேற்றான்
இருப்பனே யீந்தா னோடு ஈசன துலக மெய்தி
யிரக்கமா தரவி லான்கை யேற்றவ னீந்தா னோடும்
இருப்பனே நிரயந் தன்னு ளெண்ணிமுன் வினையை
யெய்த்தே. 45

### சிவ தரும வியல்

560. தரையினை யிலக்க தாக வெறிந்தகல் தவறு தற்றே
அரனையுங் குறித்துச் செய்த வினைபழு தாகா தற்றே
பரமனுஞ் செய்தார் செய்திப் பலத்தினைக்
கொடுப்பன் பாங்காற்
குருலகு வென்னும் பேதம் வினைதொறுங் குறித்துக்
கொண்டே. 30

---

558. தன்பாற் பெரியார் வந்தகாலை, பொருளில்லையாயினும், இன்ன செய்க என்று கூறுகிறது.

559. எய்த்து—அறிந்து.

560. குருலகு—அதிகம், குறைவு. பலத்தினைக் குறித்துக்கொண்டு பாங்காற் கொடுப்பன் என்க.

561. கொன்ருன் மறையோன் றனைமதுவைக் குடித்த
மறையோன் சோரத்தாற்
சென்றே பிறர்செம் பொனைக்கொண்டான்
றிளைத்தான் குரவன் றேவிதனை
நின்ரு னிவரோ டெனவைவர் மாடா தகரே
நிரயத்துட்
சென்ருர் விரையச் செல்லலுற மீளு நாளுஞ்
சிலவலவே. 24

562. பிணக்கந் தன்னையும் பெற்றவர் தம்மிடைக்
கணக்கி லாரையுங் கள்வர்க டம்மையும்
வணக்கு வான்மன்னன் ; மற்றையர் தங்களை
யிணக்கு வாவர கத்து ளியமனே. 100

563. ஆதலாற் செய்த தீங்கை யறுத்திட
வேத மாதி விதியும் விளங்கிய
போத கன்பதம் போற்ற அவன்செயும்
வாதி யாத பிரத்திய வாயமே. 101

---

561. சோரத்தாற் பொன்னைக் கொண்டான், தேவிதனைத் திளைத்தான், இவரோடு நின்ருன் என— என்றியைக்க. நிரயத்துட் செல்லலுற விரையச் செல்வார் என்பதுறுதி எனக.

562. கணக்கிலார்—அழிவழக்குடையோர்.

563. பிரத்தியவாயம்—குற்றம். ஆசிரியன் அடிகளைப் போற்ற, அவன் குற்றங்கள் வருத்தாமைக்குரியனவற்றைச் செய்வான் எனக.

564. கன்றிய காலனைக் காய்ந்தவனே கரிசினைப்
போக்கிருக் காய்ந்தவனே
வென்றிவில் வேடனை வீட்டினனே விரும்படி
யார்க்கருள் வீட்டினனே
யன்றிரு வர்க்கரி தாயவனே யண்டமு மாக்கிய
தாயவனே
பொன்றிய வெங்கணும் உற்றவனே யுணர்ந்தன
னுன்னையும் முற்றவனே. 104

565. இடுபலி கொண்டுணி யென்பவனே யிருவினை
தீர்த்திடும் என்பவனே
நடநவி லுந்தொழி னல்லவனே நாசமு மாமய
னல்லவனே
மடலவிழ் கொன்றைய மாலையனே வந்தனை
யாஞ்செயு மாலையனே
படிதனிற் காசிப் பதியவனே பல்லுயிர்க் கெல்லாம்
பதியவனே. 105

---

564–5 இவை சிவ தோத்திரம்.

564. கரிசினைப் போக்கு இருக்கு (வேதம்) ஆய்ந்தவனே என்க. காமனை அழித்தவனே, அடியார்க்கு அருளும் வீட்டினை யுடையோனே என்க. அரிதாயவனே, தாயே என்க.

565. இடுபலி கொண்டு உண்கின்றவன் என்று கூறப்படுவோனே, என் இருவினையைத் தீர்த்திடும் இறைவனே என்க.
நாசமும் ஆம் அயன் அல்லவனே—கேடும் தோற்றமும் உடைய பிரமனல்லாதோய்.
வந்தனை யாங்கள் செய்யும் ஆலயனே என்க.
பதியவன்—ஊரன்.; தலைவன்.

அதிவீரராம பாண்டியர்

இயற்றிய

## காசி காண்டம்

### அமுதேசன் முதலிய இலிங்கத்தின் சிறப்புரைத்த அத்தியாயம்

566. கதிர்விட் டெறிக்குங் குழவிமதிக் கண்ணி வேய்ந்த
அமுதேசன்
முதல இலிங்க மெவற்றினையு மொழிது.
மென்ன முனிகேட்ப
அதிர்தெண் டிரையிற் கவிழ்தலைய
சூர்மாத் தொலைய அலங்குவரை
பிதிர வடிவேல் பணித்தவருட் பெருமான்
இனிது கூறுவனால். 1

567. முன்னைப் பவத்திற் சனுருவெனு முனிவ
னொருவ னுளனவன்முன்
பன்னற் கேள்வி மறைப்பொருளின்
றுறைபோய் நெறியிற் படர்கின்றோன்
பொன்னிற் பிதிர்ந்த சுணங்கணிவெந்
நகிலாள் பங்கன் பூங்கழல்கள்
சென்னி தாங்கி யில்லறத்திற் றிறம்பா
தினிது சென்னாளில். 2

568. ஓது மறைதேர் முனிவரனுக் குவசம்
பனியென் றுரைக்குமொரு
காதற் புதல்வ னுளனவன்வெங் களிறு
வழங்கு பெருங்கானிற்
போத லோடும் பஃறலைய பொறிவா
ளரவொன் றெயிறூன்றச்
சாதல் நோக்கி யவனையுடன் சென்றோர்
மனையிற் கொடுசார்ந்தார். 3

569. விடங்கொப் புளிக்குந் துளையெயிற்ற
வெவ்வா யரவின் வாய்ப்பட்டுக்
கிடந்த புதல்வன் றனைக்கொடுபோய்க்
கிளைத்துக் கலித்த கொடிக்கரும்பு
படர்ந்து நிலவுக் கதிரெறிக்கும் பருமுத்
துயிர்க்கும் வயற்காசி
யடைந்து சொர்க்கத் துவாரத்தி லன்னோன்
றந்தை யிட்டனனல். 4

570. வெவ்வா யரவின் கொடும்பிறைப்பற் சுவட்டிற்
குதட்ட வீந்தோனை
யெவ்வா றழலிற் பெய்வதெனத் தந்தை
யுளத்தி னெண்ணுதலும்
அவ்வாய் வில்வத் துருவொடுமோ ரிலிங்கந்
தோன்று தமர்ந்ததனல்
செவ்வாய்ப் புதல்வன் றுயிலுணர்ந்தா்ன்
போன்றுங் கெழுந்துயர் தீர்ந்தான். 5

571. என்னே தீவாய்க் கொடுந்தறுகட் பாந்தள்
தீண்ட ஈங்கிறந்தோன்
கொன்னே பிழைத்த தெவ்வாறென்
றெண்ணி யாங்குக் குறுகுதலுந்
தன்னு ருயிரிற் பிரியாவோ ரெறும்பு
இனிய அதுதாங்கி
முன்னோர் சிறுகட் பெண்ணெறும்பு வருத
னோக்கி முனிநின்றான். 6

572. ஆவி நீத்த கிண்கிணிக்காற் புதல்வன்
பிழைத்த அந்நிலையின்
மேவ லோடு முயிர்வாளா வீந்த
வெறும்பு முய்ந்ததனாற்
சாவப் பெற்றோ ருய்வதிதன் றன்மை
யெனவாங் கோர்பிடிமண்
ஓவில் தவத்து முனியெடுப்ப இலிங்கந்
தோன்றி ஓங்கியதே. 7

573. உலகு விளக்குங் கதிர்ப்பரிதி கோடி
யெழுந்தா லெனவோங்கி
யிலகு மிலிங்கந் தனைவழிபட் டேத்தி
யிதன்பே ரெஞ்ஞான்றும்
நிலவு மமுதேச் சுரமென்ன நிகழ்த்திச்
சனுரு முனியென்பான்
அலகி லுவகை மீதூரப் புதல்வற்
கொடுதன் பதியடைந்தான். 8

574. அன்று முதலா அவ்விலிங்கம் அமுதேச்
சுரப்பே ராகியது
துன்று கொடிய கலியுகத்திற் றேன்று
துறையு மஃதன்றி
மன்ற வுலக முழுதேத்த வயங்கு முத்தித்
துவாரத்தில்
என்று மோங்கு மெழிற்கருணைச் சுரப்பே
ரிலிங்க மொன்றுளதால். 9

575. கரிய மிடற்றுச் செம்மேனிக் கருணைச்
சுரணை மதிவாரத்
தருளாற் கடிநாண் மலரிலைகொண் டருச்சித்
தொருபோ துணவாயோர்
பருவம் விரத மாற்றுமவர் விழைவந்த
பெறுவார் பன்மலர் தூய்த்
தெருளால் முத்தித் துவாரேசற் றொழுவோர்
முத்தி சேர்ந்திடுவார். 10

576. பொருவில் சொர்க்கந் துவாரேசற் றொழுவோர்
துறக்கம் பொருந்திடுவர்
கருடப் பசும்புட் கரும்பாகன் நேமி வாவிக்
கரையினிருந்
தருளிற் புரிந்த தவநோக்கி யடைந்த
சோதி ரூபேசற்
பரவித் தொழுவோ ரெஞ்ஞான்றுஞ் சோதி
யுருவிற் பரிந்துறைவார். 11

577. அறைந்த இலிங்கம் பதினன்கிற் றக்கேச்
சுரனே முதலாக
உறைந்த விலிங்க மோரெட்டு மோங்கா
ரேசன் முதலாகச்
சிறந்த இலிங்கம் பதினன்குஞ் செயிரில்
சயிலேச் சுரன்முதலாய்
நிறைந்த விலிங்கம் பதினன்கும் நிகரில்
இலிங்க மெனவுரைப்பார். 12

578. அருள்கூ ரிலிங்க மாகியவிம் முப்பத்
தாறு மத்துணையாய்
மருவ வருதத் துவவுருவாம் வரத னுறையு
மிவையாவுந்
தெரிய வரிய மறைப்பொருளா யுறைந்து
முத்திச் செலநல்கும்
உரிமை யத்தனல் முத்திநக ரெனும்பேர்
காசிக் குளதாகும். 13

579. மிடறு திறந்த பசுங்கமுகின் வெள்ளிப்
பாளை மடல்கிழிய
விட்டு கயவாய் நெடுவாளை யெழுந்து
தடவுச் சினைப்பலவின்
குடமுட் கனிப்பொற் சுளைகிழிப்பக் கொழித்த
பசுந்தேன் குமிழியெழுந்
தடமுற் றியகா சியைபலது முத்தி
நகரந் தானுளதோ. 14

580. முன்ன வரிய அமுதேசன் காதை
மொழிந்தோர் கேட்டோர்கள்
மன்னு ஞானஞ் சிவபூசை தானந்
தவமந் திரம்யோகம்
இன்ன யாவுந் தருபலன்கள் எளிதின்
எய்தி மறைநான்கும்
பன்ன அரிதாய்ச் சிறந்தோங்கும்
பரம னடியிற் சேர்குவரால். 15

அதிவீரராமபாண்டியர்

இயற்றிய

# கூர்ம புராணம்

## அயனுக்கும் அரிக்குஞ் சிவன்றோன்றி வரமளித்த அத்தியாயம்

581. காலமுங் காலத் தள்வையுங் கடந்து கருத்தளந்
தறிவரும் பொருளாய்
மூலமா மீசன் மலரய னுதலி னுதித்திடும்
புதுமையென், முகுந்தன்
கோலமா ருந்தி மலரயற் பயந்த கொள்கையென்
சொல்கெனப் பசும்பொற்
சோலைவா யுறையுங் கடவுள்யாழ் முனிவன்
கேட்டலும் மாயவன் சொல்வான். 1

582. உலகமோர் மூன்றும் இடிந்து பாழாகு மூழியி
னிறுதியி னேங்கும்
மலைபுரண் டென்ன எறிதிரை புரண்டு
மறிதரும் வாரியி னுப்பண்
அலர்கதிர்ப் பரிதி யாயிர மெழுந்தாங் கவிர்மணிச்
சூட்டரா அணையிற்
கொலைபழுத் தொழுகு நேமியந் தடக்கைக்
கொண்டல்கண் டுயின்றதை யன்றே. 2

583. பாசடைத் துளவந் துயல்வரு தடந்தோட்
பண்ணவ னுந்தியந் தடத்தின்
ஓசனை யொருநூ றகன்றுநீண் டோங்கி
யொள்ளித ழாயிரம் விரித்துத்
தேசுறு கதிரோ ராயிர மெறிக்குஞ் சேட்டிளம்
பரிதியிற் பொலிந்து
மூசுவண் டரற்ற முருகுகொப் புளிக்கு முள்ளரை
முளரிபூத் ததுவே. 3

---

581. கடவுள் யாழ் முனிவன்—இந்திரனும் நாரதனும்.
583. சேடு—திரட்சி; அழகு. முள்ளரை—முள்ளினையுடைய அரை. முளரி—தாமரை.

584. தாமரை யுந்தித் தடத்தினிற் பூப்பத் தாமரைக்
கண்டுயில் வோனை
நாமகள் கொழுந னண்ணுமண் ணளந்த
நளிளமென் கரத்தினுற் றடவித்
தோமறும் யோகத் தருந்துயி லெழுப்பித்
துளவினேன் மாயையின் மருளா
ஏமமுற் றலைவாய்த் துயின்றநீ யாரை யெனநகைத்
திறையவன் புகல்வான். 4

585. உலகனைத் தினையு மள்ளியுண் டகட்டி னுருபுடை
கிடத்துநா ரணனியான்
கலைவலா யாரை நீயென அறியான் போலெதிர்
வினவலுங் கடவுண்
மலரய னுலக மனைத்தையு மீன்ற தந்தையா
னெனமறை வடித்தோய்
அலகினின் சீர்த்தி யறிவனென் னகட்டுட்
புகுந்துல கனைத்துநோக் குதியால். 5

586. என்னலும் வயிற்றுட் புகுந்தெழு கடலு
மேழ்பெருந் தீவுமே முலகும்
மன்னிய புவன மனைத்தையு நோக்கி மனத்திறும்
பூதுறுங் காலைத்
துன்னிய வாயி லொன்பது மாயோன் சுருக்கலும்
வரும்வழி யுணரான்
பொன்னிதழ்க் கமல நாளமென் றுளையிற்
போந்துயர் பொகுட்டிவர்ந் தனனால். 6

---

584. மண்ணளந்த கரம்—உலகினை அளவாகப் படைத்த கை. யாரை என்றதில் ஐ சாரியை.

586. நாளம்—தண்டு. பொகுட்டு—தாமரைக்கொட்டை,

587. போதரு நெறிகள் யாவையுஞ் சுருக்கி யென்னை நின்
னகட்டினுட் பொதியா
வேதமில் வென்றி கொண்டிட நினைந்த
தியாதுகொல் லுலகனைத் தினுக்குந்
தாதையா னென்னை நிகர்வருங் கடவு ளெவர்கொனீ
சாற்றுதி யெனலும்
மாதவன் முறுவல் கோட்டியோர் விளையாட்
டயர்ந்தனன் மனக்கொளே லென்னு, 7

588. உலகனைத் தினையு மெளிதினி னுயிர்த்தா யுன்னையார்
நிகர்வருங் கடவுள்
மலர்செழுங் கமலத் துதித்தலாற் கமல
னெனும்பெயர் மருவியென் மகவாய்
நிலைபெறல் வேண்டு மெனமல ரயனு மகிழ்வுட
னுங்கவை நேரா
அலகில்சீர்க் கடவுள் நாமிரு வருமே யன்றிவே
றிலையென அறைந்தான்.

589. பித்தர்போன் மனத்திற் பிறந்தவை வாளா பிதற்றுவ
தென்கொனுன் முகத்த
மத்தமு மறுகும் வளர்பிறைக் கொழுந்தும்
பவளவார் சடைமிசை வனைந்த
முத்தவெண் முறுவற் கனிபடு துவர்வாய்
முகிழ்நகி லொருமருங் கமைத்தே
தத்துவங் கடந்த முக்கணெம் பெருமான் றனையுண
ராதுநீ யென்றான். 9

590. எனவுளங் கனன்று நான்முகக் கடவு ளிளங்களி
வண்டுபாட் டயரும்
வனைதுழா யலங்கற் கடவுளாம் நீயும் மலர்ப்பொகுட்
டுறைதரும் யானும்

---

589. மத்தமும்—ஊமத்தையும்.

நினைவருந் தேவ ரெவரினு மேலாய் நிற்பவர்
நம்மில்யா ருயர்ந்தோர்
கனைகடல் வயிறு குழியமத் தெறிந்து கடைந்தமு
தெடுத்தகார் முகிலே. 10

591. என்றலு முகுந்த னிளநகை கோட்டி நள்ளிருள்
ஒளியுற இருண்டு
துன்றிய மாயைப் படாம்புதைத் திடலுந்
துரியமாய்த் துரியமுங் கடந்து
நின்றபே ரொளியாந் திங்களங் கண்ணி நிமலனை
யறிந்திலை போலும்
மன்றயா னறிவ னென்றுதற் பரனை மனத்திடை
யிருத்துமேல் வையினில், 11

592. சேட்டிளம் பருதி முதலிய கோளும் உடுக்களுந்
தொடுத்தவீர்ந் தொடையல்
தோட்டுணை மீது துயல்வரத் திங்கட் கண்ணிசூழ்
செஞ்சடை மோலி
யோட்டற நிவந்த அண்டபித் திகையி
னுரிஞ்சவேழ் பார்தலம் உருவுந்
தாட்டுணை பெயர்த்து மறைகளு மறியாத்
தனிப்பொருள் தோன்றிய தன்றே. 12

593. பொற்றரு விழுது விட்டெனக் கிடந்த புரிசடை
வெண்ணில வெறிப்ப
நெற்றியங் கண்ணிற் றழற்சுட ரெறிப்ப நீற்றொளி
மெய்ம்முழு தெறிப்ப
ஒற்றைவெண் சங்கக் குழையழ கெறிப்ப உருகெழு
சூலவேல் திரித்து
முற்றுநீர்க் கடலிற் றமியனுய்ப் போதும்
முதல்வன்யா ரெனவய னுரைத்தான். 13

---

592. சேட்டிளம் பருதி—இது தருண பானு என்று சொல்லப்படுங் கோள். ஓட்டு அற—ஒடுதற்கிடமின்றி.
593 திரித்து—சுழற்றிக்கொண்டு.

594. உரைத்தலு முயர்வான் மழகதி ரென்ன வொளிமணி
கிடந்தநீண் மார்பன்
நிரைத்தலைத் தலைய பாம்பணை துறந்து நீற்றெளி
யிள நில வெறிக்கும்
வரைத்தடந் திணிதோண் மழுவலான் செய்ய
மலரடி தொழுதெழுந் தேத்தி
விரைச்செழுங் கமலப் பொகுட்டர சிருக்கும்
வேதியற் கிங்கிவை புகல்வான் : 14

595. உலகமற் றெவையும் படைத்தவை யளித்தும்
ஒடுக்கியுங் கடையுகந் தோறும்
அலகிலா விளையாட் டயர்பவ னியாவன், யாவனிற்
பயந்தவன், யாவன்
நிலைபெற வகுத்த சத்தியா னவனே நீறுபூத்
தொளிர்தழற் பிழம்பின்
மலைவறத் தோன்றுஞ் சங்கர னிவன்றாள்
வணங்கெனப் பேருணர் வளித்தான். 15

596. மருங்கிற வாக முழுவதுங் கவர்ந்த வருநகிற்
கலைமகண் மணாளன்
ஒருங்கறி வெய்தி நரைவிடைப் பாக னெண்மலர்ச்
சேவடி நோக்கி
விரும்பியுண் ணெகிழ விழிபுனல் வார் மெய்ம்மயிர்
சிலிர்ப்பநாக் குழறத்
திருந்துநான் மறைகள் பாடிநின் றுடித் தேமலர்
தூய்வணங் கினனால். 16

597. வணங்கிய கடவுட் கமலநான் முகத்தோன்
வாண்முகம் நோக்கிவா ளெயிற்ற
அணங்கர வசைத்தோ னெமதுகுற் றேவல்
அடியரிற் சிறந்தனை யுளத்தின்

---

595. யாவன் நிற் பயந்தவன் எனப் பிரிக்க.
596 மருங்குல் இறும்படி மார்பு முழுதுங் கவர்ந்த கொண்ட.
597 அணங்கு அரவு அசைத்தோன்—அச்சம் விளைக்கும் அரவினைக் கச்சையாக உடுத்தோனாகிய சிவன். பருவரல்—துன்பம்; ஈண்டுச் செருக்கென்னும் பகைத் துன்பத்தை யுணர்த்திற்று.

இணங்குநல் வரம்நீ கேட்டியென் றுரைப்ப
இருகையிற் பவளவாய் புதைத்துப்
பணிந்தென துளத்திற் பருவர லொழியப்
பாலஞய் வருதியென் றிரந்தான். 17

598. ஆங்கது நேர்ந்தெவ் வுலகமும் படைக்குந்
தொழிலுமற் றவற்கினி தருளித்
தேங்கமழ் கண்ணிப் பசுந்துழா யலங்கற் றிருமறு
மார்பனை நோக்கி
வீங்குநின் னுளத்தி னன்பினுக் குவந்தேம்
வேட்டன கேளென நினது
பூங்கழ லிணையி னன்புநா ளுளும் பொலிந்திட
வேண்டுமென் றிரந்தான். 18

599. அளப்பருஞ் சகமாங் காரியம் நீயான் காரண
மவிர்மதி நீயான்
றுளக்கறு பரிதி கங்குனீ பகல்யான் சொல்பிர
கிருதிநீ யானே
விளக்குறு புருட னறிவுநீ யானே யறிபவன்
மாயைநீ விளங்க
உளக்கணிற் றோன்று மீசன்யா னென்ன
உணர்ந்தவர் யாவையு முணர்ந்தார். 19

600. என்னநன் கியம்பி யரவநாண் கொளுவி
யிருவிசும் புயர்நெடுங் குடுமிப்
பொன்வரை குழைத்துப் புரமொரு மூன்றும்
புகையெழக் குறுநகை கோட்டி
மின்னவிர் சூல முரட்படை யேந்தும் வேதியன்
விழியிணை முகிழ்த்துத்
தன்னிலை யுணருந் தக்கவ ருள்ளத் தாமரைத்
தடந்தொறுஞ் சார்ந்தான். 20

---

600. அரவம்—வாசுகி.

வரதுங்கராம பாண்டியர்

இயற்றிய

# பிரமோத்தர காண்டம்

### விநாயகர் துதி

601. நல்ல சொற்பொருள் நாளும் நடாத்தவும்
எல்லை காணரும் பேரின்பம் எய்தவும்
வெல்லு மானை முகத்தினை மேவிவாழ்
வல்ல பைக்குரி யானை வழுத்துவாம். 1

### பஞ்சாட்சர மகிமையுரைத்த அத்தியாயம்

602. முக்க ணாயகன் அமரருண் முதல்வனும் அதுபோல்
தக்க மந்திர மெவற்றினுந் தலைமையைந் தெழுத்தே
தொக்க நான்மறைப் பிரணவ மாதியாத் தொடங்கி
ஒக்க ஓதியே பரகதி அளப்பில ருற்றார். 9

603. கருப்ப யோனியிற் சுழிப்படு பவக்கடல் கடப்பப்
பொருப்பி னெம்பிரா னுயிர்க்கெலாம் புணையெனப் புகன்ற
விருப்ப ஞானவஞ் செழுத்தினை யுளத்திடை வித்தில்
தருப்பை சுட்டிடும் வேள்வியேன் தானமேன் தவமேன். 12

604. முத்தி நன்னெறிக் கொருதுணை, மோகவா ரிதிக்கு
வைத்த செஞ்சிகை வடவனல், வினைவ னத்திற்குப்
பொத்தி னுங்குவெங் கதழெரி, புனைமதிக் கண்ணி
அத்த னெந்தையஞ் செழுத்திது கடைப்பிடித் தறிவீர். 14

---

602–5. ஐந்தெழுத்தின் பெருமையைப்பற்றிச் சூதமுனிவர் மற்ற முனிவர்க்கு உரைக்கின்றார்.

603. கடப்ப—கடக்கும் பொருட்டு. அஞ்செழுத்தாகிய வித்தை மனமாகிய நிலத்தில் விதைத்தால் வீடுபேறாகிய பயன் விளையுமென்க

605. ஊன நீக்கிய சிவமுன்னர் நமவினை யுரைக்கின்
ஞான மெய்திடும் அனைவர்க்கும் நம்பனார் நயக்குந்,
தான மெய்திநற் குரவராற் பெற்றவர் தங்கட்
கான சித்தியு முத்தியும் அக்கணத் தாமால். 15

### வஞ்சுளை முத்திபெற்ற அத்தியாயம் *

606. சைவநெறி பூண்ட தவக் கொடியுமக் கதையின்
மெய்யுணர்வின் சிந்தையவர் நாடோறு மீதூர
மையமருங் கண்டன் றிருத்தாள் வழிபடலால்
ஐவரையும் ஐயிடத் தேகா தடக்கினாள். 71

607. பத்திநெறி நின்று பல்விழைவு தான்றவிர்ந்து
முத்திமுனி வ்ரர்போன் முப்போதும் நீர்மூழ்கிச்
சுத்தமர வுரியே தூசா மருங்குடுத்து
வித்தகன் அக்கமணி வெண்ணீ றினிதணிந்தாள். 72

---

605. சிவ என்பதன்முன் நம என்பதைச் சேர்த்து உரைத்தால் என்க.

*பாண்டி நாட்டிலே வாட்களமர் நகரிலே விதுரன் என்னும் ஓர் அந்தணனுக்கு மனைவியாய் அமைந்த வஞ்சுளை முத்தி பெற்றவாறு கூறுவது. விதுரன் தன் மனைவியைப் பிரிந்து பொது மகளிரையே விரும்பி வாழ்க்கை நடத்தினானாக, வஞ்சுளையும் மனங்கெட்டுத் தீயொழுக்கம் உடையளானாள். கணவனிறந்த பிறகு ஒருநாள் கோகர்ணம் சென்றாளாக, அங்குச் சிவராத்திரியன்று சிவதருமத்தை வாசித்துப் போதித்துக் கொண்டிருந்த தேசிகர் ஒருவரைத் தான் உய்யும் வண்ணம் யாதெனக் கூறுமாறு வேண்டினாள். அவரும் சிவ கதை கேட்க எனச் சொல்லிக் கேட்பித்து ஐந்தெழுத்து அறிவித்தார். இதுவே கதையின் முன்னைய பகுதி.

606. தவக்கொடி—வஞ்சுளை. ஐவர்—ஐம்புல வேடர். ஐயிடம்—ஐம்பொறிகளாகிய இடங்கள்.

607. தூசு—ஆடை.

608. கையார் மழுவெம் படையாய் சரணங் கருணைக்
கடலே சரணஞ் சரணம்
பையா டரவத் தணியாய் படர்செஞ்
சடையாய் சரணஞ் சரணம்
மையார்கலி வெந்திற நொந்திடா மழைமஞ்
செனவே வருநஞ் சயிலும்
ஐயா சரணஞ் சரணம் எனையா ளமலா
விமலா சரணஞ் சரணம். 73

609. தொத்தா ரிதழித் தொடையாய் சரணஞ்
சுருதிப் பொருளே சரணஞ் சரணம்
சத்தா கியசிற் குணனே சரணஞ் சமனுக்
கொருவெஞ் சமனே சரணம்
முத்தா ரிளவெண் ணகையம் பிகைதன்
முறுகுந் தவசீர் தனைகண் டருளும்
அத்தா சரணஞ் சரணம் எனையா ளமலா
விமலா சரணஞ் சரணம். 74

610. கமலா லயனுக் கருள்வோய் சரணங்
கயிலைக் கிரியாய் சரணஞ் சரணம்
நிமலா கமதற் பரனே சரணம் நெடுமா
லறியாய் சரணஞ் சரணம்
சமரா டினர்முப் புரமுங் கடிதிற் றழன்மண்
டிடவெண் ணகைவெங் கனல்கொண்
டமரா டியவா சரணம் எனையாள்
விமலா சரணஞ் சரணம். 75

611. என்றுபல பலவு மேத்தி யிலங்கிழையாள்
தொண்டுபடு சைவத் துறையின் முறைபேணி
நின்றுசிவ கதையாம் நிகரில்லாத் தெள்ளமுதம்
ஒன்றுபடச் செவியா லுண்டுசில நாட்கழித்தாள். 76

---

609. சமனுக்கு ஒரு வெஞ்சமனே—காலனுக்குக் காலனே.

612. ஊழியன் முறையா லுறுதவத்தாள் பொன்றுதலுந்
தாழுஞ் சடையான் றருகணங்கள் வந்தெய்தி
வீழுங் கனக விமானமிசை யேற்றி
வாழுஞ் சிவபதத்தில் வஞ்சுளேயைக்
கொண்டடைந்தார். 77

613. மூன்று சுடரு மழுங்க முதிரொளியால்
ஆன்றசிவ லோகத் தவிர்கனக மண்டபத்தில்
என்றயன் மால்விண்ணே ரிருபாலும் நின்றேத்த
ஊன்றுமணிக் கோல்பிடித்து நந்தியொரு பாலுலவ,
78

614. தக்கன்றலே யரிந்த வீரனெரு சாரணுகத்
தொக்ககண நாதர்எல்லாம் எம்மருங்குஞ் சூழ்போத
முக்கணும் ஐந்துமுக முன்னே னினிதமர்ந்த
மிக்கதிருச் சபையின் மெல்லியலேத் தான்விடுத்தார்.
79

615. அன்னவளும் ஈசனடித் தாமரை பரவி
என்னதவப் பயனிங் கெய்தியதென் றேம்பலற்றுக்
கன்னன்மொழி மாதுமையைக் கண்ணுத
லேயுங்கண்டு
துன்னிய ஆநந்த வாரிசுழிப் பட்டாள். 80

616. காவ லவுணர் கூட்டறுத்த கண்ணுதலோன்
பாவை மதிமுகத்தை யன்பினெடு பார்த்தருளிப்
பூவை யிமைப்பொ லங்கொடிக்கு நாடோறும்
ஏவல் புரிதியெனப் பணித்தா னின்னுரையால். 81

617. ஆரணங்கு போல்வா ளரன்பணிப்ப வெற்புதவுங்
காரணிக்கங் கேவல் புரிந்தொழுகுங் காலத்தில்
நாரணனும் நான்முகனும் ஏத்துநவை யில்லாப்
பூரணியே கேட்டியெனப் போற்றிப்
பணிந்துரைத்தாள். 82

---

615. ஏம்பலற்று = கலக்கமற்று
617. வெற்பு உதவும் காரணி = பார்வதி.

618. பாதவஞ் சூழ்சாரற் பனிவரையின் பாங்கர்தொறும்,
ஏதமன்றிப் பன்னு ளிருந்து தவம்புரிந்த
மாதவத்தி ஞேர்க்கும் வழங்காப் பெரும்பதவி
போதமிலேற் கின்றருளா லீந்தபு ராதனியே! 83

619. யானிப் பதத்தி லினிதிருக்க என்கணவன்
தானெப் பரிசினனுய் எவ்விடத்திற் சார்ந்தானே
பானற் கருணைவிழிப் பைந்தொடியே கூறுகென
நானக் குழலுமையாள் சற்றே நகைத்துரைத்தாள். 84

620. சாந்தார் களபநகிற் ருர்குழலே நின்கணவன்
சிந்தா குலமயலாற் றீவினையைச் செய்திறந்து
நந்தாத் தீவாய் நரகனைத்துஞ் சேர்ந்தேறி
விந்தா டவியி லலகையாய் மேவிநின்ருன். 85

621. என்னு முன்ன மடவா ளிமவான் மகளைத்தொழுதே
அன்னே அன்னுய் நின்னு லடியே னிவ்வா றெழுக
முன்னே யெனையாள் கணவன் பேயாய் முட்கா னகத்தில்
பொன்னே யனையாய் திரிதல் தகவோ வென்னப் புகன்ருள். 86

622. கல்லார் மணிப்பூ ணுமையாள் கருணை கெழும நோக்கி
யெல்லாத் துயர முழுதும் ஒழிவா யொழிவா யென்றே
நல்லா யுனது கணவன் நண்ணும் அலகை யுருவம்
பொல்லா வினையுங் கழித்துப் புகுதப் புரப்பன் காண்டி. 87

---

618. பாதவம் = மரம்.
619. பானல் = கருங்குவளைபோன்ற. நானம் = கத்தூரி, மணம்.
620. சிந்தாகுலம் = சிந்தையிற் ரேன்றிய வருத்தம், கலக்கம்.

623. வாசங் கமழுங் குழலாய் மகிணன் பானீ போதென்
நீசன் றேவி பின்னும் இயனோர் வீணைக் கிழவன்
ஆசொன் றில்லா விஞ்சை யறிதும் பிருவை யழையா
நீசென் றிவளோ டந்த நெடுங்கா னகத்தைச்
சேர்ந்தே,. 88

624. சந்த மறையின் றலைவன் இசையை யிசையாற்
சாற்றி
இந்த மடவாள் கணவன் இருங்கா னகத்திற்
பேயாய்ப்
பந்த வினையா லுழலும் பாவ வுருவு நீங்கி
நங்க ளுலகிற் கொடுவா என்ன நங்கை நவின்ருள்.
89

625. ஞால மோங்குக நான்மறை நீடுக
சீல மன்னவர் செங்கோல் விளங்குக
கால மாமழை மன்னுக காதலாற்
சால ஈச னடியார் தழைக்கவே. 109

---

623. வீணைக்கிழவன் தும்புருவை அழைத்துக் கூறினன் என்க.

624. தலைவன் இசையை = சிவபெருமான் புகழை. நங்கை நவில, அங்ஙனமே தும்புருவும் போய்க்கொணர்ந்தான் என்றறிக.

625. வாழ்த்து.

வரதுங்கராமபாண்டியர்

இயற்றிய

## வாயுசங்கிதை

### சிவலிங்க வியல்பும் பூசாவியல்பும் உரைத்தது

626. மாசற விளங்கு பூருவ பக்கந் தன்னிடை
வாய்த்தநன் னாளில்
தேசுடை யிலிங்கந் தன்னைநன் காகச் செய்தெழில்
ஐங்கரன் றனிற்
பூசனை புரிந்து தூய்மைசெய் திருந்த தலத்தினிற்
பொருந்திட வைத்தாங்
கேசவில் பசும்பொற் சலாகையால் விழியை
யிலிங்கத்தி னெழுதிட வேண்டும். 2

627. எழுதியோ ரெட்டு மண்ணல தைந்து மண்ணுற
விட்டநீ ரதனாற்
பழுதிலா ஐந்தால் ஆவுடை யாளோடி லிங்கத்தைப்
பாற்பட ஆட்டிச்
செழுமலர் தூவித் தெய்வநன் னீரிற் சேகற
விருத்தியத் தலத்திற்
கொழுநனைத் தருப்பை விரித்தலர் தூக்கிக்
கொடிபல எடுத்திடல் வேண்டும். 3

628. எண்டிசை மருங்குங் கும்பநன் கிருத்தி
யெழிற்றிசை காவலர் தம்மை
விண்டநாண் மலர்தூய்ப் பூசனை புரிந்து
மரத்தினல் வெள்ளியாற் பொன்னால்
முண்டக மியற்றி முண்டக மீதின் மொய்யொளிப்
பீடமோ ரிரண்டு
கண்டவர் வியப்ப வைத்திடல் வேண்டு
மென்னுமாற் கடவுள்முன் னாலே. 4

629. வீரனை முதலாம் வாயிற்கா வலவர் நால்வரை
விழைந்துபூ சித்தாங்
கோர்பெறு தெண்ணீ ராட்டிவார் தருப்பை
யோடெழி லாடையுஞ் சேர்த்திச்
சீர்பெறு கீழ்பாற் பீடமேற் கீழ்பாற் சிரமுற
இலிங்கத்தைக் கிடத்தி
ஆர்தரு மேல்பாற் பீடமே லந்த ஆவுடை யாடனை
யிருத்தி, 5

630. ஐந்துநா ளன்றி மூன்றுநா ளொருநா ளமைத்தவா
றேநனி யிருத்திப்
புந்தியா னினைந்து பூசனை புரிந்த தேவர்க
ளியாரையும் போக்கி
வந்தியா இலிங்கந் தன்னையா வுடையா டன்னொடும்
மலர்க்கையா லெடுத்துச்
சிந்துதே மலர்பெய் மண்டபத் திருத்தித் தீம்புன
லாட்டிட வேண்டும். 6

631. மணிமலர் தூவி வயங்குமீ சானதிக்கினிற்
பதுமத்தை வரிந்தாங்
கணிபெறு கும்பம் வைத்துமற் றதனி லண்ணலைப்
பூசனை செய்து
கணிபுக ழுளி லெடுத்தமண் டலத்தி னடுவினிற்
காண்டகு வெள்ளை
யிணைமலர்க் கமலம் எழுதிவெண் பட்டாங் கோர்பெற
விரித்திட வேண்டும். 7

632. விழுத்தகு பசும்பொன் மலர்பல தூவி மேதக
வேவிரித் திட்ட
கிழக்குறு கமலந் தன்னிடை யண்ணல் கேழ்கிள
ரிலிங்கத்தை வைத்து
வழுத்திமேல் பாலிற் கமலமற் றதனில் ஆவுடை
யாடனை வைத்துப்
பழுத்தபே ரன்பாற் சிவந்தநல் லாடை பாங்குற
வேநனி சேர்த்தி, 8

633\. எட்டிதழ்க் கமல மொன்றுகீழ் பாலி லேர்பெற
வரிந்தத னடுவண்
மட்டவிழ் கொன்றை யண்ணறன் கும்பம்
வைத்தொரு கரகமும் வைத்து
விட்டல ரோரெட் டிதழினும் விளங்குவித்
தியேச்சுர கும்பம் வைத்தாங்
கிட்டொளிர் பதுமஞ் சூழ்ந்திரு நால்வ
ரோமத்தை யியற்றிட வேண்டும். 9

634\. விளங்கு மீசான திக்கினி லன்றி மேற்றிசை
யதனின்மே தகுநூல்
அளந்தறி குரவன் ஓமநன் கியற்ற வேண்டுமால்
அறைந்தவா றன்றி
வளர்ந்திடு கனலிற் குரவனு குதிதான் வழங்கினும்
அமையுமென் றுரைப்பார்
களங்கமில் இலிங்கந் தனிற்சிவ வத்தங் காண்டக
வைத்திட வேண்டும். 10

635\. வைத்தபின் அழலி னுகுதி யியற்றித் தக்கணை
மரபினிற் கொடுத்தாங்
குத்தம குருதக் கணையுநன் குதவிச் சிற்பநூ
லொன்றற வுணர்ந்த
வித்தகத் தச்சற் காங்கதிற் பாதி யளித்தொளி
விளங்கிய பொன்னூற்
சித்திர விடப் மன்றெனி லாமை தீதற வியற்றிட
வேண்டும். 11

636\. இயற்றிய தொன்றை யிலிங்கமொன் றமைக்குங்
குழியினு ளேர்பெற வைத்து
வியப்புறு பிரம சிலைதனை வைத்து விரிகதிர்
நவமணி சேர்த்திக்
கயற்கணாள் பங்கன் இலிங்கத்தை யெடுத்துக்
காண்டகத் தாபிக்க வேண்டும்
நயப்புடன் அதன்பின் ஆவுடை யாளை நன்குறச்
சேர்த்திட வேண்டும். 12

637. அட்டபந் தனமும் அமைத்தலர் மலர்தூய்
அருக்கியம் உதவிமுன் அழகார்
பட்டணி சிவகும் பத்தினி னீராற் பரமநல்
இலிங்கத்தை யாட்டிக்
கட்டழ குடைய ஆவுடை யாளைக் கரகத்தி
னீரினு லாட்டி
உட்டிக ழிலிங்க மூலத்தில் வித்தி யேச்சுர
கும்பநீ ருகுத்தே, 13

638. அணிசெயா தார சத்தியே முதலாம் பீடத்தை
யருச்சனை புரிந்தாங்
கிணையறு பஞ்ச கலாநி யாசஞ்செய் திலிங்கதீ
பனத்தையும் உணர்ந்து
குணதிசை யலதேல் வடதிசை நோக்கிக்
கொழுமலர்க் கையிணை கூப்பித்
தணிவிலா அன்பாற் சிவனொடும் உமையை
இலிங்கத்திற் ருபிக்க வேண்டும். 14

639. பிரமன்மா லுருத்திரனிந் திரனிரவி முதற்றேவ
ரசுரர் பெட்பால்
இருபுறமுஞ் சேவிப்ப இலங்குவிமா னத்தினன்றி
இடப மீதின்
மருவிவான் வழியாக வந்துமதி முகிழணிந்தோன்
இமைய வல்லி
உரியபேரி லிங்கத்தின் உறைந்தனரென்
றேமனத்தின் உன்ன வேண்டும். 15

640. ஐந்துவகை யுபசார மியற்றியே பூசையினை
முடிக்க அன்பால்
இந்தவகை நாளும் பூசையியற் றிடவேண்டும்
என்பார் அண்ணல்
மைந்துடைய படிமங்கள் தாபிக்கும் வகையுமிவ்
வாறுமால் வானத்
தந்திமதி தொடவுயர்ந்த கோயிலில் தாபித்திடுதல்
அதிக மாமால். 16

சிவஞான சுவாமிகள்

இயற்றிய

## காஞ்சிப் புராணம்

### தழுவக்குழைந்த படலம்*

641. பண்டுபோற் கம்பை யாற்று மணிப்புனல் படிந்து மெய்யிற்
கண்டிகை நீறு தாங்கிக் கடப்படு நியமம் ஆற்றித்
தொண்டினில் வழாது பூசைத் தொழில்தலை நின்று காதல்
மண்டவே கம்ப னுரை மஞ்சனம் ஆட்டுங் காலை, 365

642. மருமலர்த் தனிமா நீழல் வள்ளலார் மேன்மேல் அன்பு
பெருகிய கருத்தி னுட்குப் பேரருட் கருணை கூர்ந்த
ஒருதிரு விளையாட் டாலே பத்தியின் உறுதி நோக்கித்
திருவருள் புரிவான் எண்ணி இதுதிரு வுள்ளஞ் செய்தார். 366

---

*இறைவரும் இறைவியும் கயிலையில் மகிழ்ந்திருக்குங்கால், ஒருநாள் இறைவியார் கணவருடைய கண்ணை விளையாட்டாகப் பொத்தினராக, உலகெங்கும் பேரிருள் சூழ்ந்து இடர்விளைய, இறைவரும் மனைவியாரை நோக்கி "அப்பாவம் ஒழிய நீ கழுவாய் தேடல் வேண்டும். உன்னைப் பாவம் அணுகாதாயினும், நாம் இயற்றிய வழியையே உலகு பின்பற்றி நடக்குமாதலால், நீ மண்ணுலகிற் பொருந்தி நம்மைப் பூசித்து வரவேண்டும்" என்றுகூற, அவரும் காஞ்சியில் வந்து தோன்றிப் பூசைக்குரியன எல்லாம் அமைத்துப் பூசை யியற்றி மகிழுங்கால் ஒரு நாள் கம்பையாற்றிற் பெரிய வெள்ளம் வர, அவ்வெள்ளம் சிவலிங்கத்தை அடித்துக்கொண்டு போய் விடுமோ என்றஞ்சி, தேவியார் அதனைத் தழுவிக் கட்டிக்கொள்ள, அவருடைய நகிலாலும் வளைக்கையாலும் இறைவர் குழைந்தருளினர் என்பது இப்படலத்துச் சொல்லப்படுவது.

643. விழுமிய அண்டத் துள்ளும் புறத்தினும் விரவுந்
தீர்த்தம்
முழுவதும் ஒருங்கு நண்ண முன்னினர் முன்ன
லோடும்
ஒழுகுநீர்க் கம்பை யாற்றின் உடன்விராய்க்
கடைக்கால் வெள்ளம்
எழுவது கடுப்ப எல்லாப் புனலும்வந் திறுத்த
வன்றே. 367

644. மிடைவானவர் திசைகாவலர் புவிமேலவர்
காணூஉக்
கடைநாள்அணு கிற்றாலென வெருவிக்கலுழ்
கண்ணீர்
இடையாறென விரவக்கொடு வேகத்தொடும்
எவ்வெப்
புடைநீர்களும் உடனாகிய கம்பைப்புனல் வருமால்.
368

645. மலைபடு வளங்கள் வாரி மணிபல வரன்றிப் பொங்கி
அலையெறிந் திரைத்து விம்மி விசும்பெலாம்
அடைத்துப் பம்பித்
தலைவரு வெள்ளந் தன்னைத் தடவரை பயந்த
திங்கட்
கலைநிறை வதனத் தேவி காண்டலும்
வெரூஉக்கொண் டாளால். 373

646. புடையுறும் இருளை மாரும் பொள்ளென
அச்சம் பூப்பத்
தடைபடா தணுகு நீத்தந் தனையெதிர் நோக்கி
நோக்கிக்
கடல்கிளர்ந் தனைய வெள்ளங் காரண மின்றி என்னே
விடையவன் பூசை நாப்பண் மேவிய வாறென்
றெண்ணி, 374

---

646 இருளைமார் = தோழியர்

647. என்னுடைத் தீங்கு தன்னூற் பூசனைக் கிடையூ றுகத்
துன்னிய திதுவாம் என்று சொல்லருங் கவலை
கூர்ந்து
சென்னியின் மதியம் வைத்தார் திருவடி இதயத்
தெண் ணும்
முன்னர்அப் பெருநீர் வெள்ளம் முடுகிவந் தடுத்த
தாக, 375

648. துன்புற நோக்கி நெஞ்சந் துண்ணெனத் துளங்கி
ஆவா
உம்பர்வான் தடவிச் செல்லும் ஒப்பரும் பெருநீர்
வெள்ளம்
எம்பிரான் மிசையே நண் ணும் இனிச்செய்வ
தென்னே என்று
தம்பிரா னூர்பால் அன்பு தழைந்தெழும் உள்ளத்
தோடும், 376

649. அட்டொளிப் பசும்பொன் மேனி வடிவெலாம்
அதிர்ப்புக் காட்டப்
பொட்டணி நுதலின் பாங்கர்க் குறுவெயர்த்
திவலை பூப்ப
மொட்டிள நகிலில் தூங்கும் முத்தொளி
வடங்கள் ஆட
இட்டிடை வருந்திச் சால இறுமெனத்
துவண்டு வாட, 377

---

649 அட்டொளி = சுடப்பட்ட ஒளியையுடைய.
இட்டிடை = சிறிய இடை

650. ஒருகொடி எழுந்து செம்பொன் உயர்வரைக்
குவடு தன்னை
இருகொழுந் திருபாற் போக்கித் தழீஇயென
எழுந்து வல்லே
முருகலர் வேதி உம்பர்த் தன்வல முழந்தாள்
ஊன்றிக்
கருமணிப் பாவை யன்னுள் கணவரைத் தழுவிக்
கொண்டாள். 379

651. மணிநகிற் குவட்டி னேடு வளைக்கையால்
நெருக்கிப் புல்லித்
தணிவருங் காதல் விம்மக் காதலி தழுவ லோடும்
திண்ணியிருள் அறுக்குஞ் சோதித் திருவுருக்
குழைந்து காட்டி
அணிவளைத் தழும்பி னேடு நகிற்சுவ டணிந்தார்
ஐயர். 380

652. வற்றிநின் றருந்தவம் முயன்று பன்மறை
கற்றவர் உணர்வையுங் கடந்த பேரொளி
சிற்றிடைத் திருந்திழைத் தேவி வால்வளைப்
பொற்றழும் பொடுநகிற் சுவடு பூண்டதே. 381

653. அம்பொன் வால்வளைத் தழும்பொடு நகிற்சுவ
டணிந்து
கம்ப வைப்புடை வாழ்க்கையார் கருணைகூர்ந் தருளி
நம்பும் ஓகையிற் பெருங்களி சிறத்தலும் நலமார்ந்
தும்பர் இம்பரின் உயிரெலாம் உவகையிற் களித்த.
388

654. அந்த வேலையின் இறைவிதன் அணிவளைத் தழும்பு
சந்த மென்நகிற் சுவடுதோய் தனியுருப் பொலியச்
சுந்த ரந்திகழ் சுடரொளி இலிங்கத்தி னின்று
முந்து தோன்றினர் மூவருக் கறிவரும் முதல்வர்.
400

650 வேதி = இலிங்கத்தின் பீடம்

655. தோகை மஞ்ஞையஞ் சாயலாய் துளங்கியுள்
வெருவேல்
ஓகை யுற்றனங் காண்டிநீ என்றுரைத் தருள
வாகை யேற்றினர் தம்மண வாளநற் கோலம்
ஏக நாயகி நோக்கினள் இணைவிழி களிப்ப. 402

656. தழீஇய கைகளை விடுத்தெழுந் தவனியில் தாழ்ந்து
குழீஇய அன்பினல் அஞ்சலி சென்னிமேற்
குவித்தாள்
கழீஇய செம்மணி வடிவினைக் காண்தொறும்
உலவாக்
கெழீஇய காதலாற் கிளர்ந்தெழும் உவகையில்
திளைத்தாள். 403

657. நெடியவன் பிரமன் காணு நின்மலக் கொழுந்தே
போற்றி
அடியனேற் கபயம் நல்கும் அருட்பெருங் கடலே
போற்றி
படிமுதல் ஆரு ருகி வேறு மாம் பரனே போற்றி
கடிமலர்த் தனிமா நீழற் கடவுளே போற்றி
போற்றி. 404

658. தரைபுனல் இரவி இந்து தழலுயிர் வளிவான்
என்று
உரைபெறு வடிவோர் எட்டும் உடையனே
போற்றி போற்றி
வரையெழும் பரிதி செந்தீ மதியமை விழியாய்
போற்றி
விரைமலர்த் தனிமா நீழல் வித்தகா போற்றி
போற்றி. 406

---

656 கழீஇய = சாணைபிடிக்கப்பட்ட

659. கறைமணி மிடற்றாய் போற்றி கண்ணினுள்
மணியே போற்றி
மறவியின் வழிபட் டோர்க்கும் வழங்குபே
ரருளாய் போற்றி
நிறைபரஞ் சுடரே போற்றி நெஞ்சக விளக்கே
போற்றி
மறைமுதல் தனிமா நீழல் வள்ளலே போற்றி
போற்றி. 407

660. முன்னுறு பொருள்கட் கெல்லாம் முற்படு
பழையாய் போற்றி
பின்னுறு பொருள்கட் கெல்லாம் பிற்படு புதியாய்
போற்றி
புன்மதி யாளர் தேறாப் பூரண முதலே போற்றி
சின்மயத் திருவேகம்ப சிவசிவ போற்றி போற்றி.
408

கச்சியப்ப சுவாமிகள்

இயற்றிய

# திருவானைக்காப்புராணம்

## கோச்செங்கணார் வழிபடு படலம்*

661. திரைதவழ் பொன்னி சார்ந்து செங்கணார் நிற்ப வாக்குக்
கரையர்முன் வடாத்திக்கின் அமரொரு தடத்தின் மூழ்கி
விரையவை யாற்றுப் பொய்கை மீமிசை எழுந்தா லென்ன
விரைபுனற் பொன்னி நாப்பண் எழுந்தது விமானம் அம்மா. 216

662. புற்புதம் எழுந்தா லென்னப் புனலிடை விமானந் தோன்றத்
தற்பரன் சரண மன்றிச் சார்புறுத் தலைமை மன்னர்
அற்புத வுளத்த ராணர் அமரரு மிறும்பூ துற்றார்
சொற்பயில் புவியி னோருந் தோல்வியில் மகிழ்ச்சி பூத்தார். 217

---

*சுபதேவன் என்னுஞ் சோழ மன்னற்கும் கமலவதி என்னும் அரசிக்கும் புதல்வராகத் தோன்றிய செங்கணார் பதினாருவது ஆண்டில் அரசேற்றுப் பல மன்னரை வென்று திறைவாங்கி, வெண்ணாவல் மரத்தின்கண் பொருந்திய இறைவர்க்குக் கோயில் அமைப்பிக்கத் தலைப்பட்டார். கடவுள் கனவிற் றோன்றி, "முன்னரே மயன் கெண்டகை யாற்றின்கண் இட்டதொரு விமானமுண்டு. அதனைப் பெயர்த்துக் கொண்டுவந்து வைக்க" எனக்கூற, அரசரும் அங்ஙனஞ் செய்விப்பாராணர். திருவானைக்காவிற் சிறந்ததொரு கோயிலமைத்துப் பூசையும் விழாவும் நடப்பித்து மகிழ்ந்து வாழ்ந்து, இறுதியில் சிவகணநாதராணர் என்பது இப்படலத்துச் சொல்லப் படுகிறது.

661 கெண்டகை நதியிலிருந்து எடுக்கப்பட்ட விமானம் மீண்டும் ஆண்டே விடப்பட, அது காவிரியாற்றில் தோற்றிற்று என்க.

662 புற்புதம் = நீர்க்குமிழி.

663. அடியவர் தமக்கெய் தாத அரும்பொருள்
யாதொன் றில்லை
கடிகெழு நாவ னீழற் கண் ணுத லருளி னாலே
படிமிசை யெவருங் காணப் பரந்தகெண் டகைநீ
ராற்றின்
இடுசிலை பொன்னி யாற்றின் எழுந்துமேல்
விளங்கு மென்றால். 218

664. வினைஞரைக் கூவி யெல்லாம் மேதகக் கரையி
லேற்றி
நனையவிழ் நாவ னீழல் நம்பனார்க் கினிது சார்த்தித்
தனை நிக ரதனி லொன்பான் சாளர மேல்பால்
வைத்துப்
புனைமணி வாயில் தென்பால் ஆக்கினர் புரைதீ
ரன்பர். 219

665. மொழிந்ததென் வாய்தல் நேரே முப்பது சாலே
கத்தோ
டெழுந்துவிண் அளாவுங் கோயிற் கிணங்குமண்
டபமு மற்றுஞ்
செழுந்திருச் சிலையாற் சிங்கத் துருவெனச் சிறந்து
தோன்றக்
கொழுந்துகொண் டெழுந்த அன்பிற் கொற்றவர்
குறித்துச் செய்தார். 220

666. மண்டபம் பிரகா ரங்கள் வயங்குகோ புரங்க ளாதி
விண்டொட இழைத்திட் டெஞ்சும் விழுநிதி
முழுது மோர்சார்
மிண்டறத் தாபித் திட்டு மேக்குற அதற்கு நேரே
கொண்டமண் டபத்து மேலாற் கோயிலொன்
றிழைத்திட் டாரால். 221

---

665. வாய்தல்—வாயில். சாலேகம்—பலகணி.

667. சித்திரக் கோயி லுள்ளே சிவலிங்க மொன்று தாபித்
துத்தம நிதிக ளெல்லாம் உமதருள் வசமா ஈங்கு
வைத்தனன் கைக்கொ ளென்று வணங்கினர்
அதனு லந்தப்
பித்தருக் குளதால் ஆதிப் பெருஞ்செல்வ
ரென்னும் நாமம். 222

668. சம்புவி நீழ லார்க்குத் தக்கவா கமத்திற் செய்யும்
நம்புநித் தியமே யாதி நவையறு பூசை யெல்லாம்
உம்பரும் விழைய ஆற்றற் குரியவர் தம்மை நாடி
யிம்பரி னிருத்து வாமென் றெண்ணின ரிகல்வேன்
மன்னர். 223

669. காசிகே தாரங் காஞ்சிக் கடிநக ராதி மூதூர்
மாசுதீர் குலத்தின் மேலாய் வளர்சிவத் துவிசர்
தம்மை
நேசமோ டழைத்துப் போந்து நிதிநிலஞ்
சுதந்தி ரங்கள்
ஏசுதீர் மனைகள் மற்றும் ஈந்தனர் தாபித் திட்டார்.
224

670. தருமமுந் தவமும் பேணுந் தலைமை பூண் டமுத
லிங்கர்
திருவடிப் போது போற்றுஞ் சிவபத்தர் தமக்கீ
ரொன்பான்
உருவளர் மடங்க ளாக்கி யூதியம் பலவும் நல்கி
யிருநிலம் வியப்ப எல்லா இயற்கையும் நிறுவி
னரால். 225

671. இவ்வகைப் பணிக ளெல்லாம் ஈங்கிவர் இயற்று
நிற்பச்
செவ்விய வழுதி யாதிச் செருத்திறல் வேந்தர்
போந்திட்

டவ்விய மில்லா நெஞ்சின் அளவளாய் அவர்கட்
கேன்ற
நவ்வியங் கரத்தி ஞர்தம் நற்பணி யியற்றி ஞரால்.
226

672. காலமோ ராறும் பூசை கடிவிழா ஆதி யெல்லாம்
ஏலுமா றியற்ற நோக்கி யின்பகந் ததும்ப ஆங்கே
சாலுநாள் வசித்துப் பின்னர்த் தலந்தொறுஞ்
சார்ந்து நம்பர்
கோலமார் பணிக ளெல்லாங் குயின்றுதம் பதியைச்
சார்ந்தார். 227

673. ஆயிடை யிருந்த வாறே யரசுசெய் துலகத் துள்ள
கோயில்கள் தோறும் பூசை குறைவற இயற்று
வித்துப்
பாயின மலங்கள் தீரப் பரசுக வடிவொ டொன்றாய்
மேயினர் சிவலோ கத்தின் விறற்கண நாத ரென்ன.
228

674. என்றுமிக் குரைத்த சூத விருடியை முனிவர் நோக்கி
நன்றுறு சரித மீங்கு நவிற்றினை சிலம்பி யானைக்
கொன்றிய பூசை வேட்கை யுற்றவை ஞான பூமி
வென்றிகொள் தலைவன் பாதம் மேவுகா ரணம்யா
தென்றார். 229

675. கடுத்தெதிர் வினவி நின்ற கரிசறு முனிவர் தம்மை
விடுத்தவைம் பொறியி னின்ற மேதகு சூதன்
நோக்கித்
தொடுத்தமெய்ப் பத்தி யோடுஞ் சூழ்ந்துரை
வினவிற் கீங்கே
யடுத்திட இறுத்து மாலென் றறைதரப் புக்கா
னன்றே. 230

676. கயிலைநெடு வரையகத்துக் கணநாதர் பலருள்ளும்
பயிலுமா லியவானும் பகர்புட்ப தந்தனுமென்

றியலியற்கைப் பெயருடையா ரிருவருமுப்
புரமெரித்த
சயமுடைய சேவகனார் தகும்பணியிற் றலைநின்றார். 231

677. ஒருவரொரு வரைநோக்கி யுளத்தெழுந்த
பொறாமையினால்
ஒருவரொரு வரிற்பூசை யுஞற்றுதலான் மேம்படுதல்
திருகுமுளத் தொடுநினைந்து தினமுமிக
லினர்வருங்கால்
இருவருமோ ருழியெதிர்நே ரெய்திமிகத்
தருக்கினார். 232

678. தருக்கியிரு வருந்தம்முள் தழல்விழித்து
முரணுமிடைப்
பொருக்கெனமா லியவானைப் புட்பதந்தன்
முகநோக்கி
வெருக்கொளிப மாகென்றான் வெகுண்டிடுமா
லியவானைச்
செருக்கிளரும் புட்பதந்தன் சிலம்பியா
கெனச்சபித்தாள். 233

679. மாறாத பெருஞ்சாப வலைப்பட்டிங் கிருவோரும்
ஆறாடு சடைமுடியார் அடிபணிந்து விளைந்ததிது
வேறாக அருளுகென வேண்டினார் வேண்டுதலும்
நீறாடுந் திருமேனி நிமலனார் அருள்செய்வார். 234

680. வானநாட ரும்பழிச்சி வரமேற்குஞ் சோணாட்டுள்
ஞானபூமி யையடுத்து நமதருட்பூ சனையாற்றி
ஆனதோர் தலத்தினாமிக் ககத்திகலி யுயிரிறந்திவ்
ஈனமா கியசாபம் இழப்புறுவீ ரெனவிடுத்தார். 235

---

678. இபம்—யானை.
கோச்செங்கணாரின் பழம்பிறப்பாகிய சிலம்பியின் வரலாறு சொல்லப்படுகிறது.

கச்சியப்ப முனிவர்

இயற்றிய

# தணிகைப் புராணம்

## குமரேசப் படலம்

681. யாவருக்கும் எப்பொருட்கும் இன்பமெய்த நின்றவர்
மூவருக்கும் இன்புறுத்தும் மூவிருதி றத்தரும்
தாவிலின்ப மெய்தநின்ற தத்துவத்த னென்பவால்
ஓவிலின்ப வுருவமான வொளிர்குமார ஈசனே. 1

## நாரணனருள்பெறு படலம்

682. நாடாது வேட்ட நனிவழங்கும் வள்ளன்மை
தாடா ழுநர்பாற் றகைக்குங் கருணையான்
ஓடாத தானே யுருமுச் சினச்சூரைக்
கோடாப்போர் வெங்களத்துக் கொன்ற
இறைபோலும்
குருபரனைத் தாழ்த்த குருநாதன் போலும். 16

683. பாருடு செங்களத்துப் பற்றார் திரள்முருக்கி
ஆருடு கண்ணீர் அமரர் சிறைமீட்டோன்
நீருடு மேனி நிமலன் வலத்துயிர்த்த
தேருத வேதற் சிறையிட்டோன் போலும்
தேவியுமை கண்களிக்குஞ் செல்வமே போலும். 17

684. தேக்கு மறைமற்றுந் தெள்ளுந் தமிழ்முனிக்கு
நீக்கமின் ஞான நிலையருளும் வாய்மையான்
ஊக்கமி லோமும் உணரச் சராசரங்கள்
தாக்கி லுருவாய்த் தழைத்தபிரான் போலும்
தந்தைதாய் நாப்பண் தவிர்ந்தமழப் போலும். 18

---

682. தாடாழுநர்—தாளிற்கு வணக்கஞ் செய்வோர்.

685. வெளிஞெமிர் ஞான்றீசன் வியங்கொள்ளத் தாங்கி
வளியழல் வார்கங்கை வருந்தும் வழித்தோன்றல்
களிஞிமிறுந் தேனுங் கஞலு மணிப்பொய்கை
நளிமலர்மென் பள்ளி நயந்திருந்தான் போலும்
நாயே னுளமும் நயந்திருந்தான் போலும். 19

686, அறிவிரண்டு மாய அலங்கறிவிற் ருழ்ந்தோர்
செறிவகன்ற யாக்கைச் செருத்தே ருகைப்போன்
உறுவலியின் வையம் உடற்று தகரூர்ந்த
எறுழ்மிகுத்த நாற்கோட் டிப்பாகன் போலும்
எழிற்கலவ மஞ்ஞை இனிதுகைத்தான் போலும். 20

இந்திரனருள்பெறு படலம்

687. அருள்பொழி முகங்கள் போற்றி அலர்விழிக்
கமலம் போற்றி
மருமலர்க் குவளை பூத்த வரையுறழ் திணிதோள்
போற்றி
பெருவர மளிப்ப நீண்ட பேரெழில் மணிக்கை
போற்றி
இருள்வினை துகைத்துச் சேந்த இணைமலர்ப்
பாதம் போற்றி. 19

688. பேரரு ளுடையா னென்னும் பெற்றிமை யுலகோர்
தெள்ளக்
கூரிருண் மலத்தி னழ்ந்து கொட்டிரும் இழுதை
யேற்குஞ்
சீரருள் புரிந்து தேவர் சிறையினைச் சீத்துக் காத்த
ஆரருள் போற்றி ஆரு யிரமுறை போற்றி
போற்றி. 20

685. கஞலும்—நெருங்கும்.
686. உறுவலி—மிக்க வலிமை. தகர்—யானையின் ஆண்.
எறுழ்—வலிமை.
687. துகைத்து—வருத்தி.

689. மண்ணுயி ரனைத்து மல்க மழைமுகி லானாய்
போற்றி
விண்ணுயி ரனைத்து மல்க மிளிரமிழ் தானாய்
போற்றி
கண்ணுருக் காணக் கண்ணுட் கனலுரு வானாய்
போற்றி
எண்ணுயிர்த் தொழின்மை முற்ற விரந்தர மானாய்
போற்றி. 21

690. பரிதிமெய் யுடற்றும் வெப்பின் பரிதியாங் கடவுள்
போற்றி
வருமதி குளிர்க்குஞ் சீத மதிப்பெருங் கடவுள்
போற்றி
செருவழல் பொடிக்குஞ் சீற்றச் செருவழற் கடவுள்
போற்றி
கருதுளங் கடவும் ஆவி கடவுயிர்க் கடவுள்
போற்றி. 22

களவுப் படலம்

691. பூந்தா மரையும்பைங் காவியும் முல்லையும்
பூத்தகொக்கும்
தேந்தா துகுக்கும் அசோகமுந் தீங்கரும்
புந்தழுவிக்
காந்தா ரழற்குண வானே னுருக்கொடு
காம்பகையின்
சீந்தா எமைப்பொரு வான்சென்று பாசறை
நின்றனனே. 57

---

691. சீந்தா—சிந்தி, கோபித்து. இப்பாட்டு, காட்சியைக் கூறுகிறது.

692. பகுதியி னண்ட முடிவிற் சுடர்பர
லோகங் கொல்லோ
தகுதியின் வாழுமை மாதுலகோ நந்தணி யுலகோ
விகுதியில் லாச்சுத்த மாயா புவனத்தொன்
ஞேவிரையப்
புகுதியென் றுள்ளந் துரப்பதின் றீங்கொளிர்
பூங்கொடிக்கே. 58

693. தடையா திருப்பின் நமதா ருயிர்நனி சாடுமெனப்
படையாள் மதர்விழி பல்காற் றடுப்பன
போலிமைகள்
புடையா டுவவடி தோய்தலிற் பூமகள் போக்கரும்பே
றுடையா ளெனவைகு மாதலிற், பூதலத்
தோரணங்கே. 59

694. அங்கலுழ் மேனிநல் லாள்விழி போறல்
நமக்கணியாம்
பங்கயன் மாலும் பரவுந் தணிகைப்பைம்
பூஞ்சுனையில்
செங்கழு நீர்க்கு மரிதுசெவ் வேற்கும் அரிதவடன்
பொங்கிளஞ் சாயல் நிகர்த்தல் பொறிமயிற்
கும்மரிதே. 60

695. காந்தளம் போது கமழுமெம் மூர்வரைக்
கர்வியிற்றேன்
மாந்தளி பாய்ந்துறும் மூர்வரைச் சோலை
மதுநுகரும்
தேந்தளி தூவுஞ்சில் லோதிநல் லாய்சென்று
மீட்சிசெவி
போந்தளி வாட்கண் மறிவது நீட்டிக்கும்
பூங்குழலே. 79

---

692. இஃது ஐயம்.
693. இது துணிவு.
694. இது வியப்பு.
695. இடம் அணித்தென்றல்.

### நாரதனருள்பெறு படலம்

696. தடவரை மணியொளிர் தணிகையங் கிரியினை
கடவுளர் சிறைதபு கருணையங் கடலினை
கடவுளர் சிறைதபு கருணையை யாதலின்
இடர்தப எளியமும் இணையடி பரவுதும். 27

697. மகளிர்க ளிருவரின் விதிதரும் எழிலினை
துகளறு துறவியர் துறவியென் றிலகினை
துகளறு துறவியர் துறவியை யாதலின்
இகலற எளியமும் இணையடி பரவுதும். 28

698. அரியயன் அமரரும் அடிதொழும் அமரனை
எரிசடை யிறைபணி யிறைமையில் நிலவினை
எரிசடை யிறைபணி யிறைமையை யாதலின்
உரைபெற எளியமும் உனகழல் பரவுதும். 29

699. மறையோ லிடுந்தணிகை வள்ளல் அருளுருவம்
வாழிவாழி
பிறையேர் நுதல்முகத்துப் பேரமைத்தோள்
மாதரார் வாழிவாழி
பேரமைத் தோள்மாதர்ப் பிணைந்துலவும்
பேரருட்கண்
வாரமி லேன்மாட்டும் வழங்கு மவன்கருணை
வாழிவாழி. 73

---

696-8. விண்ணவர் தணிகையெம்பெருமானைப் பரவியவாறு கூறுவன.

699. நாரதமுனிவன் பரவியவாறு கூறுவது.
வாரம்—அன்பு.

700. பூமேவு நான்முகத்தோன் முதற்றொழிலும்
மணிமார்பன் புரப்புந் தெய்வத்
தேமேவு நறுங்கடுக்கை யரன்பணியும்
ஈசரவர் செயலுந் தூயோர்
நாமேவு செழுமறையா கமமனைத்தும்
நவின்றவர்நல் லருளு மெல்லாம்
தாமேயென் றவரவராய்ப் புரிந்தருளும்
ஒருமுதல்வன் சரணஞ் சார்வாம். 80

---

700. கடுக்கை—கொன்றை. இப்பாட்டு, நூலினிறுதியில் வாழ்த்தாய் அமைந்தது.

சம்பந்த சரணலயர்

இயற்றிய

# கந்தபுராணச் சுருக்கம்

## பானுகோபன் யுத்தம்*

701. எழுந்து மாயைதனை முன்ன முன்னணுகி
யேது வேண்டுமென ஓதலும்
இழிந்த வன்புதல்வன் முன்ன மென்னெடம்
ரெய்தி வென்றவனை யின்றுநான்
அழிந்தி டும்பரிசு வெல்ல ஓர்படை யளித்தி
யென்றிடலும் ஆர்வமே
பொழுந்த மாயையொடு மாய வெம்படை
கொடுத்து விண்ணினிடை போயினள். 1

702. அன்ன வஞ்சனது பின்னர் பின்னுள அடர்ப
டைக்குல மெடுத்துநீள்
மின்னு தேரணுகி யைம்ப தாயிரமென் வெள்ள
மானபடை சூழவே
மன்னு மப்பதி மதிற்பு றத்தணுகி மாவின்
மாமுகமோ ராயிரந்
துன்னு தூதன்வத னந்தெரிந் தினைய வாசகங்
கடிது சொல்லுவான். 2

---

*சூரபதுமனுடைய மகன் பானுகோபன் முருகக்கடவுளுடைய தம்பி வீரவாகுவோடு போர்புரிந்த வரலாறு கூறுவது.

701. பானுகோபன் மாயையைக் கருதவும், அவன் முன்னே தோற்றினன் என்க. இழிந்தவன்—சூரன். வென்றவன்—வீரவாகு.

703. வீர வாகுவெதிர் சென்றி யானிவண் விரைந்த
டைந்தது விளம்பியே
போரி யற்றவுவன் வந்திடும்படி புகன்று
மீள்கென அகன்றுபோய்ச்
சீரு லாவிவளர் பாச றைப்பதி செறிந்து வீரனை
யறிந்துகண்
டீர மற்றிடு மனத்து வெய்யவன் இசைத்த வாசகம்
இசைத்தனன். 3

704. இயம்பு போதுக திரைத்தளைந்தவனை யின்று
கொல்லவரு வேனெனாப்
பயம்பொ ருந்துவங்க தூத னேடியை பகர்ந்து
விட்டிளைய ரோடுநீள்
வயம்பொ ருந்துகும ரேசன் முன்பணுகி வந்தனைத்
தொழில்புரிந்துபின்
நயம்பொ ருந்துவிடை கொண்டு சென்றுகவி
னண்ணு தேரின்மிசை நண்ணினான். 4

705. கொன்னு றுந்தனது சேனை யோடணிகொள்
கோதில் பாசறை யகன்றுபோய்ப்
பன்ன ரும்புகழ்கொள் தெவ்வ னின்றிடு பறந்த
லைக்கள மடைந்திட
இன்ன லற்றமிகு பூதர் தானவ ரெதிர்ந்து
வெஞ்சம ரியற்றினார்
மன்னு பூதரொடு வெய்ய தானவர்கள் வல்லை
சிற்சிலர் மடிந்தனர். 5

---

704. கதிரைத்தளைந்தவன்—பானுவைக் கோபித்தவன்.
705. கொன்—பெருமை. வல்லை—விரைவில்.

706. தானவத்தலைவ ராரும் வீரமுறு சார தத்தலைவர்
யாவரும்
ஈன மற்றிடும் இலக்க ரெண்மரும் எதிர்ந்து
வெஞ்சம ரியற்றவே
யூன முற்றவ ரிறக்க எற்பகைவன் உந்து
தேரினொடு வந்திட
மான முற்றதிறன் மொய்ம்ப னுங்கடிது வந்து
தேரினொ டெதிர்ந்தனன். 6

707. அற்ற வேலைதனி லுற்ற வில்லினை வளைத்தி
லங்குபிறை யாசுகம்
வெற்றி மேகமென நாகர் தெவ்வன்விட வீறு
கொண்டதொரு வில்லினை
மற்று நேரில்குமா ரன்ப தத்தினை வணங்கு வீரனும்
வணங்கியே
துற்றி டும்பிறை நெடுஞ்ச ரம்பல தொடுத்து
நேருற விடுத்தனன். 7

708. காரி லேகுவன விண்ணி லேகுவன கஞ்ச னோடரி
கலந்துவாழ்
ஊரி லேகுவன பாரி லேகுவன உந்து சீகரமு
லாவுமுந்
நீரி லேகுவன வெற்பி லேகுவன நீள்வு கொண்டபுக
ழுண்டமுன்
சீரி லேகுவன தூய வன்றனொடு தீய வன்றனது
செய்பதோ. 8

---

706. தானவத் தலைவர்—அவுணத்தலைவர்கள். சாரதத்தலைவர்—பூதத்தலைவர்கள். இலக்கரெண்மர்—நூறாயிரத்தெட்டு வீரர். எற்பகைவன்—பானுகோபன். மொய்ம்பன்—வீரவாகு.

707. ஆசுகம்—அம்பு.

708. கஞ்சன்—பிரமன். சீகரம்—திவலை. முந்நீர்—கடல்.

709. சைய மொத்தவவர் வைய மிந்தவகை சாரி வட்டம
துலாவலும்
வெய்ய னுயிரம் நெடுஞ்ச ரஞ்சிதறி வீரன்
மார்பிடை யழுத்திடத்
துய்ய னுயிர மெனும்பெ ருங்கணைகள் தூவி
வென்றியுறு சூர்மகன்
செய்ய தேரதனை நூற வேறுமொரு தேரின்
மீமிசை செறிந்தனன். 9

710. செறிந்து வில்லினை வளைக்கு முன்னருமை செம்ம
லுக்கிளைய சேவகன்
முறிந்தி டாதகணை யாயி ரங்கொடவன் மொய்ம்பு
ரந்துளை படுத்தலும்
பிறிந்தி டாதவிற லும்பர் வேல்கொடு பெருந்தி
றற்புனை திருந்தலன்
மறிந்தி டும்பரிசு வெல்வ னென்றவுணன் வாரு
ணப்படை விடுத்தனன். 10

711. மேயு மப்படையை வீர னங்கிபடை விட்ட
ழித்திடலும் ஒட்டலன்
வாயு வின்படை விடுப்ப மொய்ம்பனொரு மாசு
ணப்படை விடுப்பவே
போயு ரத்துவரு வாயு வின்படையை யுண்டு
வஞ்சனெதிர் போதலும்
மாய னூர்திபடை தீய னுந்தவெதிர் வந்த
வெம்படை முறிந்ததே. 11

---

709. சையம்—மலை. வையம்—தேர். நூற—அழிக்கவும்.
710. மொய்ம்புரம்—தோளையும் மார்பையும்.
வாருணப்படை—வருண அம்பு.
711. மாயன் ஊர்தி—திருமாலின் வாகனமாகிய கருடன்.
கருட அம்பினைப் பானுகோபன் செலுத்த, எதிரேவந்த நாகப் படை முறிந்தது என்க.

712. உந்து நந்திபடை பின்பு மொய்ம்பன்விட ஊதை
போலது விரைந்துபோய்
வந்த காருட நெடும்ப டைத்திறலை வல்லை
சிந்துதலும் வஞ்சகன்
அந்த கன்படை விடுப்ப அங்கதையும் அட்ட
தொட்டல னயன்படை
வெந்தி றற்கொள விடுப்ப நந்திபடை முன்பு
வந்தது விளிந்ததே. 12

713. மிக்க எற்பகைவன் மாய வன்படை விடுப்ப
நந்திபடை முன்புவந்
தக்க ணம்பொர லும் ஆடல் மொய்ம்புடைய
அண்ண லங்கது தெரிந்துபின்
தக்கன் வேள்வியை யழித்த வன்படை விடுப்ப
மால்படை தகர்ந்திட
நக்க ஞர்படை யெடுத்து வெந்தகுவன் நண்ணலார்
வெருவ விட்டனன். 13

714. முரண்ட ரும்புயனும் நம்பன் வெம்படையை
மொய்ம்பி ஞேடுவிட அங்கெதிர்ந்
திரண்டு வெம்படையு நீள்பெ ருஞ்சமர் இயற்றி
விட்டவரை யெய்தவே
திரண்ட கந்திணை புரைந்த தோளுடைய தீய
சூரனரு டீயவன்
அரண்ட ருந்தனது மாயை யாலிலகும் அம்ப
ரத்திடை யொளித்தனன். 14

---

712. அந்தகன் படை—எமன் படை.
713. நக்கனர்.
714. கந்திணை—கட்டுத்தறி இரண்டு. புரைந்த—நிகர்த்த.
அம்பரம்—வான்.

715. ஆய போதுகதி ரோன்மறைந்தனன் அருந்தி
றற்குலவு தானவன்
மாயை தன்படை விடுப்ப வள்ளல்முத லான
சேனையை வளைந்துமால்
ஏய வேகடிது கட்டி யேகியினி தாய நீர்க்கடலி
லிட்டிடத்
தீய ரிற்பெரிய தீய னங்கது தெரிந்து நெஞ்சக
மகிழ்ந்தனன். 15

716. மகிழ்ந்து தாதையுறு கோயி னண்ணியவன் வண்ண
வொண்கழல் வணங்கியே
நிகழ்ந்த வாறுதனை யோத அன்னவ னிறைந்த
ஆர்வம துறைந்திடப்
புகழ்ந்து மைந்தனை யவன்ற னுதுமனை புக்கிருந்திட
விடுத்தனன்
இகழ்ந்தி டாநெறிகொ ளூர தன்குமர வேண்மு
னுற்றிவை யிசைத்தனன். 16

717. அற்ற வேலைதனில் ஆறு மாமுகன் அடற்கொள்
வேல்விட அளக்கர்வாய்
வெற்றி வேல்கடிதி லுற்று மாயையை விலக்கி
யேகஅடல் வீரனுந்
துற்ற யாவரு மெழுந்து வந்தணிகொள் சூர
னூரையெதிர் கண்டபின்
கொற்ற மேவுகும ரேச னுக்கிளைய காளை
யின்னமொழி கூறுவான். 17

718. கரந்து மாயைகொடு வென்று சென்றதொரு கள்வ
னைத்தலை யறுத்தலால்
உரந்த ருங்குமர வேண்மு னேகில னுரைத்த
ஈதுமுடி யாதென்னில்
இருந்தி டேனெனது வில்லு நானுமெரி யெய்து
வேனென இயம்பியே
விரிந்த சேனையொடு சூர னூரரண மேலை
வாசலிடை மேவினன். 18

---

715. வள்ளல்—வீரவாகு. மால் ஏய—மயக்கம் பொருந்தும்படி.

719. அங்கி ருந்தபுலி மாமுகன்பொரு தழிந்தி
டக்கனலின் வாயுவின்
துங்க வெம்படை செலுத்தி வாணகர் தொலைப்ப
உம்பரை யலைப்பவன்
மங்கு லேழையும் விடுப்ப அங்கவைகள் வந்து
மாமழை சொரிந்துநீள்
வெங்க னற்றனை யழிப்ப அன்னசெயல் வீர
வாகுவெதிர் கண்டனன். 19

**வாழ்த்து**

720. துய்யதா மறைக ளாலுந் துதித்திட அரிய தான
செய்யவேள் அடிகள் வாழ்க சேவலும் மயிலும்
வாழ்க
வெய்யசூர் மார்பு கீண்ட வேற்படை வாழ்க
அன்னான்
பொய்யில்சீர் அடியார் வாழ்க வாழ்கவிப் புவன
மெல்லாம். (தக்ஷகாண்ட்ம் 229)

---

719. மங்குல்—மேகம்.

கோனேரியப்ப நாவலர்

இயற்றிய

# உபதேச காண்டம்

## வாழ்த்து

721. திங்க ளஞ்சடை யெம்பிரான் றிருவருள் பெருக
பொங்கு திங்கண்மும் மாரியும் பொழிகபூ தலத்தில்
எங்கள் நாயகன் திருக்குழாத் தொண்டரீ டேற
தங்கு நான்மறைச் சைவநூ லோங்கறந் தழைக.
(பாயிரம் 1)

## விபூதிமான்மிய சருக்கம்

722. நீறு ளப்பட நினைப்பினும் நீறுமெய்ஞ் ஞானத்
தூறு சிந்தையிற் றரிப்பினும் அன்னவர்க் கொருங்கே
ஏறும் நல்வினை யாவையுந் தீவினை யிலவாங்
கூற ருந்திரு நீறுநாற் பொருளையுங் கொடுக்கும். 8

723. திருவெண் நீற்றினை வரன்முறை செங்கையின் ஏந்தி
உருகும் அன்பினிற் புனல்தெளித் தொருமையிற் குழைத்து
மருவு புண்டர மாயினும் வண்டுக ளெனினும்
பெருகு காதலிற் புனைந்துளோர் கயிலைபெற் றுடையோர். 13

724. உச்சி நெற்றிமூக் குரங்களும் உபயகை யுறுப்பா
றிச்சு வற்புறம் இருவிலா இடைப்புறம் என்னப்
பச்சி ளம்பிறை யணிந்தவற் பணிந்துமூ வைந்தா
விச்சை மேலவர் நீற்றொளி விளங்கிடத் தரிப்பார். 14

---

723. புண்டரமாயினும் வண்துகளாயினும்—திரிபுண்டரமாக வாவது உத்தூளனமாகவாவது.

724. திருநீறு அணியப்படும் பதினைந்து இடங்களையும் கூறுகிறது. சுவல்புறம்—முதுகுபக்கம்.

725. மந்தி ரத்தொடு தரிப்பினும் மந்திர முணரார்
தந்தி ரத்தொடு தரிப்பினும் ஈங்கவர் தம்மை
முந்தை மூவரென் றேத்தலா மென்பது முறையாற்
புந்தி தந்துகா பாலிதே ருபநிடம் புகலும். 15

726. பூதி பூசினும் பூதியின் தன்மைகேட் குறினும்
யாது பாதகம் இயற்றினும் பாதவம் எனினுந்
தீது றுந்துயர் தொலேவன ஆதலிற் சிறந்த
ஆதி நீற்றின துண்மையை யாவர்பெற் றறிவார்.
208

### உருத்திராக்க மான்மிய சருக்கம்

727. இதனை யன்பொடு தரிக்கினும் அன்பில ராகி
அதனி லோர்மணி தரிக்கினும் ஆடலஞ் சிலைக்கை
மதனை வென்றருளெம்பிரான் கண்ணென வரலாற்
பதம னைத்தையும் உதவுமத் தனிமுதற் பரமன். 3

728. மணிக ளாயிரந் தரித்தரற் பணிகுவா னவனே
பணிகொள் செஞ்சடைப் பரமனென் றேத்திடப் படுமால்
அணிபு யத்துமுப் பானிரண் டணிமணி கரத்தில்
இணையில் மாமணித் தொகையறு நான்கெனத் தரிப்பார். 4

---

725. தந்திரத்தொடு—ஆகம முறைப்படி. கா்பாலிதேர் உப-நிடம்—உருத்திரர் ஆராய்ந்தருளிய உருத்திரோப-நிடதம்.

726. பாதவம்—மரங்கள்.

727. சிலை—கரும்பாகிய வில்.

728. புயத்தில் முப்பத்திரண்டு மணிகளும், கையில் இருபத்து நான்கும் அணியப்படும் என்பது.

729. உச்சி யொன்றிரு காதினிற் பன்னிரண் டுவந்த
அச்சி ரத்தினில் நாற்ப தெண் ணுன்கணி களத்துச்
செச்சை மார்பினூற் றெட்டெனச் சிறந்தணி பவரே
பச்சி ளம்பிடி யிடத்தனென் றேத்துறப் பணிவார். 5

730. தழைதி லாமணி பவளமொன் றின்னன தயங்க
விழைப டத்தொடுத் தணியினும் இடையிடை படிகம்
புழைப டுத்தன தொடுத்தன புனையினும் ஒளிருங்
குழைப சும்பொனிற் புனையினுங் குலக்கதி பெறுவார். 6

731. தெய்வ மாமணி கரந்தரித் தொருமனுச் செபித்தால்
ஐய மில்லுரு ஒன்றொரு கோடியாம் அன்றிப்
பொய்யில் மாமணி முடிபொறுத் தீர்ம்புனல் குளிப்பின்
துய்ய கங்கைநீர் துளைந்ததா மெனமறை சொல்லும். 7

732. இன்ன மாமணி மஞ்சனம் புரிந்திடா திரங்க
மன்னு மாகம விதிமுறை பூசனை வகுப்பார்
பன்ன கக்குழைப் பரமனை வழிபடும் பதவி
நன்ன லம்பெறப் பெறுகுவர் கயிலையை நணுகி. 8

733. ஒருமு கத்தது முகங்களந் துடையது கருணைத்
திருமு கங்கள்பன் னொன்றுள தருளொடுஞ் சிறந்து
வருமு கங்களீரேழுள தனையமா மணிகள்
கருதி யர்ச்சனை புரிந்தவர் பெருவளங் கலப்பார். 9

---

729. உச்சியில் ஒன்று, இரண்டு காதுகளிலும் பன்னிரண்டு தலையில் நாற்பது, கழுத்தில் முப்பத்திரண்டு, மார்பில் நூற்றெட்டு மணிகள் அணியப்படும் என்பது.
செச்சை மார்பு—திருநீறுபூசிய மார்பு; சந்தனக்குழம்பு பூசியதுமாம்.

733. பன்னகக் குழைப் பரமன்—பாம்பாகிய காதணியை யுடையவன்.

734\. எந்தை யெம்பிரான் அருளையிவ் வெழுத்தெனப்
பிரித்துத்
தந்த மந்திரம் ஐந்தெழுத் தாமெனத் தகுமால்
அந்த மந்திரத் தளவையைச் சற்குரு அறிந்து
சிந்தை தேறுறத் தெளிப்பதங் கதனிலை தெரிக்கில், 2

735\. இனைய மந்திரத் தியல்புணர்ந் தோர்பொழு
திசைப்போர்
அனையர் தம்முழைப் புண்ணியம் யாவையும்
அடங்கும்
வினையும் நீங்குவர் மேதினி புரந்தினி தளிப்பார்
புனையு மேற்பதம் புகுவர்முத் தேவரிற் பொலிவார். 3

736\. புலரிக் காலையும் உச்சியு மாலையும் புனிதன்
பலரிக் கிண்கிணிப் பாததா மரைமுறை பரவி
மலரிப் புந்தியிம் மந்திரம் நினைபவர் மனஞ்சூழ்
அலரிக் குஞ்சகத் தவரையே சிவவடி வாக்கும். 4

737\. அஞ்செ ழுத்தெனும் அருமறை மந்திரம் அதனை
நெஞ்ச ழுத்தவர் முழுமுதற் றேவனை நிகர்ப்பார்
பஞ்ச பாதகர் மீதுமற் றவர்நிழற் படினுஞ்
செஞ்செ வேயவர் காண்கினும் பவந்தொலை
செல்லும். 5

---

733\. முகங்கள் ஐந்துடையது எனப்பிரிக்க.

736\. அலரிக்கும்—மலர்விக்கும். சகத்து—இவ்வுலகில்தானே.

### சிவநாமமான்மிய சருக்கம்

738. புரங்கண் மூன்றும் அடுவெடவைக் கொடுந்தீ மாட்டும்
புன்னகையோன்
சிரங்க ளோரைந் துடையபிரான் றிருநா
மத்தின் ஒருநாமம்
இரங்கி யொருகால் உரைத்தாலும் இவனே
யவனென் றெணலன்றி
அரங்கி மனஞ்சூ ழஞ்ஞானத் திகழ்வார்
அளறு புகுவாரே. 2

### திருமால் சிவார்ச்சனைச் சருக்கம்

739. எந்தாய் போற்றி எமைப்புரக்கும் இறைவா
போற்றி எவ்வுலகுந்
தந்தாய் போற்றி என்பசைக்குந் தாராய்
போற்றி தமியனெதிர்
வந்தாய் போற்றி யுயிர்க்குயிராய் வருவாய்
போற்றி தொண்டருளச்
சிந்தா குலந்தீர்த் தருள்புரியுஞ் சிவனே
போற்றி போற்றியவே. 18

---

738. மனஞ்சூழ் அஞ்ஞானத்து அரங்கி இகழ்வார்—மனத்திற் படிந்த அறியாமையில் அழுந்தி இகழ்கின்றவர்கள்.

739. காஞ்சியில், திருமால் சிவனை ஆயிரம் பூக்கொண்டு அருச்சிப்பாராக, ஒருநாள் மலரொன்று குறைய, அதற்கீடாகத் தமது கண்ணையே திருமால் சாத்த, இறைவன் மகிழ்ந்து காட்சியளிக்க, அவரும் உவந்து இங்ஙனம் பாடுகிறார்.

740. என்னப் போற்றி முடிபடிதொட் டிழுகப்
பணிந்தான் எழநோக்கி
மின்னுச் சடையோன் திருவருள்கூர்ந்
துருகா நின்றான் விழுக்கமலக்
கன்னிக் கிறைவன் கருத்துணர்ந்து கதிரா
யிரம்போன் றொளிபரப்பும்
பொன்னந் திகிரி புரிந்து பின்னும் எதுவேண்
டியது புகலென்றான். 19

அரிபிரமாதியர் பூசனைச் சருக்கம்

741. ஆதியாய் அந்தத்தின் அந்தமாய் நின்றோற்குப்
பாதியாய் ஒன்றாய்ப் பலவாகிப் பல்லுயிராய்ப்
பேதியா நின்றாய் பெருமாட்டி நின்பெருமை
சோதியா நின்றார்க் கெளிதன்றே துல்லபமே. 14

742. தோன்று சராசரங்கள் எல்லாந் தொடர்விடா
தேன்ற சிவமயமும் நின்னன்றி யில்லையால்
ஆன்ற விருப்பின் அருந்துவன இன்றாமேல்
ஊன்று சுவையுளவோ நந்தா வொளிவிளக்கே. 15

743. முச்செயலுங் காட்டி அவைபுரக்கு மூவரைத்தன்
இச்சையிற் காட்டி அவருளத்தும் எட்டாயாற்
பச்சை யிளங்குதலைக் கிள்ளாய் பரையேநின்
விச்சையிவை யென்றால் விடுத்துணர வல்லாரார். 16

744. பேதாதி பேதம் பிறந்த உயிர்த்தொகைக்கோர்
ஆதார மாகி அளவை அறிந்தளித்தாய்
ஓதா மறைநூல் உபநிடதத் துள்மயமாம்
பாதார விந்தம் பெறப்பெற்றேன் பாதகனே. 17

---

740. விழுக்கமலக் கன்னி—இலக்குமி.

741-4. மகிடாசுரன் தேவியருள் பெற்றபின், துர்க்கையைப் பரவியவாறு. துல்லபம்—அருமை.

744. உள்மயம்—உட்பொருள்.

745. என்னப் பலவா றெடுத்தேத்தி நின்றிரந்து
பன்னிப் பரசுதலும் நன்கருணை பாலித்தாள்
பொன்னனைத் திலங்கு சடையோற் புகழ்கணத்து
மன்னிப் புகப்பணித்தாள் தென்கயிலை மன்னினுள். 18

### சிவகாட்சிப் பேற்றுச் சருக்கம்*

746. அரியயற் கெட்டாய் போற்றி ஆனந்த நிருத்தா போற்றி
கரியமா ணிக்க மன்ன கறைமிடற் றிறைவா போற்றி
புரிதகு முகுள மூரற் பொங்கொளி நிலவு காட்டித்
திரிபுரம் எரித்தாய் போற்றி சிவசிவ போற்றி போற்றி. 64

747. ஒருதனித் தலைவா போற்றி உயிர்க்குயி ரானாய் போற்றி
கருணையங் கடலே போற்றி கனங்குழை யிடத்தாய் போற்றி
பொருசிலை வேனிற் காளை பொங்கழற் கொளுந்தி வீழத்
திருநுதல் திறந்தாய் போற்றி சிவசிவ போற்றி போற்றி. 67

748. தருமதற் பரமே போற்றி தவம்புரி தவமே போற்றி
கருணைவா ருதியே போற்றி கட்புலத் தரியாய் போற்றி
ஒருதனிக் கயிலை கீண்டோன் புயநிரை ஒடிய ஒற்றைத்
திருவிரல் உறுத்தாய் போற்றி சிவசிவ போற்றி போற்றி. 69

---

*நைமிசாரணிய முனிவர்களும் சூதமுனிவரும் சிவகாட்சி பெற்றமை கூறுவது.

746. முகுளம்—அரும்பு.

747. கனங்குழை—கனவிய குழையையுடைய உமை. காளை வீழத் திறந்தாய் போற்றி என்க.

748. கீண்டோன்—இராவணன்.

749. எந்தையே போற்றி போற்றி இறைவனே போற்றி போற்றி
தந்தையே போற்றி போற்றி தருமமே போற்றி போற்றி
முந்தையோய் போற்றி போற்றி முக்கணெம் பெருமா போற்றி
செந்தழற் கொழுந்தே போற்றி சிவசிவ போற்றி போற்றி.

750. ஐயனே போற்றி போற்றி அமலனே போற்றி போற்றி
மெய்யனே போற்றி போற்றி விமலனே போற்றி போற்றி
பையரா அணியாய் போற்றி பவளமால் வரையே போற்றி
செய்யனே போற்றி போற்றி சிவசிவ போற்றி போற்றி.

---

750. இவ்விதம் நைமிசாரணிய முனிவரும் சூதமுனிவரும் சிவ பெருமானைப்போற்றினர்கள் என்க.

# பிழை திருத்தம்

---

| பக்கம் | செய்யுள் எண் | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 2 | 4 | தானுக்கன்பர் | தரனுக்கன்பர் |
| 4 | 11 | 11—14 | 11—41 |
| 8 | 24 | மருகில் | மறுகில் |
| 13 | 40 | ஈர | ஈர் |
| 18 | 60 | நீங்கும் | நீக்கும் |
| 23 | 81 | அடியேன் | அடியனேன் |
| ,, | 84 | நிரை | நிறை |
| 24 | 87 | மணிபுவனம் | பணிபுவனம் |
| ,, | 89 | அறியும் | அரியும் |
| ,, | 91 | காண | கரண |
| 29 | 111 | பாரை | பாறை |
| ,, | 112 | பன்னின் | பண்ணின் |
| 30 | 115 | காரணமாகும் | காரணராகும் |
| 33 | 133 | அவையிற் | அவைபிற் |
| ,, | ,, | பரிவுற்றிட | பறிவுற்றிட |
| 36 | 143 | அடிமை | (படிமை) |
| 40 | 162 | நின்னை | உன்னை |
| 43 | 174 | பெருமான் | பெருமாள் |
| 44 | 179 | 41 | 14 |
| 45 | 189 | துறைபெரு | துறைபெறு |
| 49 | 201 | 1024 | 1022 |
| ,, | 204 | மதி | மதில் |
| 50 | 210 | மூழுசுடர் | முழுச்சுடர் |
| 54 | 224 | மலர்க்கொண்டு | மலர்கொண்டு |
| 58 | 243 | உவர்ந்த | உலர்ந்த |

| பக்கம் | செய்யுள் எண் | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 59 | 245, 7 | | 245, 1 |
| 63 | 263 | 26 | 62 |
| 129 | 525 | செல்வி | செவ்வி |
| 153 | 606 | யவர் | யவா |
| 154 | 608 | நொந்திடா | நொந்திடவான் |
| ,, | 609 | சிர்தனே | சிந்தனே |
| ,, | 610 | விமலா | அமலா விமலா |
| 156 | 620 | சாந்தார் | சந்தார் |
| 157 | 624 | நங்களு | நந்தமு |
| 163 | அடிக்குறிப்பு | இருளே | இகுளே |
| 170 | 668 | சம்புவி நீ | சம்புவி னீ |
| 180 | 704 | ஞேடியை | ஞேடிவை |
| 181 | 708 | செய்யதோ | செய்யதேர் |